# தொல்காப்பியம்

## உரைவளம்

# பொருளதிகாரம்

## புறத்திணையியல் பகுதி-2


பதிப்பாசிரியர்

ஆ. சிவலிங்கனார்



INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# தொல்காப்பியம்-
# பொருளதிகாரம்

(உரைவளம்)

## புறத்திணையியல்

பகுதி-2


பதிப்பாசிரியர்

ஆ. சிவலிங்கனார்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

டி. டி. டி. ஐ. அஞ்சல், தரமணி, சென்னை-600 113.

தொல்காப்பியம்—உரைவளம்—வெளியீட்டுத் திட்டம்
வெளியீடு-26

# Bibliographical Data

| | | |
|---|---|---|
| Title | : | Tolkappiyam—Purattinaiylyal Part-II |
| Editor | : | A. SIVALINGANAR |
| Publisher & Copy right | : | International Institute of Tamil Studies, CIT Campus, Taramani, Madras-600 113. |
| Publication No. | : | 243 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | August 1996 |
| Edition | : | First |
| Paper Used | : | Tamil Nadu Creamwove (m) 16 kg |
| Size of book | : | 21 × 14 cms |
| Printing types used | : | 10 point |
| No. of Copies | : | 1200 |
| No. of Pages | : | XII + 316 |
| Price | : | Rs. 65/- |
| Printers | : | Chitra Printography, Madras-600 014. |
| Subject | : | Compilation of the Commentaries on Tolkappiyam Purattinaiyiyal. |

# அணிந்துரை

''கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே
வாளொடு முன்தோன்றிய மூத்த குடி''

என்பது தமிழ் இனத்தாரின் தொன்மை குறித்த சிந்தனை. இத் தொன்மை இனம், சிறப்புமிக்க இனமாகவும் திகழ்ந்தது என்பதற் குப் பெருஞ்சான்றாகத் திகழ்வது தொல்காப்பியம். எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டுமே பிறமொழிகள் இலக்கணம் கண்டிருக்க, அவற்றோடு வாழ்க்கைக்கும் இலக்கணம் கண்டது தொல்காப்பியம் ஒன்றேயாகும். இங்கு அக வாழ்வுக்கும், புற வாழ்வுக்கும் உள்ள ஒழுகலாறுகளைப் பொருளியலில் வரை யறுத்து, அதற்கொப்பவே இலக்கியங்கள் படைக்கப்பட வேண்டு மென பொருண்மை அடிப்படையில் பிரித்து எல்லை வகுத்து இலக்கணம் எழுதப்பட்டுள்ளது.

இன்று நமக்குக் கிட்டக்கூடிய தொல்பழங்கால இலக் கண நூலாகத் திகழ்வது தொல்காப்பியம் மட்டுமே. தமிழின் பெருமையினை உலகெலாம் பறை சாற்றும் வகையில் திகழும் இந்நூலின் சிறப்பைத் தெற்றெனப் புலப்படுத்தும் வகையில் பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்களைக் கொண்டு தொல்காப்பியம் உரைவளம் திட்டப் பணியை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மேற்கொண்டது. சிறப்புப் பாயிர உரை விளக்கத்துடன் எழுத்ததிகாரத்திற்கும், சொல்லதிகாரத்திற்கும் அவர் எழுதிய விளக்க உரைகள் ஏற்கெனவே வெளிவந்துள்ளன.

பொருளதிகாரத்தில், அகத்திணையியல் 1991இலும், கற்பியல் 1993இலும் பொருளியல் 1994இலும், களவியல் 1995இலும் வெளிவந்தன. இப்போது புறத்திணையில், பகுதி-1 பகுதி-2 என இரு பகுதிகளாக வெளிவருகின்றது. உரைவளத் திட்டத்தின் 26ஆவது வெளியீடு இது.

இந்நூலில் பேராசிரியர் ஆ. சிவலிங்கனார், பழம்பெரும் உரையாசிரியர்களான இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோரது உரைகளையும், சோம. இளவரசு அவர்களது உரையையும் தொகுத்து, அவற்றுடன் தம்முடைய உரையினையும் இணைத்துப் பதிப்பித்துள்ளமை, ஆய்வாளர்களுக்கும், கற்போருக்கும் தெளிவு தருவதாக உள்ளது. தொல்காப்பியத்தில் ஆய்வினை மேற்கொண்டு முனைவர் பட்டம் பெற்ற முனைவர் சி. இலக்குவனார் அவர்களின் ஆங்கில மொழி பெயர்ப்பையும் இணைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்து ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்களுக்கும், தமிழ் ஆட்சிமொழி—பண்பாட்டுத்துறை அமைச்சர் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி—பண்பாட்டுத்துறை செயலாளர் அவர்களுக்கும் நன்றி.

இந்நூலின் கையெழுத்துப் படியினைச் செம்மையான முறையில் மூல நூல்களோடு ஒப்பிட்டுப் பார்த்துத் திருத்தம் செய்த முனைவர் ந. அரணமுறுவல் அவர்களுக்கும், நூலின் முற்பகுதியில் சுருக்க விளக்கம், சூத்திர நுவல் பொருள், நூலின் பிற்பகுதியில் சூத்திர முதற்குறிப்பு, சொல்லகராதி ஆகியவற்றை இணைக்க உதவிய செல்வி ம. வெண்ணிலாவிற்கும், இந்நூலைக் கவினுற அச்சிட்டுத் தந்த சித்ரா அச்சகத்தாருக்கும் நன்றி.

**இயக்குநர்**

# சூத்திர நுவல் பொருள்

73. வாகைத் திணை, பாலைத்திணைக்குப் புறம் என்று கூறி அத்திணைக்குப் பொது இலக்கணம் கூறுகின்றது.

74. வாகைத்திணைக்குரிய ஏழு வகைச் சிறப்பிலக்கணங் களைக் கூறுகிறது.

75. வாகைத் திணைக்குத் துறை கூறுகின்றது.

76. காஞ்சித் திணை, பெருந்திணைக்குப் புறம் என்று கூறி அத்திணைக்குப் பொது இலக்கணம் கூறுகின்றது.

77. காஞ்சித் திணைக்குத் துறை கூறுகின்றது.

78. பாடாண் திணை, கைக்கிளைத் திணைக்குப் புறம் என்று கூறி, அது எட்டு வகைப்படும் என்று கூறுகிறது.

79. பாடாண் பகுதி எட்டனுள் இரண்டு பற்றிக் கூறுகிறது.

80. பாடாண் பகுதி எட்டனுள் மேலும் ஒன்றைப் பற்றிக் கூறுகின்றது.

81. பாடாண் பகுதி எட்டனுள் மேலும் இரண்டினைப் பற்றிக் கூறுகின்றது.

82. பாடாண் திணைப் பாடல் குழந்தையிடத்தும் உரிமை யுடையதாகும் என்று கூறுகின்றது.

83. பாடாண் திணையில் உலா வருதலும் சேரும் எனக் கூறுகின்றது.

84. பாடாண் பகுதியில் தலை மக்களின் இயற்பெயரைப் புலவர்கள் நெறியாக அமைத்தனர் என்று கூறு கின்றது.

85. கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றும் கடவுள் வாழ்த்துப் பகுதியோடு கருதவரும் என்று கூறு கின்றது.

86. கொற்றவள்ளையும் ஒரு வகையில் கடவுள் வாழ்த் தொடு கண்ணியவரும் என்று கூறுகின்றது.

87. பாடாண் பகுதியுள் எட்டாவது பகுதி பரவலும், புகழ்ச்சியும், முன்னோர் கூறிய குறிப்பும் பற்றி வருவனவாகும். அவற்றுள் இச்சூத்திரம் பரவுதல் பற்றிய துறைகளைக் கூறுகிறது.

88. பாடாண் பகுதியுள் எட்டாவது பகுதி பரவலும், புகழ்ச்சியும், முன்னோர் கூறிய குறிப்பும் பற்றி வருவனவாகும். அவற்றுள் இச்சூத்திரம் புகழ்தல் பற்றிய துறைகளைக் கூறுகிறது

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அக<br>அகம் | — | அகநானூறு |
| ஆ. மொ. | — | ஆங்கில மொழி பெயர்ப்பு |
| ஆ. மொ. இல. | — | ஆங்கில மொழிபெயர்ப்பு இலக்குவனார் |
| இ-ள். | — | இதன் பொருள் |
| இல. | — | இலக்குவனார் |
| உ-ம். | — | உதாரணம் |
| கலி. மருதம். | — | கலித்தொகை—மருதக்கலி |
| களவழி. | — | களவழி நாற்பது |
| குறள். | — | திருக்குறள் |
| குறள். அடக்க | — | திருக்குறள், அடக்கமுடைமை |
| குறள். அழுக்கா. | — | திருக்குறள் அழுக்காறாமை |
| குறள். இன்னா | — | திருக்குறள் இன்னா செய்யாமை |
| குறள். ஒழுக்க | — | திருக்குறள் ஒழுக்கமுடைமை |
| குறள். கொடுங். | — | திருக்குறள் கொடுங்கோன்மை |
| குறள். செங். | — | திருக்குறள் செங்கோன்மை |
| குறள். சொல்வன். | — | திருக்குறள் சொல்வன்மை |
| குறள். தீவினை | — | திருக்குறள் தீவினையச்சம் |
| குறள். நடுவு. | — | திருக்குறள் நடுவுநிலைமை |
| குறள். நீத். | — | திருக்குறள் நீத்தார் பெருமை |
| குறள். படைச். | — | திருக்குறள் படைச்செருக்கு |
| குறள். பிறனில். | — | திருக்குறள் பிறனில் விழையாமை |
| குறள். புறங். | — | திருக்குறள் புறங்கூறாமை |
| குறள். பொறை. | — | திருக்குறள் பொறையுடைமை |
| குறள். மெய்யு. | — | திருக்குறள் மெய்யுணர்தல் |
| குறள். வான். | — | திருக்குறள் வான்சிறப்பு |
| குறுந். | — | குறுந்தொகை |
| சிலப்பதி. | — | சிலப்பதிகாரம் |
| சிலப். கானல். | — | சிலப்பதிகாரம் கானல்வரி |

| | | |
|---|---|---|
| சிலப். மங்கல. | — | சிலப்பதிகாரம் மங்கல வாழ்த்துப் பாடல் |
| சிறுபாண். | — | சிறுபாணாற்றுப்படை |
| சிந்தாமணி. | — | சீவக சிந்தாமணி |
| சூ. / சூத். | — | சூத்திரம் |
| திருமுருகு. | — | திருமுருகாற்றுப்படை |
| தொ. | — | தொல்காப்பியம் |
| தொல். சூத்திரம். | — | தொல்காப்பியச் சூத்திரம் |
| தொல். செய்யுள். | — | தொல்காப்பியம் செய்யுளியல் |
| தொல். சொல். கிளவி. | — | தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம் |
| நாலடி. | — | நாலடியார் |
| நாலடி. இளமை | — | நாலடியார் இளமை நிலையாமை |
| நாலடி. குடி. | — | நாலடியார் குடிப்பிறப்பு |
| நாலடி. செல்வம். | — | நாலடியார் செல்வம் நிலையாமை |
| பதிற்று. / பதிற்றுப். | — | பதிற்றுப்பத்து |
| பதிற்று. செய். / பதிற்றுப்பத்து செய். | — | பதிற்றுப்பத்து செய்யுள் |
| பழமொழி. | — | பழமொழி நானூறு |
| பி. இ. நூ. | — | பிற்கால இலக்கண நூல்கள் |
| பு. பொ. வெ. மா. | — | புறப்பொருள் வெண்பா மாலை |
| பு. வெ. கா. / பு. வெ. காஞ்சி. | — | புறப்பொருள் வெண்பா மாலை, காஞ்சிப் படலம் |
| பு. வெ. பாடாண் | — | புறப்பொருள் வெண்பா மாலை, பாடாண் படலம் |
| புறம். | — | புறநானூறு |
| பெரும் பாண். | — | பெரும் பாணாற்றுப்படை |
| பொருந. / பொருநராறு. | — | பொருநராற்றுப்படை |
| மலைபடு. | — | மலைபடுகடாம் |
| முத்தொள். | — | முத்தொள்ளாயிரம் |
| முருகாற்றுப்படை. | — | திருமுருகாற்றுப்படை |
| யா. விரு. / யாப். விரு | — | யாப்பருங்கலம் விருத்தியுரை |

| | |
|---|---|
| வெண்பா. உழிஞை. | — புறப்பொருள் வெண்பா மாலை, உழிஞைப் படலம் |
| வெண்பா. காஞ்சி. | — புறப்பொருள் வெண்பா மாலை, காஞ்சிப் படலம் |
| வெண்பா. பாடாண். | — புறப்பொருள் வெண்பா மாலை, பாடாண் படலம் |
| வெண்பா. பெருந்திணை. | — புறப்பொருள் வெண்பா மாலை, பெருந்திணைப் படலம் |
| வெண்பா. வாகை. | — புறப்பொருள் வெண்பா மாலை, வாகைப் படலம் |
| வீர. | — வீரசோழியம் |
| நச். உரை மேற்கோள். | — நச்சினார்க்கினியர் உரை மேற்கோள் |

# தொல்காப்பியம் - பொருளதிகாரம்
# (உரைவளம்)

## புறத்திணையியல்

73. வாகை தானே பாலையது புறனே
தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப.

**ஆங்கில மொழிபெயர்பு : இலக்குவனார்**

**Vahai**

73. 'Vahai' is the 'puram' of 'palai'

74. It is said to be one which is to improve one's own avocation, with great distinction without being hindrance to others.

**பிற்கால இலக்கண நூல்கள் :**

இல. வி. புற. 14. தொல்-சூத்திரமே.

**இளம்பூரணர்**

73 வாகை தானே.........படுத்தல் என்ப.

(இ-ள்) வாகை பாலையது புறன்—வாகைத்திணை பாலை என்னும் அகத்திணையினது புறனாம்; தாவில் கொள்கை தத்தம் கூற்றைப் பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப—அது கேடில்லாத கோட்பாட்டினையுடைய தத்தமக்குள்ள இயல்பை வேறுபட மிகுதிப்படுத்தல் என்பர்.

அதற்கு இது புறனாயவாறு என்னையெனின், பாலையாவது தனக்கென ஒரு நிலமின்றி எல்லா நிலத்தினும் காலம் பற்றிப்

பிறப்பதுபோல, இதுவும் எல்லா நிலத்தினும் எல்லாக் குலத்தினும் காலம் பற்றி நிகழ்வதாதலினானும் ஒத்தார் இருவர் புணர்ச்சியினின்றும் புகழ்ச்சி காரணமாகப் பிரியுமாறுபோலத் தன்னோடு ஒத்தாரினின்றும் நீங்கிப் புகழ்படுதலானும் அதற்கிது புறனாயிற்று. அஃது ஆமாறு வருகின்ற சூத்திரங்களானும் விளங்கும்.

(15)

## நச்சினார்க்கினியர்

73. வாகை தானே.........புறனே.

இது வாகைத்திணை பாலையெனப்பட்ட அகத்திணைக்குப் புறனாமென்கின்றது.

இதன் பொருள்: வாகைதானே—இனிக் கூறாது நின்ற புறத்திணையுள் வாகையெனப்பட்டதுதானே, பாலையது புறனே—பாலையென்னும் அகத்திணைக்குப் புறனாம் என்றவாறு.

என்னை? பாலைக்குப் புணர்ச்சியின் நீங்கி இல்லற நிகழ்த்திப் புகழெய்துதற்குப் பிரியுமாறுபோலச் சுற்றத் தொடர்ச்சியின் நீங்கி அறப்போர் செய்து துறக்கம் பெறுங் கருத்தினாற் சேறலானும், வாளினுந் தாளினும் நிறையினும் பொறையினும் வென்றியெய்துவோரும் மனையோரை நீங்கிச் சேறலானும் பிரிவுளதாயிற்று.

பாலை தனக்கென ஓர்நிலமின்றி நால்வகை நிலத்தும் நிகழுமாறுபோல முற்கூறிய புறத்திணை நான்கும் இடமாக வாகைத் திணை நிகழ்தலிற் றனக்கு நிலமின்றாயிற்று. 'நாளு நாளு மாள்வினை யழுங்க—வில்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழ்'[1] என ஆள்வினைச் சிறப்புக் கூறிப் பிரியுமாறுபோல இதற்குத் துறக்கமே எய்தும் ஆள்வினைச் சிறப்புக் கூறலுங் கொள்க. பாலை பெருவரவிற்றாய்த் தொகைகளுள்[2] வருமாறுபோல வாகையும் பெருவரவிற்றாய் வருதலுங் கொள்க.

(18)

---

1. நாள்தோறும் முயற்சிகெட மனைக்கண் இருந்து காமமே பொருளாக எண்ணி மகிழ்வோர்க்குப் புகழ் வருதல் இல்லை.
2. எண்ணுத் தொகையொடு கூறப்படும் அகநானூறு, நற்றிணை நானூறு, குறுந்தொகை நானூறு முதலியன.

## நச்சினார்க்கினியர்

74. தாவில் கொள்கைத்........லெண்ப.

இஃது அவ் வாகைத்திணைக்குப் பொதுவிலக்கணங் கூறு கின்றது.

இதன் பொருள்: தாவில் கொள்கைத் தத்தங் கூற்றை—வலியும் வருத்தமுமின்றி இயல்பாகிய ஒழுக்கத்தானே நான்கு வருணத்தோரும் அறிவரும் தாபதர் முதலியோரும் தம்முடைய கூறுபாடுகளை, பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப—இருவகைப்பட மிகுதிப்படுத்தலென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

இருவகையாவன: தன்னைத்தானே மிகுதிப்படுத்தலும் பிறர்மீக்கூறுபடுத்தலுமாம்.[1] இனி இருவகைக்குள் உறழ்ச்சியாற் பெற்ற வென்றியை[2] வாகையெனவும், இயல்பாகப் பெற்ற வென்றியை முல்லையெனவும் கூறுவர். படுதலென்னாது படுத்த லெனப் பிறவினையாற் கூறினார், அவர் தம்மினுறழாத வழியும்[3] ஒருவன் அவரை உறழ்ந்து உயர்ந்தோன் இவனென்றுரைத்தலும் வாகையென்றற்கு; ஒன்றனோடு ஒப்பு ஒரீஇக் காணாது மாணிக் கத்தினை நன்றென்றாற்போல[4] உலக முழுதும் அறியும் உயர்ச்சி யுடைமையும் அது, தாவில் கொள்கையெனவே இரணியனைப் போல வலியானும் வருத்தத்தானுங் கூறுவித்துக் கோடல் வாகை யன்றாயிற்று.

(19)

---

1. பிறர்மீக்கூறுபடுத்தல்—பிறர் ஒருவனை ஒருவனோடு ஒப்பிட்டு அவனின் இவன் சிறந்தான் என மேம்படுத்தப் படுதல்.

2. ஒப்புமையால் மிக்கதான வென்றி. உறழ்ச்சி—ஒப்பிட்டு மேம்பாடு காணல்.

3. தம்மின் உறழாத வழி—தம்மொடு பிறரைத் தாமே உறழ்ந்து காணாத வழி.

4. மாணிக்கம் நன்று என்பது முத்து முதலியவற்றோடு ஒப்பிட்டு உறழ்ந்து பாராமலே எல்லாராலும் சிறந்ததாக அறியப்பட்டு வருதலின் உறழ்ந்து கூறியதாகவே கொள்ளப்படும்.

**சோம. இளவரசு**

**சூத்திரம் :- 18**

வாகை தானே......புறனே.

**கருத்து :-** இது, வாகைத்திணை பாலை என்னுமகத் திணைக்குப் புறனாமென வுணர்த்துகிறது.

பொருள் :- வெளிப்படை.

குறிப்பு :- ஏகாரம், முன்னது பிரிநிலை; ஈற்றது அசை.

பாலை அறக்காதலை வளர்த்து மீட்டும் இன்பத்தை மிகுப்பது போல, வாகை மறக்காதலை வளர்த்து வெற்றியின்பம் விளைப்பதாலும், பாலைபோல வாகையும் நிலம் வரைவின்றி யாண்டும் நிகழுமாகலானும் பாலைக்கு வாகை புறனாயிற்று.

(18)

**சூத்திரம் .- 19**

தாவில் கொள்கை.........லென்ப.

கருத்து :- இது, வாகைத்திணை இயல் விளக்குகிறது.

பொருள் :- தாவில் கொள்கைத் தத்தம் கூற்றை—குற்ற மற்ற கோட்பாட்டளவில் மக்கள் அவரவர் துறையில்; பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப—வகைபட விஞ்சும் விறலை வாகை என்பர் புறநூற் புலவர்.

குறிப்பு :- இங்கு 'வாகைச்' சொல் கொண்ட பொருட் டொடர்பாலும் 'புறநூற் புலவர்' எனும் எழுவாய் அவாய் நிலை யானும் கொள்ளப்பட்டன.

இழிவொடு பழிபடு மெல்லாத்துறையும் வெறுத்து விலக்க வேண்டுமாதலின், அவற்றை நீக்கத் 'தாவில் கொள்கை' என்றடை கொடுத்துப் புரைதீர் திறலெதுவும் வாகைக் குரித்தென வரையறுத்துத் தெளித்த செவ்வி வியத்தற்குரியது.

அவரவர் துறையில் பிறருடனுறழ்ந்து மேம்படு வெற்றி பெறுதல் 'வாகை' எனப்படும். உறழ்பவரின்றி ஒரு துறையில் ஒப்பற்றுயரும் பரிசும் வாகையேயாகும்; மேம்பட்டு வீறு பெறுதலே வாகையாகலின், அதற்கு உறழ்ச்சி (போட்டி)

இன்றியமையாததன்று. இசைபடப் புகழும் பாடாணின் வேறாய். உறழ்வாரை வென்றுயரும் வீறும் எதிர்ப்பின்றி ஒரு துறையில் மேம்படும் விறலும் ஒப்ப வாகை வகையி லடங்கும்.

செய்யுள் :- 1 'ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்' எனும் இடைக்குன்றூர் கிழார் புறப்பாட்டிறுதியடிகள், ஒத்தாரோ டுறழ்ந்துவென்ற வாகை குறிப்பதறிக.

'இன்றி னூங்கோ கேளலம்
........................

''நாடுகெழு திருவிற் பசும்பூட் செழியன்
பீடும் செம்மலு மறியார் கூடிப்
பொருது மென்று தன்றலை வந்த
புனைகழ லெழுவர் நல்வல மடங்க
ஒருதா னாகிப் பொருதுகளத் தடலே.''

(புறம்—76)

இன்னும் சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும் எனும் கோவூர்கிழார் பாட்டினிறுதியில்.

''விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலும் உண்டென் றலமந்து...
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே.''

(புறம்—31)

என வருவது, எதிர்ப்பாரின்றி உலகறிய வுயர்ந்த தறுகண் வீறு கூறும் வாகையாதல் காண்க.

(19)

**சிவலிங்கனார்**

வாகை...என்ப.

இச்சூத்திரம் வாகைத்திணை பாலைத்திணையின் புறம் என்றும் வாகையிலக்கணம் இன்னது என்றும் கூறுகின்றது.

(இ-ள்) வாகைத்திணையானது பாலைத்திணையின் புற னாம்; அது, ஒவ்வொருவரும் தத்தமக்குரிய பாகுபாட்டினை

வுடைய குற்றமற்ற கொள்கைகளை (ஒழுக்கங்களை) செயல் மூலம் சிறப்புப்பெறச் செய்தலாம் என்பர் என்றவாறு.

மிகுதிப்படுத்தல் இருவகை. ஒன்று தன்னைத்தானே மிகுதிப் படுத்திக் கொள்ளுதல்; மற்றொன்று மற்றவரோடு உறழ்ந்து மிகுதிப்படுத்திக் கொள்ளுதல். ஓராசிரியரிடத்துப் பயிலும் ஒரு மாணவன் தானே கல்வியிற் சிறத்தலும், ஓராசிரியரிடத்துப் பயிலும் மாணவர் பலருள் ஒருவன் மற்றை மாணவரின் உறழ்ந்து கல்வியிற் சிறத்தலும் முறையே காண்க.

தத்தம் கூறாவன அடுத்த சூத்திரத்துக் கூறியது போலப் பார்ப்பனர் கூறு ஆறும் அரசர் கூறு ஐந்தும் வணிகர் கூறு ஆறும் வேளாளர் கூறு ஆறும் முதலியனவாம். ஒருவரே ஓதல் தூது முதலிய பல கூறுகளும் உடையராவர்.

பாலைக்குத் தனிநிலம் இல்லை. எந்நிலத்தும் நிகழும். வாகையும் வெட்சி வஞ்சி உழிஞை தும்பைப் போர்நிகழும் இடங் களில் நிகழ்வது. பாலைக்குரிய பெரும்பொழுதும் சிறுபொழுதுமே போர்நிகழ்ச்சி முடிவு பெறுதற்குச் சிறந்தனவாதலின் நிலம் பொழுது எனும் இரண்டு முதற்பொருள்களால் வாகை பாலைக்குப் புறனாயிற்று. எத்துறையிலும் வெற்றி காணவேண்டுமாயின் தலைவியரைப் பிரிந்தேயாதல் வேண்டும். எனவே உரிப்பொரு ளாலும் புறனாயிற்று. கருப்பொருள்களும் பாலைத்திணைக் கருப் பொருள்களே செய்யுளில் ஆளப்படும்.

**74.** **அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்**
**ஐவகை மரபின் அரசர் பக்கமும்**
**இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்**
**மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்**
**நாலிரு வழக்கில் தாபதப் பக்கமும்**
**பாலறி மரபில் பொருநர் கண்ணும்**
**அனைநிலை வகையோடு ஆங்கெழு வகையால்**
**தொகைநிலை பெற்றது என்மனார் புலவர்.**

**(16)**

**ஆ. மொ.: இல.**

**75.** **The avocation of seer being divided into six kinds; the avocation of king being divide into five kinds;**

the avocation of others being divided into six kinds; the province of the learned who always discharges the duties of faultless nature in the right ways; the role of ascetic having eight ways of life; the avocation of artiste who knows the various divisions and such other kinds of avocations allied to the above came to the total of seven kinds pertaining to 'Vahai' — say the poets.

பி. இ. நூ. அடுத்த சூத்திரத்துக் காண்க.

## இளம்பூரணர்

74. அறுவகைப் பட்ட... எம்மனார் புலவர்.

இது, வாகைத்திணை பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

பார்ப்பனப் பக்கம் முதலாகப் பொருநர் பக்கம் ஈறாகச் சொல்லப்பட்ட அத்தன்மைத்தாகிய நிலைவகையோடே ஏழ்வகையால் தொகை நிலைபெற்றது [வாகைத்திணை]. எனவே தொகை நிலை பலவென்பது பெறுதும்.

(இ-ள்) அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்—ஆறு திறனாகிய அந்தணர் பக்கமும்.

அறுவகைப்பட்ட பக்கம் எனக் கூட்டுக. அவையாவன—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன. இவ்வொழுக்கத்தால் மிகுதல் வாகையாம் என்பது. பார்ப்பனப் பக்கமும் என்றதன் ஈன் அப்பொருளின் மிகுதி கூறலும் இதன்பாற் படும். இது மேல்வருவனவற்றிற்கும் ஒக்கும்.

ஓதலாவது கல்வி.

### ஓதல் வருமாறு

"இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை உலகத்தும் யாங்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து."

(நாலடி-கல்வி 2)

இது கல்வியின் விழுப்பம்[1] கூறிற்று.

''ஆற்றவுங் கற்றார் அறிவுடையார் அஃதுடையார்
நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை அந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம் ஆதலால்
ஆற்றுணா வேண்டுவ தில்.''[2]

(பழமொழி-116)

இது கற்றோர்க்கு உளதாகும் விழுப்பம் கூறிற்று. இஃது ஏனைய மூன்று வருணத்தார்க்கும் ஒக்கும்.

ஓதுவித்தலாவது-கற்பித்தல்

### ஓதுவித்தல் வருமாறு

''எண்பொருள ஆகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்பது அறிவு.[3]

(குறள்-424)

வேட்டலாவது—வேள்வி செய்தல்.

### வேட்டல் வருமாறு

''நன்றாய்ந்த நீள்நிமிர்சடை
மூதுமுதல்வன் வாய்போகாது
ஒன்றுபுரிந்த ஈரிரண்டின்
ஆறுணர்ந்த ஒருமுதுநூல்
இகல்கண்டோர் மிகல்சாய்மார்
மெய்அன்ன பொய்யுணர்ந்து
பொய்ஓராது மெய்கொளீஇ
மூவேழ் துறையும் முட்டின்று போகிய
உரைசால் சிறப்பின் உரவோர் மருக

---

1. விழுப்பம்—சிறப்பு
2. ஆற்று உணா—நெடுந்தூரம் செல்லும் போது இடை வழியில்உண்ணலாம் கட்டுச்சோறு. கற்றோர்க்கு வேற்று நாடும் தம் நாடாவதால் ஆற்றுணா வேண்டுவதில்.
3. அறிவிலக்கணம் கூறும் இக்குறளில் ஓதுவித்தல் இல்லை.

வினைக்குவேண்டி நீபூண்ட
புலப்புல்வாய்க் கலைப்பச்சை
சுவற்பூண்ஞாண் மிசைப்பொலிய
மறங்கடிந்த அருங்கற்பின்
அறம்புகழ்ந்த வலைசூடிச்
சிறுநுதற்பேர் அகலல்குற்
சிலசொல்லிற் பலகூந்தல்நின்
நிலைக்கொத்தநின் துணைத் துணைவியர்
தமக்கமைந்த தொழில்கேட்பக்
காடென்றா நாடென்றாங்கு
ஈரேழின் இடமுட்டாது
நீர்நாண நெய்வழங்கியும்
எண்நாணப் பலவேட்டும்
மண்நாணப் புகழ்பரப்பியும்
அருங்கடிப் பெருங்காலை
விருந்துற்றநின் திருந்தேந்துநிலை
என்றும்,
காண்கதில் அம்ம யாமே குடாஅது
பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பின்
பூவிரி புதுநீர்க் காவிரி புரக்குந்
தண்புனல் படப்பை எம்மூர் ஆங்கண்
உண்டுந் தின்றும் ஊர்ந்தும் ஆடுகம்
செல்வல் அத்தை யானே செல்லாது
மழைஅண் ணாப்ப நீடிய நெடுவரைக்
கழைவளர் இமயம் போல
நில்இயர் அத்தைநீ நிலமிசை யானே.''[4]

(புறம்-166)

---

4. உரைசால் சிறப்பின் உரவோர் மருக! நின் துணைவியர் தமக்கு ஒத்த தொழில் கேட்ப நீர்நாண நெய்வழங்கியும் எண் குறையப் பல வேள்விவேட்டும் புகழ் பரப்பியும் விருந்து ஆற்றும் நின் திருந்து ஏந்து நிலையை (பொலிவை) என்றும் காண்பேமாக. யாம் எம் ஊரில் உண்டும் தின்றும் ஊர்ந்தும் ஆடுவேம். யான் செல்வேன். நிலமிசை இமயம் போல் நிலீஇயர்—பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயனை ஆவூர் மூலங்கிழார் பாடியது.

வேட்பித்தலாவது, வேள்வி செய்வித்தல். ''நளிகடல் இருங் குட்டத்து'' என்னும் புறப்பாட்டினுள்

''ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்றம் ஆக
மன்னர் ஏவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய[5] வாள்வாய் வேந்தே.''

(புறம்-26)

என அரசன் வேட்பித்தவாறும், பார்ப்பார் வேட்டவாறும் கண்டு கொள்க.

ஈதலாவது, இல்லென இரந்தோர்க்குக் கொடுத்தல்.

**உதாரணம்**

''இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள.''

(குறள்-223)

ஏற்றலாவது, கோடல்; கொள்வோன் தனது சிறப்பிற் குன்றாமல் கோடல்.

**உதாரணம்**

''இரவலர் புரவலை நீயும் அல்லை
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்
இரவலர் உண்மையும் காண்இனி இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண்இனி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்துயாம் பிணித்த
நெடுநல் யானைஎம் பரிசில்
கடுமான் தோன்றல் செல்வல் யானே.''

(புறம்-162)

ஐவகை மரபின் அரசர் பக்கமும்—ஐவகைப்பட்ட அரசர் பக்கமும்.

---

5. வேள்விமுற்றிய—வேள்வியினை முற்றுவித்த எனப் பிற வினையாக்கி வேட்பித்தலுக்குக் கொள்க.

அவையாவன: ஓதலும் வேட்டலும் ஈதலும் படை வழங்குதலும் குடியோம்புதலுமாம். இவற்றுள் முந்துற்ற மூன்றும் மேற் சொல்லப்பட்டன.[1] ஏனைய இரண்டும் இனிக் கூறப்படுகின்றன.

### படை வழங்குதல் வருமாறு

''கடுங்கண்ண கொல்களிற்றால்
காப்புடைய எழுமுருக்கிப்
பொன்னியல் புனைதோட்டியான்
முன்புதுரந்து சமம் தாங்கவும்
பாருடைத்த குண்டகழி
நீரழுவ நிவப்பக்குறித்து
நிமிர்பரிய மாதாங்கவும்
ஆவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்
பரிசிலர்க்கு அருங்கலம் நல்கவுங் குரிசில்
வலிய வாகுநின் தாள்தோய் தடக்கை
புலவுநாற் றத்த பைந்தடி
பூநாற் றத்த புகைகொளீஇ ஊன்துவை
கறிசோறு உண்டு வருந்துதொழில் அல்லது
பிறிதுதொழில் அறியா ஆகலின் நன்றும்
மெல்லிய பெரும தாமே நல்லவர்க்கு
ஆரணங் காகிய மார்பிற் பொருநர்க்கு
இருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய்நின் பாடுநர் கையே.''[2]

(புறம்-14)

---

1. பார்ப்பார்க்குக் காட்டிய உதாரணங்களே அரசர்க்கும் பொருந்தும் ஆதலின் அவற்றைக் கொள்க என்பார் இவ்வாறு எழுதினார்.

2. பெரும! நின்னைப் பாடுநர் கை மெல்லிய; நின் தாள் தோய் தடக்கை களிற்றால் எழுமுருக்கித் தோட்டியால் சமம் தாங்கவும் மா(குதிரை) தாங்கவும் நாணால் வடுக் கொள அம்பு வழங்கவும் வலியவாகும் என்க—இது படை வழங்குதற் சிறப்புக் கூறியது—செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியது.

## குடியோம்புதல் வருமாறு

''இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத்து அகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும்
என்றாங்கு,
அவைஅளந்து அறியினும் அளத்தற்கு அரியை
அறிவும் ஈரமும் பெருங்கண் ணோட்டமும்
சோறுபடுக்குந் தீயொடு
செஞ்ஞாற்றுத் தெறலல்லது
பிறிதுதெறல் அறியார்நின் நிழல்வாழ் வோரே
திருவில் அல்லது கொலைவில் அறியார்
நாஞ்சில் அல்லது படையும் அறியார்
திறனெறி வயவரொடு தெவ்வர் தேயஅப்
பிறர்மண் உண்ணுஞ் செம்மல்நின் நாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணின் அல்லது
பகைவர் உண்ணா அருமண் ணினையே
அம்புதுஞ்சும் கடிஅரணால்
அறந்துஞ்சும் செங்கோலையே
புதுப்புள் வரினும் பழம்புள் போகினும்
விதுப்புறவு அறியா ஏமக் காப்பினை
அனையே ஆகல் மாறே
மன்னுயிர் எல்லாம் நின்அஞ் சும்மே.''[3]

(புறம்-20)

---

3. நின்நிழல் வாழ்வோர் சோறு சமைக்கும் தீ ஞாயிற்றின் ஒளி தவிரப் பிற நெருப்பை அறியார்; வானவில் அன்றிக் கொலைவில் அறியார்; கலப்பை அல்லது வேறுபடை வரவு அறியார்; நின் நாட்டு மண்ணைக் கருவுற்ற மகளிர் உண்பரேயன்றி வேற்று வேந்தர் உண்ணார் (கொள்ளார்). ஏன் எனின் அறம் தங்கும் செங்கோலு டையை நீ. பழம் புள் பறந்து புதுப்புள் வந்தாலும் நிமித்தமாக எண்ணாதவாறு மக்கள் மகிழும்படியான பாதுகாவலைச் செய்பவன் நீ—மாந்தரஞ் சேரல் இரும் பொறையைக் குறுங்கோழியூர் கிழார் பாடியது.

'பக்கம்' என்றதனான் அரசரைப்பற்றி வருவனவற்றிற் கெல்லாம் இதுவே ஒத்தாகக் கொள்க.

இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்—ஆறு மரபினையுடைய வணிகர் வேளாளர் பக்கமும்.

வணிகர்க்குரிய ஆறு பக்க மாவன:- ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல்.

உதாரணம்

''உழுது பயன்கொண்டு ஒலிநிரை ஓம்பிப்
பழுதிலாப் பண்டம் பகர்ந்து—முழுதுணர
ஓதி அழல்வழிபட்டு ஓம்பாத ஈகையான்
ஆதி வணிகர்க்கு அரசு.''

(வெண்பா. வாகை-10)

வேளாண் மாந்தர்க்குரிய ஆறு மரபாவன:- உழவு, உழ வொழிந்த தொழில், விருந்தோம்பல், பகடு புறந்தருதல், வழிபாடு,[1] வேதம் ஒழிந்த கல்வி.

உதாரணம்

''சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை.[2]

(குறள்-1031)

''கருமஞ் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையில் பீடுடையது இல்.[3]

(குறள்-1021)

---

1. பெரியோரை உயர்த்தித் தன்னைத் தாழ்த்திக் கொளல்.
2. உழவின் சிறப்புணர்த்துவது.
3. எடுத்த செயலைச் செய்யுங்கால் கையொழியேன் என்று செயும் பெருமையில் ஒருவனுக்குப் பெருமையுடையது வேறொன்றும் இல்லை-கருமம் என்பது உழவொழிந்த கருமம் என்பது இளம். கருத்து.

''இரவார் இரப்பார்க்கொன்று ஈவர் கரவாது
கைசெய்தூண் மாலை யாவர்.''[4]

(குறள்-1035)

''பகடு புறந்தருநர் பாரம் ஓம்பி.''

(புறம்-35)

''இருக்கை எழலும் எதிர்செலவும் ஏனை
விடுப்ப ஒழிதலோடு இன்னா—குடிப்பிறந்தார்
குன்றா ஒழுக்கமாக் கொண்டார் கயவரோடு
ஒன்றா உணரற்பாற்று அன்று.''[5]

(நாலடி. குடிப்பிறப்பு-4)

''வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே.''[6]

(புறம்-183)

இவை ஆறும் வந்தவாறு காண்க.

மறுவில் செய்தி மூவகைக்காலமும் நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்—குற்றமற்ற செயலையுடைய மழையும் பனியும் வெயிலு மாகிய மூவகைக் காலத்தினையும் நெறியினாற் பொறுத்த அறிவன் பக்கமும்.

இறந்தகாலம் முதலாகிய மூன்று காலத்தினையும் நெறி யினால் தோற்றிய அறிவன் பக்கம் என்றாலோவெனின், அது முழுதுணர்ந்தோர்க்கல்லது புலப்படாமையின் அது பொருளன் றென்க. பன்னிருபடலத்துள், ''பனியும் வெயிலுங் கூதிரும்

---

4. கரவாது உழுதுண்ணும் இயல்புடைய உழவர் பிறரிடம் இரவார். தன்னிடம் வந்து இரப்பவர்க்கு யாதும் ஈவர்.

5. தன்னிற் பெரியாரைக் கண்டபோது தன் இருக்கையி னின்றும் எழுதல் முதலியன வழிபாடாகும். அவ்வாறு வழிபடுவாரைக் கயவரோடு ஒன்றாக எண்ணற்பாற் றன்று.

6. வேதம் ஒழிந்த கல்வி கற்றலுக்கு இது உதாரணம் ஆகாது.

யாவும், துனியில் கொள்கையொடு நோன்மை எய்திய, தணிவுற்று அறிந்த கணிவன் முல்லை'' எனவும் ஓதுதலின் மேலதே பொருளாகக் கொள்க.

அறிவன் என்றது கணியனை.[7] மூவகைக் காலமும் நெறியினால் ஆற்றுதலாவது, பகலும் இரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து ஆண்டு நிகழும் வில்லும் மின்னும் ஊர்கோளுந் தூமமும் மீன் வீழ்வும் கோள் நிலையும் மழை நிலையும் பிறவும் பார்த்துப் பயன்கூறல். ஆதலான் மூவகைக் காலமும் 'நெறியின் ஆற்றிய அறிவன்' என்றார்.

### உதாரணம்

''புரிவின்றி யாக்கைபோல் போற்றுவ போற்றிப்
பரிவின்றிப் பட்டாங்கு அறியத்—திரிவின்றி
விண்ணிவ் வுலகம் விளைக்கும் விளைவெல்லாம்
கண்ணி உரைப்பான் கணி.''

(வெண்பா. வாகை-20)

நால் இருவழக்கின் தாபத பக்கமும்—எட்டுவகைப்பட்ட வழக்கினையுடைய தாபதர் பக்கமும்.

அவையாவன :-நீராடல், நிலத்திடை கிடத்தல், தோலுடுத்தல், சடை புனைதல், எரியோம்பல், ஊரடையாமை, காட்டிலுள்ள உணவு கோடல், தெய்வ பூசையும் அதிதி பூசையும் செய்தல்.

### உதாரணம்

''நீர்பலகால் மூழ்கி நிலத்தசைஇத் தோல்உடையாச்
சோர்சடை தாழச் சுடர்ஓம்பி—ஊரடையார்
கானகத்த கொண்டு[1] கடவுள் விருந்தோம்பல்
வானகத்து உய்க்கும் வழி.''

(வெண்பா. வாகை-14)

---

7. கணியன்—அவ்வக்கால நிலையறிந்து நாட்டிற்கு ஆம் பயன் கூறுபவன். எதிர்காலப் பலன் அறியாதவன். முக்கால உணர்வுடையோர் முழுதுணர்ந்தோராவர்.

1. கானகத்த கொண்டு—காட்டிற்கிடப்பனவற்றை உணவாகக்கொண்டு.

''ஓவத்து அன்ன இடனுடை வரைப்பின்
பாவை யன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்
கழைக்கண் நெடுவரை அருவி ஆடிக்
கான யானை தந்த விறகின்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே.''[2]

(புறம்-251)

''கறங்குவெள் அருவி ஏற்றலின் நிறம்பெயர்ந்து
தில்லை அன்ன புல்லென் சடையோடு
அள்ளிலைத் தாளி கொய்யு மோனே
இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே.''[3]

(புறம்-252)

இவற்றுள்ளும் சில வந்தவாறு காண்க.

பால் அறி மரபின் பொருநர் கண்ணும் — பாகுபாடு அறிந்த மரபினையுடைய பொருநர்[4] பக்கமும்.

அஃதாவது, வாளானும் தோளானும் பொருதலும் வென்றி கூறலும் வாகையாம் என்றவாறு.

---

2. ஓவியம்போலும் இட மகன்ற மனையிலுள்ள பாவை போலும் மகளிரின் அணிகளைத் தன்னைக் காணுதலால் நெகிழச் செய்த மள்ளனை அன்று கண்டோம். இன்று அவன் அருவியாடித் தன் ஏவலால் யானை தந்த விறகை மூட்டித் தன் முதுகுபுறம் தொங்கும் முறுக்குண்ட சடையைப் புலர்த்தும் தவத்தோன் ஆனான். இது சடை புனைதல். செந்தீ வேட்டு என்றதால் எரியோம்பலு மாம்.

3. தன் இல்லத்தில் நடமாடும் மனைவியாகிய மடமயிலைப் பிணிக்கும் இன்சொல்லாகிய வலையினைக் கொண்ட வேட்டுவன் (வீரன்) இன்று இதோ அருவியாடுதலின் நிறம் மாறி உண்கலத்துக்காகக் காட்டகத்துத் தாளிலையைக் கொய்வோனானான்.

4. பொருநர்—போர் புரிவோர்—வீரர்.

### வாளால் மிகுதல் வருமாறு

''ஏந்துவாள் தானை இரிய உறைகழித்துப்
போந்துவாள் மின்னும் பொருசமத்து—வேந்தர்
இருங்களி யானை இனமிரிந்து ஓடக்
கருங்கழலான் கொண்டான் களம்.''[5]

(வெண்பா. வாகை-26)

### மல்வென்றி வருமாறு

''இன் கடுங் கள்ளின் ஆமூர் ஆங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகால் மார்பொதுங் கின்றே ஒருகால்
வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே
நல்கினும் நல்கான் ஆயினும் வெல்போர்ப்
போர்அருந் தித்தன் காண்கதில் அம்ம
பசித்துப் பணைமுயலும் யானை போல
இருதலை ஒசிய எற்றிக்
களம்புகு மல்லன் கடந்தடு நிலையே.''[6]

(புறம்-80)

---

5. கருங்கழலான் வாள் உறை கழித்துத் தானை இரிய யானை இனம் இரிந்து ஓடக் களம் கொண்டான் என்க.

6. தந்தையாகிய தித்தனால் வெறுக்கப்பட்டுத் தனித்திருந்த போர்வைக் கோப்பெருநற்கிள்ளி என்பான் ஆமூரில் இருந்த மல்லன் என்பவனை மல்லில் வென்ற செய்தியைச் சாத்தந்தையார் பாடலில் கூறினார்.

ஆமூரில் உள்ள வலிய மல்லன் என்பானை வெல்லுங் காலத்து ஒருகால் மார்புப் பக்கமாக மடிந்தது; ஒருகால் பின்னே ஒதுங்கியது.

மல்லனின் தலையும் காலுமாகிய இரண்டிடங்களையும் பசித்த யானை மூங்கிலை ஒடிக்க முயல்வதுபோல முறியும்படித் தாக்கி மல்லனை வென்று கடந்த போர் நிலையைத் தந்தையாகிய தித்தன் மகனுக்கு இரங்கி ஏற்பினும் இரங்காமல் ஏலானாயினும் காண்பானாகுக.

அனைநிலைவகையொடு—வாளானும் தோளானும் பொருது வேறலன்றி அத்தன்மைத்தாகிய நிலைவகையான் வேறலொடு.

அஃதாவது, சொல்லான் வேறலும் பாட்டான் வேறலும் கூத்தான் வேறலும் சூதான் வேறலும் தகர்ப்போர் பூழ்ப்போர் என்பனவற்றான் வேறலும். பிறவும் அன்ன.

''விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.''[7]
(குறள்-148)

இது சொல் வென்றி.

''வண்டுறையுங் கூந்தல் வடிகண்ணாள் பாடினாள்
வெண்துறையுஞ் செந்துறையும் வேற்றுமையாக்
—கண்டறியக்
கின்னரம் போலக் கிளை அமைந்த தீந்தொடையாழ்
அந்நரம்பும் அச்சுவையும் ஆய்ந்து.''[8]
(வெண்பா. பெருந்திணை. 18)

இது பாடல் வென்றி.

''கைகால் புருவங்கண் பாணி நடைதூக்குக்
கொய்பூங் கொம் பன்னாள் குறிக்கொண்டு-வெய்பூப்
படுகளிவண் டார்ப்பப் பயில்வளைநின்று ஆடும்
தொடுகழல் மன்னன் துடி.''[9]
(வெண்பா. பெருந்திணை. 17)

இஃது ஆடல் வென்றி.

---

7. ஒழுங்குபடுத்தி இனிதாகச் சொல்லுதல் வல்லாரை இவ்வுலகம் பெறின் அவர் ஏவிய தொழிலை விரைந்து கேட்கும்.

8. வெண்டுறை செந்துறைப் பாடல்களின் இசை வேறுபாடு கண்டறியக் கின்னரர் யாழ்போலும் இனிய தொடையமைந்த தம் யாழின் நரம்பு அதன் இசைச் சுவையும் நன்கு ஆய்ந்து வண்டுறையும் கூந்தலும் கண்ணும் உடைய பாடினி பாடினாள்.

9. மன்னன் துடிக்கூத்தைக் கொம்பு அன்னாள் கை கால் புருவம் கண் பாணி நடை தூக்கு ஆகியவற்றைக் குறிக்கொண்டு ஆடும் என்க.

"கழகத் தியலுங் கவற்று நிலையும்
அளகத் திருநுதலாள் ஆய்ந்து-கழகத்திற்
பாய வகையாற் பணிதம் பலவென்றாள்
ஆய நிலயம் அறிந்து."[10]

(வெண்பா. ஒழிபு. 16)

இது சூது வென்றி. பிறவும் வந்தவழிக் காண்க.

எழுவகையான் தொகைநிலை பெற்றது என்மனார் புலவர்—ஏழ்வகையான் தொகைநிலை பெற்றதென்று கூறுவர் புலவர். [ஆங்கு என்பது அசை].

(16)

**நச்சினார்க்கினியர்**

75. அறுவகைப்பட்ட.........புலவர்.

இது வாகைத்திணைக்குப் பொதுவிலக்கணங் கூறினார், இன்னும் அதற்கேயாவதோர் சிறப்பிலக்கணம் பொதுவகையாற் கூறுகின்றது; மேற்கூறி வருகின்றாற் போலத் துறைப்படுத்திக் கூறுதற்கேலாத பரப்புடைச் செய்கை பலவற்றையுந் தொகுத்து ஒரோ வொன்றாக்கி எழுவகைப்படுத்திக் கூறுதலின்.

இதன்பொருள் :- அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்- ஆறு கூற்றினுட்பட்ட பார்ப்பியற் கூறும்:[1]

ஆறுபார்ப்பியலென்னாது வகையென்றதனான் அவை தலை இடை கடையென ஒன்று மும்மூன்றாய்ப் பதினெட்டாம் என்று கொள்க; அவை ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் கொடுத்தல் கோடல் என ஆறாம். இருக்கும் எசுரும் சாமமும் இவை தலையாய ஓத்து; இவை வேள்வி முதலியவற்றை விதித்தலின் இலக்கணமுமாய், வியாகரணத்தான் ஆராயப்

10. திருநுதலாள் சூதுஇயல் அறிந்து உருள்காய் இயலும் அறிந்து உபாயநிலையால் பல ஓட்டுகளையும் வென்றாள்.

1. இவர் கூறும் உரை தமிழர்க்கு ஏலாதது, பொருத்த மற்றது என்பதைப் பாரதியார் உரையிலும் சிவ லிங்கனார் கருத்துரையிலும் காண்க.

படுதலின் இலக்கியமுமாயின. அதர்வமும் ஆறங்கமுந் தரும நூலும் இடையாய ஓத்து; அதர்வம் வேள்வி முதலிய ஒழுக்கங் கூறாது பெரும்பான்மையும் உயிர்கட்கு ஆக்கமேயன்றிக் கேடுஞ் சூழும் மந்திரங்களும் பயிறலின் அவற்றோடு கூறப்படா தாயிற்று.

ஆறங்கமாவன, உலகியற்சொல்லை ஒழித்து வைதிகச் சொல்லை ஆராயும் நிருத்தமும், அவ்விரண்டையும் உடனாராயும் ஐந்திரத் தொடக்கத்து வியாகரணமும், போதாயனீயம் பாரத்து வாசம் ஆபத்தம்பம் ஆத்திரேயம் முதலிய கற்பங்களும், நாரா யணீயம் வாராகம் முதலிய கணிதங்களும், எழுத்தாராய்ச்சி யாகிய பிரமமும், செய்யுளிலக்கணமாகிய சந்தமுமாம்.

தருமநூலாவன, உலகியல்பற்றி வரும் மனு முதலிய பதி னெட்டும்; இவை வேதத்திற்கு அங்கமானமையின் வேறாயின.

இனி, இதிகாச புராணமும் வேதத்திற்கு மாறுபடுவாரை மறுக்கும் உறழ்ச்சி நூலும் அவரவர் அதற்கு மாறுபடக் கூறும் நூல்களும் கடையாய ஓத்து; எழுத்துஞ் சொல்லும் பொருளும் ஆராய்ந்து இம்மைப்பயன் தருதலின் அகத்தியந் தொல்காப்பியம் முதலிய தமிழ் நூல்களும் இடையாய ஓத்தாமென்றுணர்க,[2] இவை யெல்லாம் இலக்கணம். இராமாயணமும் பாரதமும் போல்வன இலக்கியம்.

இனித் தமிழ்ச் செய்யுட்கண்ணும் இறையனாரும் அகத்தி யனாரும் மார்க்கண்டேயனாரும் வான்மீகனாருங் கவுதமனாரும் போல்வார் செய்தன தலையும், இடைச்சங்கத்தார் செய்தன இடையும், கடைச்சங்கத்தார் செய்தன கடையுமாகக் கொள்க.[3]

இங்ஙனம் ஒத்தினையும் மூன்றாகப் பகுத்தது, அவற்றின் சிறப்புஞ் சிறப்பின்மையும் அறிவித்தற்கு. இவற்றுள் தருக்கமுங் கணிதமும் வேளாளர்க்கும் உரித்தாம்.

---

2. தமிழர்க்கு ஆரிய நூல்களைத் தலையாய ஓத்து என்று கூறுவதும் தமிழரின் தலையாய இலக்கண நூல்களை இடையாய ஒத்து என்று கூறுவதும் பொருந்தாக் கூற்றாகும்.

3. இங்குக் கூறிய தலை இடை கடை என்பன காலத்தாற் கொள்வனவே; தரத்தாற் கொள்வனவல்ல.

இனி ஓதுவிப்பனவும் இவையேயாகலின் அவைகட்கும் இப் பகுதி மூன்றும் ஒக்கும். ஓதுவித்தலாவது கொள்வோனுணர்வு வகை அறிந்து அவன் கொள்வரக் கொடுக்கும் ஈவோன்றன்மையும் ஈதலியற்கையுமாம். வேட்டலாவது, ஐந்தீயாயினும்[4] முத்தீயாயினும்[5] உலகயற்றீயாயினும்[6] ஒன்று பற்றி மங்கல மரபினாற் கொடைச்சிறப்புத் தோன்ற அவி முதலியவற்றை மந்திரவிதியாற் கொடுத்துச் செய்யுஞ் செய்தி. வேளாண்மைபற்றி[7] வேள்வியாயிற்று. வேட்பித்தலாவது, வேள்வியாசிரியர்க்கோதிய இலக்கணமெல்லாம் உடையனாய் மாணாக்கற்கு அவன் செய்த வேள்விகளாற் பெறும் பயனைத் தலைப்படுவித்தலை வல்லனாதல். இவை[8] மூன்று பகுதியாவாதல் போதாயனீயம் முதலியவற்றானுணர்க. கொடுத்தலாவது, வேள்வியாசானும் அவற்குத் துணையாயினாரும் ஆண்டு வந்தோரும் இன்புறு மாற்றான் வேளாண்மையைச் செய்தல். கோடலாவது, கொள்ளத்தகும் பொருள்களை அறிந்துகொள்ளுதல். உலகுகொடுப்பினும் ஊண் கொடுப்பினும் ஒப்பநிகழும் உள்ளம் பற்றியும், தாஞ் செய்வித்த வேள்விபற்றியும், கொடுக்கிறான் உவகை பற்றியும், கொள் பொருளின் ஏற்றிழிவு பற்றியும், தலை இடை கடையென்பனவுங் கொள்க.[9]

இனி வேட்பித்தன்றித் தனக்கு ஓத்தினாற் கோடலுங் கொடுபித்துக் கோடலுந் தான் வேட்டற்குக் கோடலுந் தாயமின்றி[10] இறந்தோர் பொருள் கோடலும் இழந்தோர் பொருள்[11]

---

4. ஐந்தீ : சப்ப்யம், ஆவசத்யம், ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினியம்.

5. முத்தீ: ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினியம்.

6. உலகியல் தீ: சமையல் தீ.

7. வேளாண்மை : உதவி.

8. இவை — வேள்விகள்.

9. உள்ளம், வேள்வி, உவகை, கொள்பொருள் இவற்றின் தரநிலையால் தலை இடை கடையெனக் கொள்க.

10. தாயம் — பொருள்கோடற்கு உரிமையுடையார்

11. இழந்தோர் பொருள் — காணாமல் தவறவிட்டவர் பொருள்.

கோடலும் அரசு கோடலுந் துரோணாசாரியனைப் போல்வார் படைக்கலங் காட்டிக் கோடலும் பிறவுங் கோடற் பகுதியாம்.[12]

பார்ப்பியலென்னாது பக்கமென்றதனானே பார்ப்பார் ஏனை வருணத்துக்கட் கொண்ட பெண்பால்கட்டோன்றின வருணத்தார்க்குஞ் சிகையும் நூலும் உளதேனும் அவர் இவற்றிற் கெல்லாம் உரியரன்றிச் சில தொழிற்கு உரியரென்பது கொள்க.

(உ-ம்) ''ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்த
ஈத லேற்றலென் றாறுபுரிந் தொழுகு
மறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி.''

(பதிற்று. - 24)

இஃது அந்தணர்க்குக் கூறிய பொது.

''முறையோதி னன்றி முளரியோ னல்லன்
மறையோதி னானிதுவே வாய்மை — யறிமினோ
வீன்றாள் வயிற்றிருந்தே யெம்மறையு மோதினான்
சான்றான் மன்னொருவன் றான்.''[13]

இஃது ஓதல்.

இனி இது ஓதற்சிறப்பும் ஓதினாற்கு உளதாஞ் சிறப்புங் கூறுதலுங் கொள்க.

''இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்
றம்மை விளக்குமாற் றாமுளராக் — கேடின்றா
லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து.''

(நாலடி—14-2)

---

12. இவையெல்லாம் ஆரியப் பார்ப்பனர்க்குரியனவாக ஆரியரால் கூறப்பட்டன. தமிழ்ப் பார்ப்பனர்க்குரியன அல்ல. ஏன் எனின் தாயமின்றி இறந்தார் பொருளும் இழந்தார் பொருளும் அரசுக்கே சேரும்.

13. மறையோதிய பார்ப்பான் முறையாகக் கற்றாலன்றிப் பிரமன் தகுதி பெறான். இது வாய்மை. சான்றான் மகன் ஒருவன் தாய் வயிற்றிருந்தே மறையோதினான். இரணியன் மகன் பிரகலாதன் தாய் வயிற்றிருக்கும் போது நாரதரால் தாய்க்கு வேதப் பொருள் கூற அதனைக் கேட்ட கதையைக் குறிப்பதுபோலும் இது.

''ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார்
நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை—யந்நாடு
வேற்றுநா டாகா தமவேயா மாதலா
லாற்றுணா[14] வேண்டுவ தில்.'' (பழமொழி)

''ஒத்த முயற்சியா னொத்து வெளிப்படினு
நித்திய மாக நிரம்பிற்றே — யெத்திசையுந்
தாவாத வந்தணர் தாம்பயிற்றிக் காவிரிநாட்
டோவாத வோத்தி னொலி.''[15]

இஃது ஓதுவித்தல்.

''எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.''
(குறள்—அறிவுடைமை-4)

இஃது ஓதுவித்தற் சிறப்பு.

''நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகா
தொன்றுபுரிந்த வீரிரண்டி
னாறுணர்ந்த வொருமுதுநூ
லிகல் கண்டோர் மிகல்சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்யோராது மெய்கொளீஇ
மூவேழ் துறையு முட்டின்று போகிய
வுரைசால் சிறப்பி னுரவோர் மருக
வினைக்கு வேண்டி நீபூண்ட
புலப்புல்வாய்க் கலைப்பச்சைச்
சுவற் பூண்ஞாண் மிசைப்பொலிய
மறங்கடிந்த வருங்கற்பி
னறம் புகழ்ந்த வலைசூடிச்
சிறுநுதற்பே ரகலல்குற்

---

14. ஆற்றுணா—வழியில் உண்ணுதற்குக் கட்டும் கட்டுச் சோறு.

15. அந்தணர் பயிற்றிக் காவிரி நாட்டு ஓவாத மறையொலி யானது பலரின் ஒன்றான ஒலியெழுப்பு முயற்சியால் ஒத்து வெளிப்படினும் நாளும் நிரம்பியது.

சிலசொல்லிற் பலகூந்தனி
னிலைக்கொத்தநின் றுணைத்துணைவியர்
தமக்கமைந்த தொழில் கேட்பக்
காடென்றா நாடென்றாங்
கீரேழி னிடமுட் டா அது
நீர்நாண நெய்வழங்கியு
மெண்ணாணப் பலவேட்டு
மண்ணாணப் புகழ்பரப்பியு
மருங்கடிப் பெருங்காலை
விருந்துற்றநின் றிருந்தேந்துநிலை
யென்றுங், காண்கதில் லம்ம யாமே குடாஅது
பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற்
பூவிரி புதுநீர்க் காவிரி புரக்குந்
தண்புனற் படப்பை யெம்மூ ராங்க
ணுண்டுந் தின்று மூர்ந்து மாடுகஞ்
செல்வ லத்தை யானே செல்லாது
மழையண் ணாப்ப நீடிய நெடுவரைக்
கழைவள ரிமயம் போல
நிலீஇய ரத்தைநீ நிலமிசை யானே.''[16]

(புறம் — 166)

இதனுள் வேட்டவாறும் ஈந்தவாறுங் காண்க.

''ஈன்ற வுலகளிப்ப வேதிலரைக் காட்டாது
வாங்கியதா யொத்தானம் மாதவத்தோ—னீந்த
மழுவா ணெடியோன் வயக்கஞ்சால் வென்றி
வழுவாமற் காட்டிய வாறு.''

---

16. இப்பாடல் கோனாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயனை ஆவூர் மூலங்கிழார் பாடியது. ''உரவோர் மருக! பூணூல்மேல் தோல் உடை அசைய கற்புடைய நின் துணைவியர் நின் தொழில் கேட்டு நடப்பக் காட்டுப் பசு ஏழாலும் நாட்டுப் பசு ஏழாலும் குறைவுபடாமல் நீர்போல நெய் சொரிந்து பல வேள்விகளைச் செய்து புகழ் பரப்பியும்விருந்துசெய்த நின் செம்மாந்த நிலையை யாம் என்றும் காண்பேமாக; (இது வேட்டவாறு கூறியது). இனி யாம் காவிரி புரக்கும் மருதநிலம் சூழ்ந்த எம்மூரில் சென்று நீ தந்த வளத்தை உண்டும் தின்றும் ஏறி ஊர்ந்தும் ஆடுவேம்; யான் செல்வேன்! நீ இமயம் போல் நிலைக்க (இது ஈந்தவாறு கூறியது).

இது பரசுராமனைக் காசிபன் வேட்பித்த பாட்டு.

'நளிகட லிருங்குட்டத்து' என்னும்(26) புறப்பாட்டினுள், அந்தணன் வேட்பித்தலும் அரசன் வேட்டலும் வந்தது.

> ''இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
> குலனுடையான் கண்ணே யுள.''

(குறள்-ஈகை-3)

இஃது ஈதல்.

> ''ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
> வைத்திழக்கும் வன்கண் ணவர்.''

(குறள்-ஈகை-8)

இஃது ஈதற் சிறப்பு.

> ''நிலம்பொறை யாற்றா நிதிபல கொண்டுங்
> குலம் பெறுதீங் கந்தணர் கொள்ளார்- நலங்கிளர்
> தீவா யவிசொரியத் தீவிளங்கு மாறுபோற்
> றாவா தொளிசிறந்த தாம்.''[1]

(பெரும் பொருள் விளக்கம்-புறத்திரட்டு-குடிமரபு)

இஃது ஏற்றல்.

> ''தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
> வான்சிறிதாப் போர்த்து விடும்.''

(நாலடி.-48)

இஃது ஏற்றற் சிறப்பு.

ஓதுவித்தலும் வேட்பித்தலும் ஏற்றலும் அந்தணர்க்கே உரிய.

ஐவகை மரபின் அரசர் பக்கமும்—ஓதல் வேட்டல் ஈதல் காத்தல் தண்டஞ்செய்தல் என்னும் ஐவகை யிலக்கணத்தை யுடைய அரசியற் கூறும்:

---

1. நிலம் தாங்க முடியாத அளவு நிதிபெறுவதாயினும் தம் அந்தண குலம் தீங்கு பெறுமாயின் அதனைக் கொள்ளார்; அத்தகைய அவரது புகழ் அவிசொரியத் தீ எழுந் தெரியுமாறு போல விளங்குவதாம்.

'வகை' என்றதனான் முற்கூறிய மூன்றும் பொதுவும் பிற்கூறிய இரண்டுஞ் சிறப்புமாதல் கொள்க.

பார்ப்பார்க்குரியவாக விதந்த வேள்வியொழிந்த வேள்விகளுள் இராசசூயமுந் துரங்கவேள்வியும் போல்வன அரசர்க்குரிய வேள்வியாம். கலிங்கங் கழுத்து யாத்துக்[2] குளம்புங் கோடும் பொன்னணிந்த புனிற்றாநிரையுங்[3] கனகமும் கமுகும் அன்ன முதலியனவும் செறிந்த படப்பை சூழ்ந்த மனையுந்[4] தண்ணடையுங்,[5] கன்னியரும், பிறவுங் கொடுத்தலும் மழுவாணெடியோனொப்ப[6] உலகு முதலியன கொடுத்தலும் போல்வன அவர்க்குரிய ஈதலாம். படைக்கலங்களாலும் நாற்படையானுங் கொடைத் தொழிலானும் பிறவாற்றானும் அறத்தின் வழாமற் காத்தல் அவர்க்குரிய காப்பாம். அங்ஙனங் காக்கப்படும் உயிர்க்கு ஏதஞ்செய்யும் மக்களையாயினும் விலங்கையாயினும் பகைத்திறத்தையாயினும் அறஞ்செய்யா அரசையாயினும் விதி வழியால் தண்டித்தல் அவர்க்குரிய தண்டமாம். இஃது[7] அரசர்க்கு அறமும் பொருளும் இன்பமும் பயக்கும்.

'வகை' என்றதனானே களவு செய்தோர் இருக்கையிற் பொருள் கோடலும், ஆறிலொன்று கோடலும், சுங்கங் கோடலும், அந்தணர்க்கு இறையிலி கொடுக்குங்கால் இத் துணைப் பொருள் நும்மிடத்து யான் கொள்வலெனக் கூறிக் கொண்டு அதுகோடலும், மறம் பொருளாகப் பகைவர் நாடு கோடலும், தமரும் அந்தணரும் இல்வழிப் பிறன்றாயங் கோடலும், பொருளில்வழி வாணிகஞ்செய்து கோடலும், அறத் திற்றிரிந்தாரைத் தண்டத்திற்றகுமாறு பொருள் கோடலும் போல்வன கொள்க. அரசியலென்னாது 'பக்கம்' என்றதனான் அரசர் ஏனைவருணத்தார்கட் கொண்ட பெண்பாற்கட்டோன்றிய

---

2. கலிங்கம் கழுத்துயாத்து—புதிய ஆடையைக் கழுத்தில் கட்டி.

3. ஈன்றணியபசு

4. படப்பை சூழ்ந்த மனை—தோட்டம் சூழ்ந்த மனை.

5. தண்ணடை—மருதநிலம்.

6. மழுவாள் நெடியோன்—பரசுராமன்.

7. இஃது—தண்டம் செய்தல்.

வருணத்துப் பகுதியோருஞ் சில தொழிற்குரியர் என்று கொள்க.

(உ-ம்) "சொற்பெயர் நாட்டங் கேள்வி நெஞ்சமென்
றைந்துடன் போற்றி யவைதுணை யாக
வெவ்வஞ் சூழாது விளங்கிய கொள்கைக்
காலை யன்ன சீர்சால் வாய்மொழி
யுருகெழு மரபிற் கடவுட் பேணியர்
கொண்ட தீயின் சுடரெழு தோறும்
விருப்புமெய் பரந்த பெரும்பெய ராவுதி."[8]

(பதிற்று.-21)

"கேள்வி கேட்டுப் படிவ மொடியாது
வேள்வி வேட்டனை யுயர்ந்தோ ருவப்பச்
சாயறல் கடுக்குந் தாழிருங் கூந்தல்
வேறுபடு திருவி னின்வழி வாழியர்
கொடுமணம் பட்ட வினைமா ணருங்கலம்
பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்
வரையக நண்ணி குறும்பொறை நாடித்
தெரியுநர் கொண்ட சிரறுடைப் பைம்பொறிக்
கவைமரங் கடுக்குங் கவலைய மருப்பிற்
புள்ளி யிரலைத் தோலூ னுதிர்த்துத்
தீதுகளைந் தெஞ்சிய திகழ்விடு பாண்டிற்
பருதி போகிய புடைகிளை கட்டி
யெஃகுடை யிரும்பி னுள்ளமைத்து வல்லோன்
சூடுநிலை யுற்றுச் சுடர்விடு தோற்றம்
விசும்பாடு மரபிற் பருந்தூ றளப்ப
நலம்பெறு திருமணி கூட்டு நோற்றோ

---

8. பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக்கவுதமனார் பாடியது. பிறவுயிர்க்குத் தீங்கு நினையாது விளங்கிய ஒழுக்கத்தையும் காலை (ஞாயிறு) போலும் வாய்மொழியையும் உடைய கடவுளரை (முனிவரை)ப் பரவுதற்காகச் சொல்லிலக்கணம் பொருளிலக்கணம் சோதிடம் வேதம் ஆகமம் என்ற ஐந்தும் கற்று அவை துணையாகக் கொண்ட வேள்வித்தீயின் சுடர் மேலெழுந்தோறும் விருப்பம் உடம்பெங்கும் பரவுதற்குக் காரணமான ஆவுதிப்புகை.

ளொடுங்கீ ரோதி யொண்ணுதல் கருவி
லெண்ணியன் முற்றி யீரறிவு புரிந்து
சார்புஞ் செம்மையு முளப்படப் பிறவுங்
காவற் கமைந்த வரசுதுறை போகிய
வீறுசால் புதல்வர்ப் பெற்றனை யிவணர்க்
கருங்கட னிறுத்த செருப்புகன் முன்ப
வன்னவை மருண்டனெ னல்லே னின்வயின்
முழுதுணர்ந் தொழுக்கு நரைமூ தாளனை
வண்மையு மாண்பும் வளனு மெச்சமுந்
தெய்வமும் யாவதுந் தவமுடை யோர்க்கென
வேறுபல நனந்தலை பெயரக்
கூறினை பெருமநின் படிமை யோனே.''[9]

(பதிற்று.-74)

என வருவனவற்றுள் ஓதியவாறும் வேட்டவாறுங் காண்க.

''ஒருமழுவாள் வேந்த னொருமூ வெழுகா
லரசடு வென்றி யளவோ—வுரைசான்ற
வீட்டமாம் பல்பொருந்தூ ணெங்கும் பசுப்படுத்து
வேட்டநாள் பெற்ற மிகை.''[10]

இதுவும் வேட்டல்.

'விசையந்தப்பிய' என்னும் பதிற்றுப்பத்து ஈகை கூறிற்று.

''ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.''

(குறள்-கொடுங்-10)

இது காவல் கூறிற்று.

---

9. அரிசில்கிழார் பெருஞ்சேரல் இரும்பொறையைப் பாடியது. இப்பாடல் கேள்வி கேட்டு என்பது ஓதியதையும் வேள்வி வேட்டனை என்பது வேட்டவாறும் கூறியதாம். அவ்வளவே. மற்றையன அரசன்தேவி புதல்வர்ப் பயந்ததும் வேள்வியை இயற்றிய பார்ப்பானை அவன் தகுதியற்றவனாயிருந்தமையின் காடுசென்று தகுதி பெறுமாறு ஓட்டியமையும் ஆகும்.

10. பரசுராமன் இருபத்தொரு தலைமுறை யரசுகளைக் கொன்று பெற்ற வெற்றியின் அளவிலமைந்ததோ தூண்களில் பசுக்களைக் கட்டிவைத்து வேள்வி செய்த நாள்களின் மிகுதிப்பாடு?

'கடுங்கண்ண கொல்களிற்றான்' என்னும் (14) புறப்பாட்டுட் படைக்கலங் கூறியவதனாற் காத்தல் கூறியவாறுங் காண்க.

''தொறுத்தவய லாரல்பிறழ் நவு
மேறு பொருதசெறு வுழாது வித்துநவுங்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்த
லிருங்க ணெருமையி னிரைதடுக் குநவுங்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதா வாம்ப லார்நவு
மொலிதெங்கி னிமிழ்மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கைப்
பாடல்சான்ற பயங்கெழு வைப்பி
னாடுகவி னழிய நாமந் தோற்றிக்
கூற்றடூஉ நின்ற யாக்கை போல
நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்
விரிபூங் கரும்பின் கழனி புல்லெனத்
திரிகாய் விடத்தரொடு காருடை போகிக்
கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்க
வூரிய நெருஞ்சி நீறாடு பறந்தலைத்
தாதெரு மறுத்த கலியழி மன்றத்
துள்ள மழிய வூக்குநர் மிடறபுத்
துள்ளுநர் பனிக்கும் பாழாயினவே
காடே கடவுண் மேன புறவே
யொள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன
வாறே யவ்வனைத் தன்றியு ஞாலத்துக்
கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்
குடிபுறந் தருநர் பார மோம்பி
யழல்சென்ற மருங்கின் வெள்ளி யோடாது
மழைவேண்டு புலத்து மாரி நிற்ப
நோயொடு பசியிகந் தொரீஇப்
பூத்தன்று பெருமநீ காத்த நாடே.''[11]

(பதிற்று,-13)

---

11. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடியது. பசு மேய்ந்த வயல்கள் ஆரல்மீன் பிறழும் நிலையிலும் பன்றி கிளைத்த வயலில் உழாமலே விதைக்கவும் கரும்புப் பாத்தியில் பூத்த நெய்தல் எருமைகளை வேறிடம் செல்லாதவாறு தடுக்கவும்

இதனுண் மறத்திற் சென்று நாட்டை அழித்தவாறும், அறத்திற் றிரிந்த வேந்தனையழித்து அவன் நாட்டைக் குடியோம் பிக் காத்தவாறுங் கூறிற்று.

> ''கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
> களைகட் டதனொடு நேர்.''
>
> (குறள்-செங்-10)

இது தண்டம்.

இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்[1]—ஓதலும் வேட்டலும் ஈதலும் உழவும் நிரையோம்பலும் வாணிகமுமாகிய அறுவகை இலக்கணத்தையுடைய வாணிகர் பக்கமும், வேதம் ஒழிந்தன ஓதலும் ஈதலும் உழவும் நிரையோம்பலும் வாணிகமும் வழிபாடு மாகிய அறுவகை இலக்கணத்தையுடைய வேளாளர் பக்கமும்.

வாணிகரையும் வேளாளரையும் வேறு கூறாது 'இரு மூன்று மரபினேனோர்' எனக் கூடவோதினார், வழிபாடும் வேள்வியும் ஒழிந்த தொழில் இருவர்க்கு மொத்தலின்.

இனி வேளாளர்க்கு வழிபாடு கொள்ளாது பெண் கோடல் பற்றி வேட்டல் உளதென்று வேட்டலைக் கூட்டி ஆறென் பாருமுளர். வழிபாடு இருவகை வேளாளர்க்கும் உரித்து. இனி

---

துணங்கையாடிய இடத்தில் மகளிர் உதிர்த்த ஆம்பலை முதிய பசுக்கள் உண்ணவும் இப்படிப் பாடல் சான்ற பகைவர் நடுகள் கூற்று உயிர் வவ்விய உடம்புபோலப் புல்லென ஆகுமாறு நீ படையுடன் தங்கிய நீரழிந்த ஊர்கள் கழனிகள் புல்லென விடத்தர் உடை எனும் மரங்கள் முளைய பேய்மகள் நடமாட நெருஞ்சிமுட்கள் பரந்த இடங்களில் உள்ள அழகுகெட்ட மன்றத்துடன் பாழாயின. ஆனால் நீ காத்த நாடுகள் காடு முனிவரிட மாயின. முல்லைநிலங்கள் மகளிரோடு உழவர்க்குரிய வாயின. வழியிடங்களும் அப்படியே. கூலப்பொருள் விற்பார் குடிபுறந்தந்து குடிபுரக்குமவர் பாரம் ஓம்பி செவ்வாய் சென்றவிடத்தில் வெள்ளி செல்லாமல் மழை வேண்டுமிடத்து மழைபொழிய நோயும் பசியும் நீங்கிப் பொலிவு பெற்றது.

1. இவர் கூறும் உரை ஆரியர்க்குரியதாமே யன்றித் தமிழர்க்காகாது.

வேட்டலைக் கூட்டுவார் அரசராற் சிறப்பெய்தாத வேளாளர்க்கே வழிபாடு உரித்தென்பர்.

'பக்கம்' என்பதனான் வாணிகர்க்கும் வேளாளர்க்கும் அன்னியராகத் தோன்றினாரையும் அடக்குக.[2] ஈண்டுப் பக்கத்தாராகிய குலத்தோர்க்குந் தொழில் வரையறை அவர் நிலைகளான் வேறு வேறுபடுதல் பற்றி அவர் தொழில் கூறாது இங்ஙனம் பக்கமென்பதனான் அடக்கினார். இவை[3] ஆண்பால் பற்றி உயர்ச்சி கொண்டன.[4]

(உ-ம்) ''ஈட்டிய தெல்லா மிதன்பொருட் டென்பதே
காட்டிய கைவண்மை காட்டினார்— வேட்டொறுங்
காமருதார்ச் சென்னி கடல்சூழ் புகார்வணிகர்
தாமரையுஞ் சங்கும்போற் றந்து.''[5]

(பெரும் பொருள் விளக்கம்—புறத்திரட்டு. குடிமரபு)

இது வாணிகரீகை

''உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியு
மொருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு
மூத்தோன் வருக வென்னா தவரு

---

2. வாணிகர்க்கு மற்றை வருணத்துப்பெண்ணிடம் தோன்றினாரையும் வேளாளர்கட்கு மற்றை வருணத்துப் பெண்ணுடன் தோன்றினாரையும் அடக்குக.

3. இவை—பார்ப்பனர் பக்கம் அரசர் பக்கம் ஏனோர் பக்கம் என்பன.

4. கூறப்பட்டன யாவும் ஆண்பால் பற்றியே யாம்; பெண்ணின் ஆண் உயர்ந்தமை பற்றி. பெண்பாற்கும் உரியன கொள்ளலாம்.

5. புகார் வணிகர் தாம் தாமரை சங்கு என்ற எண்ணளவாக ஈட்டிய பொருள்கள் யாவும் பிறர்க்குக் கொடுத்தற் காகவே என்பதைக் காட்டுவது போல் தம் கைவண்மையைப் பிறர்க்குக் கொடுத்துக் காட்டினார்.

னறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே.''[6]

(புறம்-183)

இது வேளாளர் ஓதலின் சிறப்புக் கூறியது.

''ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்கண் ணவர்.''

(குறள்-ஈகை-8)

இஃது இருவர்க்கும் ஈதற்சிறப்புக் கூறிற்று.

''போர்வாகை வாய்த்த புரவலரின் மேதக்கா
ரேர்வாழ்ந ரென்பதற் கேதுவாஞ்—சீர்சா
லுரைகாக்கு மன்னர்க் கொளிபெருகத் தாந்தன்
நிரைகாத்துத் தந்த நிதி.''[7]

இது வேளாளர் நிரைகாத்தது.

''உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்.''

(குறள்-உழவு-3)

இஃது உழவுத்தொழிற்சிறப்பு இருவர்க்குங் கூறியது.

''வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.''

(குறள்-நடுவு-10)

இது வாணிகச் சிறப்பு இருவர்க்குங் கூறியது.

---

6. ஆசிரியன் தளர்ந்த இடத்து அவனுக்கு உதவியும் மிக்க பொருள் கொடுத்தும் வழிபடுதலை வெறாமல் கற்றல் நன்று: ஏன்எனின்-பிறப்பால் ஒத்த பல மக்களுள் கல்விச் சிறப்புடையான் பக்கமாகவே தாயும் மனம் விரும்புவாள். அரசகுடிப் பிறந்த பலருள் மூத்தவனை அழையாமல் அறிவுடையனை அழைத்தே அரசும் தரப்படும் மேல் வருணத்தவனும் கற்றகீழ் வருணத்தன் கீழ்ப்படும் ஆதலினால்.

7. சொல்காக்கும் மன்னர்க்குப் புகழ் பெருகுமாறு வேளாளர் தம் நிரைகளைக் காத்துத் தந்த நிதியானது போரில் வெற்றி கொள்ளும் அரசரின் ஏரால் வாழும் வேளாளர் மேம்பாடுடையவர் என்பதற்கு ஏதுவாகும்.

''இருக்கை யெழலு மெதிர் செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன— குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று.''

(நாலடி.-குடி-3)

இது வழிபாடு கூறியது; ஏனைய வந்துழிக் காண்க.

மறுவில் செய்தி மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்— காமம் வெகுளி மயக்கமில்லாத ஒழுகலாற்றினை இறப்பும் நிகழ்வும் எதிர்வுமென்னும் மூவகைக் காலத்தினும் வழங்கும் நெறியான் அமைத்த முழுதுணர்வுடையோன் பக்கமும்;

தேயத்தைக் 'கிழவோ டேஎத்து' (இறையனார்-8) என்றாற் போலக் கொள்க.[8]

(உ-ம்) ''வாய்மை வாழ்ந மூதறி வாள
நீயே யொருதனித் தோன்ற லுறைபதி
யாருமி லொருசிறை யானே தேரி
னவ்வழி வந்தநின் னுணர்வுமுதற் றங்குந்
தொன்னெறி மரபினு மூவகை நின்றன
காலமு நின்னொடு வேறென
யாரோஒ பெருமநிற் றேர்கு வோரே.''[9]

---

8. கிழவோள் தேஎத்து என்றவிடத்துக் கிழவோள் பக்கம் எனப் பொருள் கொண்டாற்போல இங்கும் தேயம் என்பதைப் பக்கம் எனக் கொள்க.

9. பெரும! வாழ்க! மூதறிவாள! நீயே ஒரு தனித் தோன்றலாவாய்; ஒரு பக்கமாகத் தேர்ந்து பார்த்தால் நினக்கொப்பார் யாரும் இல்லை. அப்படி வந்த நினது உணர்வின்கண் தங்கும் பழைய முறைமையுடைய மரபும் மூவகையாகச் சிறப்பு நிகழ்வு எதிர்வு என நின்ற காலமும் நினக்கு மாறுபட்டன எனத் தேர்வோர் யார்? யாரும் இலர்.

''வாடாப் போதி மரகதப் பாசடை
மரநிழ லமர்ந்தோ னெஞ்சம் யார்க்கு
மருளின் றீந்தே னிறைந்துநனி ஞெகிழ்ந்து
மலரினு மெல்லி தென்ப வதனைக்
காமர் செவ்வி மாரன் மகளிர்
நெடுமா மழைக்கண் விலங்கிநிமிர்ந் தெடுத்த
வாளும் போழ்ந்தில வாயின்
யாதோ மற்றது மெல்லிய வாறே.''[1] இதுவுமது.

கலசயோனி[2]யாகிய அகத்தியன் முதலியோரும் அறிவ ரென்றுணர்க.

நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்—அவ்வறிவர் கூறிய ஆகமத்தின் வழிநின்று வீடுபெற முயல்வார்க்கு உரியவாகிய எண் வகை மார்க்கத்துத் தவம்புரியுங் கூறும்.

'வழக்கு' என்றதனான் அந்நாலிரண்டுந் தவம் புரிவார்க்கு உரியனவுந் தவஞ்செய்து யோகஞ் செய்வார்க்கு உரியனவுமென இருவகையவென்று கொள்க.

அவற்றுள் தவஞ்செய்வார்க்கு உரியன:— ஊணசையின்மை, நீர்நசையின்மை, வெப்பம் பொறுத்தல், தட்பம் பொறுத்தல், இடம் வரையறுத்தல், ஆசனம் வரையறுத்தல், இடையிட்டு மொழிதல், வாய்வாளாமை[3] என எட்டும்; இவற்றிற்கு உணவி னும் நீரினுஞ் சென்ற மனத்தைத் தடுத்தலும், ஐந்தீ நாப்பணும் நீர்நிலையினும் நிற்றலும், கடலுங் காடும் மலையும் முதலிய வற்றில் நிற்றலும், தாமரையும் ஆம்பலும் யாமையும் முதலிய

---

1. போதி மரநிழலமர்ந்த புத்தனின் நெஞ்சமானது யாவர்க் கும் அருளாகிய தேன் நிறைந்து நெகிழ்ந்து மலரைக் காட்டிலும் மெல்லியதாய் இருந்தது என்பர்: அந்நெஞ்சத்தை மாரன் கணை பாயும் மகளிரின் கண் களாகிய வாள்களும் பிளக்கவில்லை என்றால் அது மெல்லியதாகியது யாது?

2. கலசம்— குடம்; யோனி— பிறப்புறுப்பு. குடத்தில் தோன்றியவன் ஆதலின் கலசயோனி எனப் பெயர் பெற்றான். கல்சமாகிய பிறப்புறுப்பின் வழிப்பிறந்தவன் என்பது பொருள். இது ஆரிய அகத்தியன் கதையிற் கண்டது. தமிழகத்தியர் கலசயோனி அல்லர்.

3. வாய் வாளாமை— வாய் பேசாமை.

ஆசனத்திருத்தலும், உண்டற்காலை உரையாடாமையும், துறந்தகாற்றொட்டும் வாய்வாளாமையும் பொருளென் றுணர்க.

இனி யோகஞ்செய்வார்க்குரியன, இயமம் நியமம் ஆசனம் வளிநிலை தொகைநிலை பொறைநிலை நினைதல் சமாதி என எட்டும்; இவற்றை,

''பொய்கொலை களவே காமம் பொருணசை
யிவ்வகை யைந்து மடக்கிய தியமம்.''

''பெற்றதற் குவத்தல் பிழம்புநனி வெறுத்தல்
கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை
பூசனைப் பெரும்பய மாசாற் களித்தலொடு
நயனுடை மரபி னியம மைந்தே.''

''நிற்ற லிருத்தல் கிடத்தல் நடத்தலென்
றொத்த நான்கி னொல்கா நிலைமையோ
டின்பம் பயக்குஞ் சமய முதலிய
வந்தமில் சிறப்பி னாசன மாகும்.''

''உந்தியொடு புணர்ந்த விருவகை வளியுந்
தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை.''

''பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாம
லொருவழிப் படுப்பது தொகைநிலை யாமே.''

''மனத்தினை யொருவழி நிறுப்பது பொறைநிலை.''

''நிறுத்திய வம்மன நிலைதிரி யாமற்
குறித்த பொருளொடு கொளுத்த னினைவே.''

''ஆங்கனம் குறித்த வாய்முதற் பொருளொடு
தான்பிற னாகாத் தகையது சமாதி.''

என்னும் உரைச்சூத்திரங்களா[1]னுணர்க.

'பக்கம்' என்றதனான், முட்டின்றி முடிப்போர் முயல்வோர் என்பனவும்,

---

1. உரைச்சூத்திரங்கள் : உரை — இலக்கணம்—இயமம் முதலியவற்றுக்கு இலக்கணம் கூறும் சூத்திரங்கள்.

''நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்
சோர்சடை தாழச் சுடரோம்பி—யூரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி.''

(பு. வெ. வாகை-14)

என்பனவுங் கொள்க.

''ஒவத் தன்ன விடனுடை வரைப்பிற்
பாவை யன்ன குறுந்தொடி மகளி
ரிழைநிலை நெகிழ்த்த மள்ளர்க் கண்டிடுங்
கழைக்க ணெடுவரை யருவி யாடிக்
கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ மாட்டிப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே.''

(புறம்-251)

''வைததனை யின்சொலாக் கொள்வானு நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானு—மூறிய
கைப்பதனைக்[1] கட்டி[2]யென் றுண்பானு மிம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்.''

(திரிகடுகம்—48)

''ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து.''

(குறள்—அடக்க-6)

''ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.''

(குறள்—அவா-10)

''நீஇ ராட னிலக்கிடை கோட
றோஒ லுடுத்த றொல்லெரி யோம்ப
லூரடை யாமை யுறுசடை புனைதல்

1. கைப்பு — கசப்பு.

2. கட்டி — கற்கண்டு.

காட்டி லுணவு கடவுட் பூசை
யேற்ற தவத்தி னியல்பென மொழிப''

என வரும். ஏனைய வந்துழிக் காண்க.

அறிமரபிற் பொருநர்கட் பாலும்—தாந்தாம் அறியும் இலக்கணங்களாலே போர் செய்வாரிடத்துக் கூறுபாடும்:

அவை சொல்லானும் பாட்டானுங் கூத்தானும் மல்லானுஞ் சூதானும் பிறவாற்றானும் வேறலாம்.

(உ-ம்) ''விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.''

(குறள்—சொல்வன்-8)

இது சொல்வென்றி,

''வண்டுறையுங் கூந்தல் வடிக்கண்ணாள் பாடினாள்
வெண்டுறையுஞ் செந்துறையும் வேற்றுமையாக்
—கண்டறியக்
கின்னரம் போலக் கிளையமைந்த தீந்தொடையா
ழந்நரம்பு மச்சுவையு மாய்ந்து.''

(பு. வெ. ஒழிபு-18)

இது பாடல்வென்றி.

''கைகால் புருவங்கண் பாணி நடைதூக்குக்
கொய்பூங்கொம் பன்னாள் குறிக்கொண்டு—பெய்பூப்
படுகளிவண் டார்ப்பப் பயில்வளைநின் றாடுந்
தொடுகழன் மன்னன் றுடி.''

(பு. வெ. ஒழிபு-17).

இஃது ஆடல்வென்றி.

''இன்கடுங் கள்ளி னாமூ ராங்கண்
ணைந்துடை மல்லன் மதவலி முருக்கி
யொருகான் மார்பொதுங் கின்றே யொருகால்
வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே
நல்கினும் நல்காஅ னாயினும் வெல்போர்ப்
போரருந் தித்தன் காண்கதி லம்ம

பசித்துப் பணைமுயலும் யானை போல
விருதலை யொசிய வெற்றிக்
களம்புகு மள்ளர்க் கடந்தடு நிலையே.''

(புறம்-80)

இது மல்வென்றி.

''கழகத் தியலுங் கவற்றி னிலையு
மழகத் திருநுதலா ளாய்ந்து—புழகத்துப்
பாய வகையாற் பணிதம் பலவென்றா
ளாய வகையு மறிந்து.''

(பு. வெ. ஒழிபு-16)

இது சூதுவென்றி.

அனைநிலை வகையோடு ஆங்கு எழுவகையில் தொகை நிலை பெற்றது என்மனார் புலவர்—அக்கூறுபட்ட ஆறு பகுதியும் நிலைக்களமாக அவற்றுக்கண் தோன்றிய வேறுபட்ட கூறுபாட்டோடு முன்னைய ஆறுங் கூட்டி அவ்வெழுகூற்றல் துறைபல திரண்ட தொகை பெற்றது அவ்வாகைத்திணை என்று கூறுவாராசிரியர் என்றவாறு.

அனையென்றது சுட்டு. நிலை[1] நிலைக்களம், நிலையது வகை. ஆங்கென்றதனை அனை நிலைவகையொடென்பதன்கண் வகைக்கு முன்னே கூட்டுக ஒடு, எண்ணிடைச் சொல்லாதலின் முன்னெண்ணியவற்றொடு கூட்டி ஏழாயிற்று.

இனிப் பார்ப்பனப் பக்கத்து வகையாவன: பார்ப்பார்க்குப் பார்ப்பனக் கன்னியிடத்துக் கற்பு நிகழ்வதற்கு முன்னே களவில் தோன்றினானும், அவள் பிறர்க்குரியளாகிய காலத்துக் களவில் தோன்றினானும், அவள் கணவனை இழந்திருந்துழித் தோன்றினானும், ஒழிந்த மூவகை வருணத்துப் பெண்பாற்கண்ணும் இவ்வாறே தோன்றினாரும், அவரவர் மக்கட்கண் அவ்வாறே பிறழத் தோன்றினாருமாகிய சாதிகளாம். இன்னோருந் தந்தந் தொழில் வகையாற் பாகுபட மிகுதிப்படுத்தல் வாகைத் திணையாம். ஒழிந்த பகுதி ஐந்தற்கும் இஃதொக்கும். இன்னும் பெண்

1. அனைநிலை—அந்நிலை.

பாலுயர்ந்து ஆண்பாலிழிந்த வழிப் பிறந்த சாதிகளும்[2] அனைநிலை வகைப் பாற்படும். யோகிகளாய் உபாயங்களான் முக்காலமுமுணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன்றேயத்து அனைநிலை வகையோராவர்; அவர்க்கு மாணாக்கராகித் தவஞ்செய்வோர் தாபதப் பக்கத்தாராவர். தகர்வென்றி பூழ்வென்றி கோழிவென்றி முதலியன பாலறி மரபிற் பொருநர்கண் அனைநிலை வகையாம்.

ஒரு வரையறைப்படாது பலதுறைப்படுவனவற்றையெல்லாந் தொகைநிலையெனத் தொகுத்து ஒரோவொன்றாக்கிக் கூறினார், தொகுத்துக் கூறலென்னும் உத்திவகையான். பார்ப்பனவாகை அரசவாகை யென்றோதினால் அவற்றின் பகுதி அடங்காமையிற் குன்றக் கூறலாமாதலின் இங்ஙனமோதினார்.[3] காட்டாதவனவற்றிற்கு உதாரணங்கள் வந்துழி வந்துழிக் காண்க.

(20)

**சோம. இளவரசு**

சூத்திரம்:- 20.

அறுவகைப்பட்ட......... புலவர்

கருத்து:- இது, வாகையின் சிறப்பு வகைகளைக் கூறுகிறது.

பொருள்:- அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்— ஆறு வேறுவகை மரபினரான பார்ப்பாரின் சிறப்பியல்பின் சார்பாயும், ஐவகை மரபின் அரசர் பக்கமும்— ஐவேறு குடிவகையினரா யாளும் மன்னர் இறைமைத் திறமையின் சார்பாயும்; இரு மூன்று மரபின் ஏனோர் பக்கமும்— அறுவேறு மரபினரான மற்றைய தமிழக மக்களின் சிறப்பியல்களின் சார்பாயும்; மறுவில் செய்தி மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்—

---

2. பிரதிலோமர் என்னும் சாதியினர். மேற்சாதி ஆடவர்க்குக் கீழ்ச்சாதிப் பெண்டிர் பெற்ற மக்கள் அநுலோமர் என்றும் கீழ்ச்சாதி ஆண்களுக்கு மேற்சாதிப் பெண்டிர் பெற்ற மக்கள் பிரதிலோமர் என்றும் கூறுவர் ஆரியர்.

3. இங்ஙனம் ஓதினார்—அறுவகைப்பட்ட ஐவகை மரபின் இரு மூன்று மரபின் எனத்தொகை கொடுத்து ஓதினார்.

வழுவற்ற வகையால் நிகழ்ச்சிகளை வெயில் பனியெனும் தன்மை யால். வேறுபட்ட முக்காலத்திற்கு மேற்ப முட்டின்றிக் கடைபோக நடத்தி முடிக்கும் அறிஞன் திறல்சார்பாயும்; நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்— எட்டுவகையில் நோற்பார் நோன்பின் சார் பாயும்; பாலறிமரபில் பொருநர் கண்ணும்—அறத்தின் பாகு பாடறிந்த முறையாற் பொருவார் போர்த் திறத்தின் சார்பாயும்; [இங்கிதனை இரட்டுற மொழிதலாக்கி, ஒப்ப நடிப்பவர் பொருநுத் திறலையும் குறிப்பதாகக் கொள்ளுதலும் கூடும்; (பொருந்—ஒப்பு; போல நடித்தல்)] அனைநிலை வகையொடு— அத்தன்மைய நிலையில் வேறலின் கூறாய் வீறுதரும் பிறவகை வினைவிறற்றுறையுடனே; ஆங்கெழு வகையிற் றொகை நிலை பெற்ற தென்மனார் புலவர்— ஏழு வகையாகத் தொகுக்கப்படும் தன்மையுடையது (வாகைத்திணை) என்பர் புறநூற் புலவர்.

குறிப்பு:- தொகைநிலை பெற்றது என்ற வினைக்கேற்ப ''வாகைத்திணை'' எனும் எழுவாய் கொண்ட பொருட்டொடர் பால் முன்னைச் சூத்திரத்திலிருந்து கொள்ளப்பட்டது. 'ஆங்கு' உரையசை புலவர் என வாளா கூறினும், இடப்பொருட் பொருத் தம் நூற்போக்குகளுக்கேற்பப் 'புறநூற் புலவர்' என உரை கூறப்பட்டது.

'அறுவகைப்பட்ட பார்ப்பனர்' என்றதனால் தொல்காப்பியர் காலத் தமிழகத்தில் பார்ப்பார் மரபால் அறுவேறு பிரிவுடையார் என்பது தெளிவு. இதையடுத்து அரசர் ஏனோர்களுக்கு மரபால் வகை எண் கூறப்படுதலின், பார்ப்பனரின் அறுவகையும் அவர் தம் மரபு பற்றியதேயாகும். மரபுச்சொல் குடிவகை குலமுறை வழக்காறுகளைக் குறிக்கும்.

இனி, ஆறு தொழிலுடைமையால் பார்ப்பார் அறுவேறு வகையினராகாமை வெளிப்படை. ஓதுவியாது ஓதும் வகையார், ஓதாது ஓதுவிக்கும் வகையார், என்ற முறையில் ஒவ்வொரு தொழில் வகையால் பார்ப்பாரை வெவ்வேறு மரபினராய் வகுப்பது யாண்டும் கேட்கப்படாதது.

இன்னும் இருபிறப்பாளருள் ஆறு தொழிலில் பின்னோர்க் கின்றிப் பார்ப்பாருக்குச் சிறப்புரிமைய மூன்றே:- ஏற்றல், வேட்பித்தல், ஓதுவித்தல். இவை வீறுதரும் பெற்றியதன்றா தலின், வாகைவகை யாகா. கொடைக்கு மாறாகக் கொள்ளுத லும் உயிர் செகுத்துண்டு வேட்டலும், வேதனத்துக்கு ஓதுவித்த

லும் வெற்றிக்குரிய வாகையாகத் தமிழர் கொள்ளார். அவை வாகை வகையாய்ப் பண்டைச் சான்றோர் பாடாமையானும், இங்குக் கருதற்கில்லை. எனவே, இக்காலப் பார்ப்பார்—எண்ணாயிரவர்— மூவாயிரத்தார்— வடமர்— சோழியர்— என வெவ்வேறு மரபினராதல் போல, முற்காலத் தமிழகத்தும் பார்ப்பார் மரபால் ஆறுவகை பிரிந்தவராதல் இயல்பு. இனி, அறுவகை வைதிக மத மரபாக அறுவகைப்பட்டவராதலும் கூடும். எனைத்து வகையாயினும், இங்கு மரபால் அறுவகையிற் பிரிவுடைய பார்ப்பார் பரிசு குறிப்பதல்லால், அவர் அனைவருக்கும் பொதுவாகும் வினையாலவரை அறுவகைப்படுத்தல் தொல்காப்பியர் கருத்தன்மை ஒருதலை. துவக்கத்தில் தென்தமிழ் வரைப்பில் வந்து புகுந்த வம்பப் பார்ப்பார் மிகச் சிலராவர். மரபாலன்னோர் அறுவகையராதல் அக்காலத் தனைவருமறிந்த தொன்றாகலின் வகை விரியாது அதன் தொகை கூறப்பட்டது, யாவருமறிவதைக் கூறுதல் மிகையாதலின்; இருசுடர் மூவேந்தர் நானிலம் என்புழி. சுடர்வகை வேந்தர் குடிவகை நிலவகைகளை விரித்தல் வேண்டாதது போல, இதிற்பின் ''ஐவகை மரபின் அரசர்'' 'இரு மூன்று மரபின் ஏனோர்' என அனைவரும் அறிந்த அவர் மரபு வகை விரியாது தொகை எண்ணாற் குறிப்பது போல, அக்காலம் யாவருமறிந்த பார்ப்பனர் மரபுவகை ஆறாதலின் எண் மட்டும் கூறப்பட்டது.

வேந்தர் தம் வாகைக்குரியவை போர்வென்றி கொடை செங்கோற் செல்வி போல்வன. அதுவே போல் ஏனைய தமிழ் மக்களுக்கு அவரவர் கொண்ட தவறறு தொழில் எல்லாம் வாகைக் குரியவாகும். ஐவகை மரபின் அரசர் என்றது, சேர, சோழ, பாண்டியராவார். முடிவேந்தர் குடிமூன்று, ஆளுதற்குரிய வேளிர் குடி ஒன்று, மற்றைய குறுநில மன்னர் குடிமரபொன்று, ஆக மன்னவர் ஐவகை மரபினராய்ப் பண்டைத் தமிழகத் தாண்டனராதலின்; 'அரசர்' எனப் படுதலான், ஈண்டுக் குறிப்பது ஆளுமன்னரை மட்டுமே. தமிழ் வழக்கில் ஆளாத அரசர் என்றொரு சாதியில்லை. அமர் தொழில் தறுகண் மறவர் அனைவருக்கும் பொது உரிமை. அத்தொழில் புரிபவர் பொதுநராவதல்லால் அரசர் எனப்படார்.

இனி 'இருமூன்று மரபின் ஏனோர்' என்றதும் தமிழர் மரபு வகையே குறிப்பதாகும். பண்டைத் தமிழகத்தில் மக்கள் மரபாலும் தொழிலாலும் ஒத்த உரிமையுடன் வாழ்ந்தவர்கள்; அவரிடைப் பிறப்பா லுயர்வு தாழ்வுடைமையும், விரும்பும் வினை

புரியும் உரிமை விலக்கும் வழக்காறில்லை. தமிழர் வாழ்க்கை முறை ஒழுக்க வழக்கம் விளக்கும் தொல்காப்பியரின் அகப்புறத் திணை யியல்களில் யாண்டும் வடநூல் சுட்டும் வருணவகைக் குறிப்பு ஒரு சிறிதுமில்லை. இவ்வுண்மை 'பெயரும் வினையு மென்றா யிருவகைய எனும் சூத்திர உரையில் விரித்து விளக்கப் பட்டது. அதனாலும், இங்குத் தொழிற்றுறையில் வாகை சூடுவோரின் மரபுவகையே கூறுதலானும், 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்' வழக்கன்றிப் பிறநூல் மரபுகள் பேணாமையே தொல்காப்பியரின் துணிபாதலானும், ஈண்டு நிலம் பற்றிய தமிழர் மரபுவகை சுட்டுவதே கருத்தாதல் தேற்றமாகும். தமிழரின் தாவில் கொள்கை வினையனைத்தும் வாகைக்குப் பொருளாக, வெற்றி விரும்பு மக்களின் மரபு வகைகளையே இங்கு எண்கள் சுட்டுவது ஒருதலை. ஆயர், குறவர், உழவர், பரவர் என முல்லை முதல் நானில மக்களும், நிலக்குறிப்பின்றி யாண்டுமுள்ள 'வினைவலர்', 'ஏவன் மரபினர்' என்றிருவகை யின் மக்களுமாக மரபால் அறுவகைப்பட்ட தமிழ்க் குடிகள் உண்மையைத் தொல்காப்பியரே அகத்திணை யியலில் தெளித்து ளாராதலின், தமிழர் புறவொழுக்கம் கூறுமிவ்வியலின் இச் சூத்திரத்தும் தமிழரை இரு மூன்று வகையின் ஏனோர் என்றடங்கக் குறிப்பதே அவர் கருத்தாமெனத் தேர்வது பொருத்த மாகும். அகத்திணை குறிக்கும் 'அடியோர்' பிறர்போல் இன்ப ஒழுக்க மேற்பாராயினும், தாம் பிறர் உடைமையாய்த் தனிவினை யுரிமை தமக்கிலராதலின், வாகைக் குரியா ராகாரென்பது வெளிப்படை. அவரொழியத் தமிழர் அறுவகையாரே வாகைக் குரியர்.

இப்பழந் தமிழ் மரபுகள் கருதாமல், முன் உரைகாரர் இங்கு முதன் மூன்றடிகளும் வடநூல் கூறும் வருண வேறுபாடுகளை அவரவர்க் கறுதியிட்டு வகுத்த தொழிற்றொகுதியுடன் இங்குக் குறிப்பன போலக் கொண்டு பொருந்தாப் பொருள் கூறி யிடர்ப் படுவர். தொல்காப்பியரின் துணிந்த நோக்கும், சூத்திரச் சொற் றொடர்ப் போக்கும் தெற்றெனத் தெளிக்கும் செம்பொருளைச் சிந்தியாமல், பழங்கால வழக்குகளை யறியாததால் தாமறிந்த தங்காலப் பிறநூற் கொள்கைகளை அறப்பழந் தமிழ்நூலுட் புகுத்த முயன்றவர் மயங்கலாயினர். இங்கு வருண கரும வரை யறை விளக்குவது கருத்தாமேல், அதைத் தெளிக்கும் சொற் பெய்தல் எளிதாகும்; அதற்கு மாறாகத் தொழிற் சுட்டொழித்துக் குடிசுட்டும் 'மரபு'ச் சொற் பெய்தமைத்த சிறப்பின் குறிப்புச் சிந்திக்கற்பாற்று.

> ''அறுதொழி லுடைய பார்ப்பனர் பக்கமும்,
> ஐவகைத் தொழிலுடை யரசர் பக்கமும்
> இருமூன்று தொழிலுடை ஏனோர் பக்கமும்''

என ஏற்ற தொழில் சொற் கூற்றால் விளக்கும் ஆற்றலின்றி இயைபினை மறந்து வேற்றுப் பொருள் விளக்கும் மரபுச் சொற் பெய்தனரென்று கூற யாரும் துணியார். இன்னும் இங்கு வருண வகை விளக்குவதே கருத்தாயின், உரிமையுடைய இருபிறப்பாளர் மூவரையுமுறையே கூறிப் பிறகு அவர்க்குரிய அடிமைகளாய் உரிமையற்ற நான்காம் வருணத்தாரையும் வரிசை முறையே வகுத்துக் கூறுவர். அதைவிட்டுப் பார்ப்பாரையும் ஆளும் வேந்தரையும் மட்டும் சுட்டி, வைசியரையும் ஆளாக்கத்திரியரையும் அறவே விட்டு, அந்தணரும் அரசரும் அல்லார் எல்லாரையும் சூத்திரருடன் சேர்த்து ஓராங் கெண்ணி ஒரு வகுப்பாக்கி ஒத்த வாகைத் தொழிலுடைய ''ஏனோர்'' எனத் தொகுத்துச் சுட்டிய தொன்றே வருண தரும வகையெதுவும் கருதுங் குறிப்பிங்கின்மையினை வலியுறுத்தும். அன்றியும், தமிழகத்தில் நான்கு வருணம் என்று மின்மை யாவருமறிந்த உண்மை. தமிழரொடு கலவாத் தருக்குடைய பார்ப்பார் தமிழருள் கத்திரியர் வைசியரென யாரையும் தழுவினதில்லை. உணவும் மணமும் ஓத்தும் வேள்வியும் முப்புரிச் சடங்கும் இருபிறப் பெய்தலும் இன்னபிறவும் தம்மரபினர்க்கு ஒத்த உரிமையைத் தமிழருள் யார்க்கும் பார்ப்பார் தாரார். இல்லாக் கற்பகம் பொல்லா யாளிகள் கதைக்கப்படுதல் போல், இடை இருவருணமும் வடவர் புனைந்த நூற்கதையன்றித் தமிழக வரைப்பில் வழக்காறில்லை.

இன்னும், பார்ப்பாரல்லா மற்றைய மூன்று வருணத்தார்க்கும் மனு முதலிய வடநூல்கள் விதிக்கும் தொழில் வகைகள், இச்சூத்திரப் பழைய உரைகாரர் அவரவர்க்குக் காட்டும் தொழில் வகைகளுடன் முற்றும் முரணுதலானும், அவருரை பொருந்தாமை தேறப்படும். தமிழரெல்லாரும் கடைவருணச் சூத்திரர் என்பதே பார்ப்பனர் துணிவு. மற்றைய மேலோர் மூவருக்கும் அடிமைகளாய்த் தொண்டு புரிவதொன்றே அவர்க்குரிய தொழில்; பிற தொழிலெதுவும் தமக்குத்தம் பயன்கருதி மேற் கொள்ளு முரிமை சூத்திரர்க்குச் சிறிதுமில்லை. ஒத்த உணவு மணம் ஓதல் வேட்டல் தொழில் முதலிய ஆரிய மக்களுரிமை எதுவுமில்லா இழிந்த அடிமைச் சூத்திரரை இருபிறப்புடைய வைசியரோடெண்ணி, வைசியர் தொழில்களைச் சூத்திரருக்[illegible]த்தாகக[illegible]மன்றி, தரும நூல்களில் வைசியருக்கும் விலக்[illegible]ய அறுதொ[illegible]லுடை[illegible]

யையும் சூத்திரரான நான்காம் வருணத் தமிழருக்குத் தந்து கூறும் உரை ஆரிய நூல்களொடு முரணித் தமிழ் மரபு மழித்த தாகும். வரலாற்றுண்மை சிறிதுமறியாது வேளாளருள்ளிட்ட தமிழ்ப் பெருமக்களை எல்லாம் கடைக் கீழடிமைச் சூத்திர வருணத்தவரெனக் கூறுந் துணிவு அறிவறம் வெறுக்கும் வெற்றுரையாகும்.

இனி, பெரும்பொழுதாறும் வெயில், மழை, பனி என்ற மூன்றிலடங்கும். மூவகைக் காலமும் ''நெறியினாற்றிய அறிவன்'' என்றது, தன்மையால் முழுதும் வேறுபட்ட வெயில் மழை பனி என்ற மூவகைக் காலங்களின் நிலைமையும் விளைவும் நுண்ணிதினுணர்ந்து காலத்தாலாற்றுவ ஆற்றிப் பயன்கொள்ளும் மதிநுட்பம் நூலோடுடைய அமைச்சரைக் குறிப்பதாகும்.

நாளும் கோளும் கண்டதுபோலக் கொண்டு கூறி வயிறு வளர்ப்போர், கேட்போர் விரும்பும் எதிர்கால நன்மைகளைப் புனைந்து கூறித் தந்நலம் பேணுமளவினர். அவரை எதிர்கால விளைவுகள் எடுத்துக் கூறும் கணிகளெனப்படுவதன்றி, மூவகைக் காலமும் முறையின் ஆற்றிய அறிவர் என்பது அமையாது. அறிவோடமையாது ''ஆற்றுடலும்'' கூறுதலால், கணிகளின் வேறாய், வருவன சூழ்ந்து செயல்வகை தேர்ந்து ஆய்ந்தாற்றும் அறிஞரான அமைச்சரைக் குறிப்பதே கருத்தாதல் தேற்றம்.

தாபதவழக்கு நாலிரண்டாதலு மக்கால வழக்கு, தாபதர்— தவம் செய்வார்; [தவம்—உற்ற நோய் நோற்றல். (நோற்றல்— பொறுத்தல்). உண்ணாமை, உறங்காமை, போர்த்தாமை, வெயிலிலிருத்தல், நீரில் நிற்றல், காமங்கடிதல், வறுமை பொறுத்தல், வாய்மையால் வருந்தல் போலத் திண்ணி யோருள்ளங் கண்ணிய வகையின.]

''அனை நிலைவகைய'' என்பதில், ''அனைய'' எனுஞ் சொல் செய்யுளோசை நோக்கி ''அனை'' எனக் குறுகிற்று. அவ்வகைப் பிற வாகைக்குரியவை ஆடல், பாடல், ஓவியமெழுதல் போல்வன. தேரும் குதிரையும் யானையு மூரும் திறல்வகை யெல்லாம் இதனுள் அடங்கும். இவை வாகை வகைகளே. வாகைத் துறைகளை அடுத்த சூத்திரம் கூறும்.

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் வாகைத்திணைப் பாகுபாடு சில கூறுகின்றது.

(இ-ள்)

அறுவகைப்பட்ட பார்ப்பனர்:

1. ஓதல் அந்தணர்—ஆசிரியத் தொழிலர்
2. வேள்வி அந்தணர்—நாடு நலங்கருதி வேள்வி செய்பவர்.
3. முனிவர் அந்தணர்—நூல்கரகம் முக்கோல் மணையுடன் திரிபவர்.
4. ஆறறி அந்தணர்—அவரவர் ஆற்றவேண்டிய அறத்தாறு அறிந்து கூறுபவர்.
6. ஏவல் அந்தணர்—ஏவிய தொழில் செய்பவர்.

ஐவகை அரசர்:

1. பேரரசர் 2. அரசர் 3. குறுநில மன்னர், 4. அமைச்சர் 5. படைத்தலைவர். அமைச்சரும் படைத்தலைவரும் அரசுத் தொழிலினர் ஆதலின் அரச வகையினராவர்.

வணிகர் அறுவர் வேளாளர் அறுவர் ஆகியவரை இரு மூன்று வகையின் ஏனோர் என்றார் ஆசிரியர்.

வணிகர் அறுவர்:

1. கூலவாணிகர் (கூலம்—நெல், பயறு முதலியன)
2. அறுவை வாணிகர் (அறுவை—ஆடை)
3. பொன் வாணிகர் (வண்ணக்கர் எனப்படுவர்)
4. நறும் பொருள் வாணிகர்
5. உப்பு வாணிகர் (உமணர் எனப்படுவர்)
6. பல பொருள் வாணிகர்

வேளாளர் அறுவர்:

நால்வகை நில உழவர்கள், மட்கலம் செய்வார். இசை வேளாளர். மற்றையவற்றுக்கு உரையாளர் உரையே கொள்க.

75. கூதிர் வேனில் என்றிரு பாசறைக்
காதலின் ஒன்றிக் கண்ணிய வகையினும்
ஏரோர் களவழி அன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியுந் தேரோர்
வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்
ஒன்றிய மரபிற் பின்தேர்க் குரவையும்
பெரும்பகை தாங்கும் வேலி னானும்
அரும்பகை தாங்கும் ஆற்ற லானும்
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்
ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்த்துத்
தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி யானும்
ஒல்லார் இடவயிற் புல்லிய பாங்கினும்
மகட்டி னானும் மாவி னானுந்
துகள்தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்
கடிமனை நீத்த பாலின் கண்ணும்
எட்டுவகை நுதலிய அவையகத் தானும்
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்
இடையில் வன்புகழ்க் கொடையி னானும்
பிழைத்தோர்த் தாங்குங் காவ லானும்
பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்
அருளொடு புணர்ந்த அகற்சி யானும்
காமம் நீத்த பாலி னானுமென்று
இருபாற் பட்ட ஒன்பதின் துறைத்தே.

(17)

ஆ. மொ. இல:

76. Being engaged in war, staying in the warcamp during Autumn and Summer seasons the heart being set upon his love-lady; the warriors upon chariots having got success on the battle field besides the success of the ploughmen on the corn-field;

---

1. கட்டில் நீத்த. நச். பாடம்.

The 'Kuravai' dance in front of the chariot of the king who has conquered the warrior on chariots, the 'Kuravai' dance in the rear of the chariot of the same king; the spear which prevents great enemy; the might which prevents the great enemy; the sphere of great hero who does not mind his life; the sacrifice of the life by one who has fulfilled one of his vows; making the foes to feel shame and regurding highly the great; moving friendly with the enemies; the role of great men who use bulls and horses (the peasants and the warriors); the nature of the abdication of the throne; the state of having eight virtues for being member of the assembly, the state of having good conduct in unassailed manner; the nature of giving liberally which brings everlasting fame; the rule of safe-guarding the interest of those who have mis behaved; the way of getting wealth; the renunciation undertaken on account of mercy; and the state of having no desire:- these are the divisions in two parts each having nine. (belonging to the theme of victory—'Vahai')

பி. இ. நா.

பு. வே. மா. 8.

சீர்சால் வாகை வாகை யரவம்
அரச வாகை முரச வாகை
மறக்கள வழியொடு களவேள் வியேயே
முன்தேர்க் குரவை பின்தேர்க் குரவை
பார்ப்பன வாகை வாணிக வாகை
வேளாண் வாகை பொருந வாகை
அறிவன் வாகை தாபத வாகை
கூதிர்ப் பாசறை வாடைப் பாசறை
அரச முல்லை பார்ப்பன முல்லை
அவைய முல்லை கணிவன் முல்லை
மூதில் முல்லை ஏறாண் முல்லை
வல்லாண் முல்லை காவல் முல்லை

பேராண் முல்லை மறமுல் லையே
குடைமுல் லையொடு கண்படை நிலையே
அவிப்பலி என்றா சால்பு முல்லை
கிணைநிலை யேனைப் பொருளொடு புகறல்
அருளொடு நீங்கல் உளப்படத் தொகைஇ
மூன்றுதலை யிட்ட மூவி ரைந்தும்
வான்தோய் வாகைத் திணையது வகையே.

**வீர. 104**

நாற்குலப் பக்கமும் காலம் களவழி நற்குரவை
ஆற்றல்வல் லாண்வேட்கை யார்பக்கம் மேன்மை
யரும்பொருளே
தோற்றிய காவல் துறவுகொடையடையாளர் பக்கம்
மாற்றியவேற் றுமையோடு மற்றும் இவை வாகையிலே.

**இல. வி. புற. 15**

...ஐவகை மரபின் அரசர் வாகையும்
மொய்கழ லான்பதி முரசுநிலை யுரைத்தலும்
மன்னனை உழவன் எனுமறக் களவழியும்
மன்னவன் அணங்கார் அடுகளம் வேட்டலும்
வென்ற வேந்தன் மீளியந் தேர்முன்
நின்றுபே யாடல் நிகழ்த்திய குரவையும்
பெய்கழல் வேந்தன் பிறங்கொலித் தேர்ப்பின்
மொய்வளை விறலியர் வயவரொ டாடலும்
அறுவகைப்பட்ட பார்ப்பன வாகையும்
இருமூன்று மரபின் ஏனோர் வாகையும்
புகழொடு பெருமையும் நோக்கி யாரையும்
இகழேல் என்ற பொருந வாகையும்
முக்கால நிகழ்வும் முறையுளி அறியும்
தக்கோன் நிலைபுகல் அறிவன் வாகையும்
நாலிரு வழக்கின் தாபத வாகையும்
கூதிர் வாடை என்றிரு பாசறைக்
காதலின் ஒன்றிக் கண்ணிய நிலைமையும்
..............................................
இல்லும் பதியும் இயல்பும் கூறி
வல்லோன் மிகுத்த வல்லாண் முல்லையும்
..............................................

அடல்கெழு மறவர் அவிப்பலி கொடுத்தலும்
..........................................
சான்றோர் நெறிபுகல் சால்பு முல்லையும்
..........................................
கவ்வைநோய் யாக்கை கழியுமுன் உலகத்து
அவ்வியம் நோக்கி அருளொடு நீங்கலும்
..........................................

## இளம்பூரணர்

75. கூதிர் வேனில்...... துறைத்தே.

இது வாகைத் துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) கூதிர்ப் பாசறை முதலாகச் சொல்லப்பட்ட பதினெட்டுத் துறையும் வாகைத்துறையாம். எனவே, மேற் சொல்லப்பட்ட ஏழ் வகையும் திணையென்று[1] கொள்க.

கூதிர் வேனில் என்று இரு பாசறை காதலின் ஒன்றி கண்ணிய வகையும்—கூதிர்ப்பாசறையும் வேனிற் பாசறையும் என்று சொல்லப்பட்ட இருவகைப் பாசறைகளையும் போரின்மீது கொண்ட காதலாற் பொருந்திக் கருதிய போர்நிலை வகையும்.

இவை இரண்டும் ஒரு வகை.[2] (இச்சூத்திரத்தில் வரும் இன்னும் ஆனும் இடைச் சொற்கள்.)

### உதாரணம்

''கவலை மறுகின் கடுங்கண் மறவர்
உவலைசெய் கூரை ஒடுங்கத்—துவலைசெய்
கூதிர் நலியவும் உள்ளான் கொடித்தேரான்
மூதில் மடவாள் முயக்கு.''[3]

(வெண்பா. வாகை-15)

---

1. ஏழும் திணைவகையென்று கொள்க என்பது கருத்து.
2. கூதிர்ப்பாசறை வேனிற் பாசறை என்னும் இவை யிரண்டும் பாசறைநிலை என்னும் ஒருவகையின் பாற்படும்.
3. கடுங்கண் வீரர் கவர்த்த தெருவில் உள்ள தழையாற் பண்ணின கூரை வீடுகளில் (பாசறையிடங்களில்) ஒடுங்கியிருக்கக் கொடித்தேரானாகிய வேந்தன் கூதிர் காலம் மழைத்துளியால் வருத்தவும் தன்னூரில் உள்ள மனையில் தன்மனையாளை முயங்கும் முயக்கத்தை நினையாதவனானான்.

பிறவும் அன்ன.

ஏரோர் களவழி அன்றி களவழி தேரோர் தோற்றிய வென்றி யும்—ஏரோர் களவழி கூறுதலும் அன்றிப் போரோர் களவழி தேரோர் தோற்றுவித்த வென்றியும்.

அது களம்பாடுதலும்[4] களவேள்வி பாடுதலுமாம்.[5] [களவழி—களத்தில் நிகழும் செயல்கள்.]

உதாரணம்

''இருப்புமுகஞ் செறித்த ஏந்தெழின் மருப்பின்
பெருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவர் எறிவனர் உயர்த்த
வாள்மின் ஆக வயங்குகடிப் பமைந்த
குருதிப் பலிய முரசுமுழக் காக
அரசுஅராப் பனிக்கும் அணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநாண் உகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
ஈரச் செறுவயின் தேர்ஏர் ஆக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு பைஞ்சால்
பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
வேய்வை காணா விருந்தின் போர்வை
அரிக்குரல் தடாரி யுருப்ப ஒற்றிப்
பாடி வந்திசின் பெரும பாடான்று
எழிலி தோயும் இமிழிசை அருவிப்
பொன்னுடை நெடுங்கோட்டு இமயத்து அன்ன

---

4. களம்பாடுவது ஏரோர் களவழி.

5. களவேள்வி பாடுதல் போர்க்களவழி. போர்க்களத்தை ஏர்க்களமாக உருவகிப்பது ஏரோர் களவழி. போர்க்கள நிகழ்ச்சியை விவரிப்பது போரோர் களவழி.

ஓடை நுதல ஒல்குதல் அறியாத்
துடிஅடிக் குழவிப் பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா ஈகைத் தகைவெய் யோயே.''[6]

(புறம்-369)

இது ஏரோர் களவழி.

''ஓஒ உவமை உறழ்வின்றி ஒத்ததே
காவிரி நாடன் கழுமலங் கொண்டநாள்
மாவுதைப்ப மாற்றார் குடையெலாங் கீழ்மேலாய்
ஆவுதை காளாம்பி போன்ற புனல்நாடன்
மேவாரை அட்ட களத்து.''[7]

(களவழி-36)

இது போரோர் களவழி.

''நளிகடல் இருங்குட்டத்து
வளிபுடைத்த கலம்போலக்
களிறுசென்று களன் அகற்றவும்
களனகற்றிய வியலாங்கண்
ஒளிறிலைய எஃகேந்தி

---

6. வேல்கெழு குட்டுவனைப் பரணர் பாடியது. பெரும! யானை மேகமாக வீரர் உயர்த்த வாள் மின்னலாக, முரசஒலி இடியாகப் பகையரசராகிய பாம்பை நடுங்கப் பண்ணும் காலத்தில் குதிரைவேகம் காற்றாக வில் நாண் சொரிந்த அம்பு மழையாகப் போர்க்களமாகிய ஈர நிலத்தில் தேர் ஏராக விடியலில் நின் படைக்கலங்கள் திருத்திய படைசாலில் வேலவிதையும் சோழி விதையும் விதைத்துப் பகைவரின் தலைகளாகிய பயிரைப் பேய் மகள் பற்றிப் பிணக்குவியலை நரிகளும் பேய்களும் ஈர்த்து உண்ணப் பூதங்கள் காப்ப இப்படிப் பொலியும் போர்க்களமாகிய நெற்களத்தில் பாடி வருவோர்க்காக அமர்ந்திருந்த பீடுடையவனே! நின்னைப் பாடி வந்தேன் கன்றும் பிடியும் கூடிய களிறாகிய பரிசிலைத் தருவாயாக, நீ என்றும் ஈகையையே விரும்புவன் ஆகையால்.

7. புனல் நாடன் (சோழன்) மோவரை அட்டகளத்தில்

அரசுபட அமருழக்கி
உரைசெல முரசுவெளவி
முடித்தலை அடுப்பாகப்
புனற்குருதி உலைக்கொளீஇத்
தொடித்தோள் துடுப்பில் துழந்த வல்சியின்
அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய
ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்முறை முதல்வர் சுற்ற மாக
மன்னர் ஏவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாள்வாய் வேந்தே
நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றார் என்னும் பெயர்பெற்று
ஆற்றா ராயினும் ஆண்டுவாழ் வோரே.''[8]

(புறம்-26)

இது களவேள்வி.[9]

தேரோர் வென்ற கோமான் தேர்முன் குரவையும்
தேரோரைப் பொருது வென்ற அரசன் தேர்முன் ஆடு குரவையும்.

---

8. கடலில் புயல் புடைப்ப மரக்கலம் நீரைக்கிழித்துச் செல்வதுபோல யானைகள் விரைந்து ஓடி இடத்தை அகலப்படுத்த அவ்விடத்து எஃகு ஏந்து அரசுபடப் போரில் கலங்கச்செய்து பகைவர் முரசுகளைக்கொண்டு முடித்தலைகள்அடுப்பாகக் குருதிபுனலாக உலை ஏற்றித் தோள் துடுப்பினால் துழாவிய கூழால் களவேள்வி செய்த செழியனே! நான்மறை முதல்வர் சுற்றமாகப் பிறமன்னர் ஏவல்கேட்க இப்படி வேள்வியை முடித்த வேந்தே! நின் பகைவர் நினக்கு மாற்றார் எனும் பெயரைப் பெற்று நின்னொடு பொருதற்கு ஆற்றாதவ ராயினும் மேல் உலகம் சென்று வாழ்வோர் ஆனார் ஆதலின்அவர் யாவரும் தெளிவாக நோன்பு செய்தோரே யாவர் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனை மாங்குடி கிழார் பாடியது.

9. களவேள்வி என்பது போர்க்கள நிகழ்ச்சியை வேள்விச் செயலாக உருவகித்துப் பாடுவது.

உதாரணம்

''..................................
களிற்றுக்கோட் டன்ன வாலெயிறு அழுத்தி
விழுக்கொடு விரைஇய வெள்நிணச் சுவையினள்
குடர்த்தலை மாலைசூடி உணத்தின
ஆனாப் பெருவளஞ் செய்தோன் வானத்து
வயங்குபன் மீனினும் வாழிய பலவென
உருகெழு பேய்மகள் அயரக்
குருதித்துகள் ஆடிய களங்கிழ வோயே.''[10]

(புறம்-371)

ஒன்றிய மரபின் தேர்ப்பின் குரவையும் பொருந்திய மரபின் தேர்ப்பின் ஆடு குரவையும்.

உதாரணம்

''வஞ்சமில் கோலானை வாழ்த்தி வயவரும்
அஞ்சொல் விறலியரும் ஆடுபவே—வெஞ்சமத்துக்
குன்றேர் மழகளிறுங் கூந்தற் பிடியும்போல்
பின்தேர்க் குரவை பிணைந்து.''[11]

(வெண்பா. வாகை-8)

பெரும்பகை தாங்கும் வேலும்—பெரிய பகையினைத் தாங்கும் வேலினைப் புகழுமிடம்.

உதாரணம்

''இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்திரள் நோன்காழ் திருத்திநெய் அணிந்து
கடியுடை வியனகர் அவ்வே அவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து

---

10. பேய்மகள் யானைமருப்புப் போலும் தன் பல்லில் இறந்த வீரரின் தசையொடு நிணத்தைச் சுவைத்த வளாய் குடரைத் தலைமாலையாகச் சூடி உண்ணவும் தின்னவும் தனக்கு வீரரைக் கொன்று வளம் செய் தோனாகிய வேந்தன் வானத்துப் பல மீனினும் வாழ் நாள் பெற்று வாழ்வானாக என்று கூறி ஆடுமாறு போர்க்களத்துக்குரியோன்.

11. வயவரும் விறலியரும் களிறும் பிடியும்போல் பிணைந்து வஞ்சமில் கோலானை வாழ்த்தி ஆடுவர்.

கொல்துறைக் குற்றில மாதோ என்றும்
உண்டாயிற் பதங்கொடுத்து
இல்லாயின் உடனுண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்
அண்ணல்எம் கோமான் வைந்நுதி வேலே.''[12]

(புறம்-95)

''.........................................
நிலைதிரிபு எறியத் திண்மடை கலங்கிச்
சிதைதலுய்ந் தன்றோ நின்வேல் செழிய.''

(புறம்-25)

என்பதும் அது.

அரும்பகை தாங்கும் ஆற்றலும்—பொருதற்கரிய பகையைப் பொறுக்கும் ஆற்றலும்.

உதாரணம்

''களம்புகல் ஓம்புமின் தெவ்விர் போரெதிர்ந்து
எம்முளும் உளனொரு பொருநன் வைகல்
எண்தேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே.''[13]

(புறம்-87)

எனவரும்.

---

12. இல்லோர் ஒக்கல் தலைவனாகிய அஞ்சியின் வேல்களாகிய அவை பகைவரைக் குத்தியதால் நுனி சிதைந்து சரிசெய்தற் பொருட்டுக் கொல்லன் உலைக் களச் சிறு வீடுகளில் இருப்பனவாயின—இது வேலைப் புகழ்தல். இங்குள்ள வேல்கள் பீலி அணிந்து மாலை சூட்டி கணுவாகத் திரண்ட காழினைத் திருந்தச் செய்து நெய் பூசப்பட்டு அரண்மனைக் காவலிடத்தனவாயின. இது வேற்றுவேந்தர் வேலை இகழ்ந்தது. ஔவை பாடியது இது.

13. பகைவர்களே போரை ஏற்றுக் களத்தில் புகுதலைத் தவிர்மின். ஏன் எனின் எம் அரசன் பக்கத்தில் ஒரு வீரன் உளன். அவன் எப்படிப்பட்டவன் எனின் ஒரு நாளில் எட்டுத்தேர் செய்யவல்ல தச்சன் ஒரு மாதக்காலமாக நினைந்து நினைந்து செய்த ஒரு சக்கரத்தின் வலிமையுள்ளவன்—அதியமானை ஔவை பாடியது.

''என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின் றவர்.''[14]

(குறள்-771)

**புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்**-பொருந்தாத வாழ்க்கையினையுடைய வல்லாண் பக்கமும்.

**உதாரணம்**

''எருது கால்உறாஅது இளைஞர் கொன்ற
சில்விளை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாணர் உண்டுகடை தப்பலின்
ஒக்கல் ஒற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் ஆளர் முகத்தவை கூறி
வரகுகடன் இரக்கும் பெருந்தகை
அரசுவரில் தாங்கும் வல்லா ளன்னே.''[15]

(புறம்-327)

**ஒல்லார் நாண பெரியவர்க் கண்ணி சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்த்து தொல் உயிர் வழங்கிய அவிப்பலியும்**—பொருந்தாதார் நாணுமாறு தலைவரைக் குறித்து முன்பு

---

14. பகைவர்களே! என் தலைவன் முன் போர் எதிர்ந்து நில்லாதீர். அப்படிப் போர் எதிர்ந்து என் தலைவன்முன் நின்றவர் பலரும் கல் நாட்டுதற்குரியராய் இறந் தொழிந்தனர்.

15. எருதின் காலால் கடாவிடுதல் வேண்டாமல் சிறுவர் தம் காலால் மிதித்துத் தொகுத்த சிலவாய வரகைத் தன்னை வளைத்த கடன்காரர்களுக்குக் கொடுத்தது போக எஞ்சியதைப் பசியுடன் வந்த பாணர் உண்டு போய்விடப் பின்னர் வந்த தன் சுற்றத்தாரின் வறுமை யைப் போக்க வரகு இல்லாமையால் உடனே தன்னூரில் உள்ள சிறிவரகுடையாரிடம் தன் நிலைகூறி வரகு இரந்து பெற்று அவர் வறுமை போக்கும் வெற்றித் தகுதியுடையவன் அரசு தன் மேல்வரினும் தடுத்து நிறுத்தும் வல்லாண்மையும் உடையனாவான்.

சொன்ன வஞ்சின மரபின் ஒன்றொடு பொருந்தித் தொன்று தொட்டு வருகின்ற உயிரை[16] வழங்கிய அவிப்பலியும்[17]

உதாரணம்

''சிறந்த திதுவெனச் செஞ்சோறு வாய்ப்ப
மறந்தரு வாளமர் என்னும்—பிறங்கழலுள்
ஆருயிர் என்னும் அவிவேட்டார் ஆங்கஃதால்
வீரியரெய் தற்பால வீடு.''[18]

(வெண்பா. வாகை-30)

எனவும்,

''இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர்.''[19]

(குறள்-776)

எனவும் வரும்.

ஒவ்வார் இடவயின் புல்லிய பாங்கும்—பொருந்தாதார் இடத்தின்கண் பொருந்திய பக்கமும்.

அஃதாவது, போரில்வழி நாடு[20] கைத்தென்று கொண்டு உவத்தல். (கைத்து — கையகப்பட்டது. உவத்தல்—வெகுளி விட்டிருத்தல்)

உதாரணம்

''மாண்டனை பலவே போர்மிகு குருசில்நீ
மாதிரம் விளங்குஞ் சால்புஞ் செம்மையும்
முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற
மிக்கெழு கடுந்தார் துய்த்தலைச் சென்று

---

16. வீரக்குடியில் வருகின்ற உயிரை.
17. அவிப்பலி—தேவர்க்கு நெருப்பில் இடும் உணவாகிய பலி.
18. செஞ்சோற்றுக்கடன் வாய்ப்பச் சிறந்த கைம்மாறு இது தான் என்று போர் என்னும் நெருப்பில் உயிரை ஆவிப் பலியாக இட்டார் வீரர். இதுவே வீரர் எய்தும் வீடு பேறாகும்.
19. சொன் வஞ்சினம் தவறாமல் போரில் சாவாரை அவர் வென்றி தரத் தவறினார் என்று ஒறுப்பவர் யாருளர்!
20. நாடு—பகைவர் நாடு.

துப்புத்துவர் போகப் பெருங்கிளை உவப்ப
ஈத்தான்று ஆனா இடனுடை வளனும்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்
எல்லாம் எண்ணின் இடுகழங்கு தபுந
கொன்னொன்று மருண்டனென் அடுபோர்க் கொற்றவ
நெடுமிடல் சாயக் கொடுமிடல் துமியப்
பெருமலை யானையொடு புலங்கெட இறுத்துத்
தடந்தாள் நாரை படிந்திரை கவரும்
முடந்தை நெல்லின் கழைஅமல் கழனிப்
பிழையா விளையுள் நாடகப் படுத்து
வையா மாலையர் விசையுநர்க் கறுத்த
பகைவர் தேஎத்து ஆயினும்
சினவாம் ஆகுதல் இறும்பூதாற்பெரிதே,"[20]

(பதிற்று-32)

என்பதனுள் பகைவர் நாடு கைக் கொண்டிருந்தவாறு அறிக.

பகட்டினாலும் ஆவினானும் துகள் தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்—பகட்டினானும் ஆவினானும் குற்றம் தீர்ந்த சிறப்பினை யுடைய சான்றோர் பக்கமும்.

பகட்டால்[21] புரை தீர்ந்தார் வேளாளர். ஆவால்[22] குற்றம் தீர்ந்தார் வணிகர். இவ்விரு குலத்தினும் அமைந்தார் பக்கமும்.

---

20 திக்குகளை விளக்கிய அமைதியும் நடுநிலைமையும் வளமும் வென்றியும் போலும் நின்குணங்களை எல்லாம் எண்ணினால் எண்ணுதற்கிடும் கழங்கின் அளவையும் கெடுத்து மேம்படும் தன்மையுடையவனே! மேற்கண்ட குணங்களால் மாண்புடைய குரிசிலே! நின் குணங்களுள் ஒன்று கண்டு மருண்டேன் அதாவது நெடுமிடல் அஞ்சி என்பான் சாயப் பகைப்புலத்து யானையொடு சென்று தங்கிப் பிழையா விளையுள் நாட்டைக் கைப்பற்றிப் பழியே சொல்பவரும் மதிக்கத்தகாதோரும் ஆகிய பகைவர் நாட்டிருந்தும் அவர்களைச் சினவாமல் அமைந்திருக்கும் குணமே நினையுந்தோறும் இறும்பூதாகின்றது—களங்காய் கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடியது.

21. பகட்டால்—பகடுகொண்டு பயன் விளைப்பதால்

22. ஆவால்—ஆப்பயன் விளைப்பதால்

அவர் குலத்தினுள்[23] அளவால் மிக்க நீர்மையராதலின் வேறு[24] ஓதப்பட்டது.

உதாரணம்

''உண்டால் அம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவது ஆயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி அனையர் ஆகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.''[25]

(புறம் 182)

கடிமனை நீத்த பாலும்—கடிமனை நீத்த பக்கமும்.

அஃதாவது, பிறர்மனை நயவாமை. மேல் 'காம நீத்த பாலினானும்' என்று ஓதுகின்றா ராகலின், இது மனையறத்தின் நின்றோரை நோக்க வரும்.[26]

---

23, அவர் குலத்தினுள்—அவ ரவர் குலத்தினுள்

24. பகட்டினானும் ஆவினானும் எனத் தனித்தனியாகக் கூறப்பட்டது,

25. இவ்வுதாரணம் வேளாளச் சான்றோர்க்கும் வாணிகச் சான்றோர்க்கும் பொதுவாக உரியது,

26. இல்லறவொழுக்கத்தில் நிலை நிற்பாரை நோக்க அவர் தம் பிறர்மனை விழையாச் சிறப்பைக் குறித்துவரும். கடிமனை—கடிதற்குரிய பிறர்மனை நயத்தல்.

காமநீத்தபால் என்பது துறவறத்தார்க்குரியது. இது இல்லறத்தார்க் குரியது.

உதாரணம்

''பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு.[27]

(குறள் 148)

எட்டுவகை நுதலிய அவையகமும்—எட்டுப் பாகுபாட்டைக் குறித்த அவையகமும்.

எட்டுவகை குறித்த அவையகம் என்றமையான், ஏனைய அவையின் இவ்வவை மிகுதி உடைத்தென்றவாறு.

அவையாவன :-குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறாமை. அவாவின்மை என்பன.[28]

அவை எட்டினானும் அவை வருமாறு:

''குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பேர் ஒழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையின்
காத லின்பத்துள் தங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்காறு இன்மை அவாஅ இன்மையென
இருபெரு நிதியமும் ஒருதாம் ஈட்டும்
தோலா நாவின் மேலோர் பேரவை
உடனமர் இருக்கை ஒருநாட் பெறுமெனின்
பெறுகதில் அம்ம யாமே வரன்முறைத்
தோன்றுவழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து
நின்றுழி நின்றுழி ஞாங்கர் நில்லாது

---

27. சான்றோர்க்குப் பிறன்மனை விரும்பாமையாகிய பேராண்மை என்பது அறம் மட்டுமன்று, நிறைந்த ஒழுக்கமுமாம்.

28. இவை அவையத்தார்க்குரிய எட்டு பண்புகள். ஏனையவை என்பன இவ்வெட்டு வகைப் பண்புகளின்றி வேறு குணம் தொழில்களால் ஆம் அவைகள்.

நிலையழி யாக்கை வாய்ப்பஇம்
மலர்தலை உலகத்துக் கொட்கும் பிறப்பே.''[1]

(ஆசிரியமாலை)

கட்டமை ஒழுக்கத்து கண்ணுமையும்—கட்டுதல் அமைந்த ஒழுக்கத்தினைக் குறித்த நிலையினும்.

அஃதாவது இல்லறத்திற்கு உரித்தாக நான்கு வருணத் தார்க்கும் சொல்லப்பட்ட அறத்தின்கண் நிற்றல். அவையாவன: அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, நடுவுநிலைமை, வெஃகாமை, புறங்கூறாமை, தீவினையச்சம், அழுக்காறாமை, பொறையுடைமை என்பன. மிகுதியாகலின் வாகை யாயின.[2]

அடக்கமுடைமையாவது, பொறிகள் ஐம்புலன்கள் மேல் செல்லாமை அடக்குதல்.

உதாரணம்

''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து,''[3]

(குறள்—126)

ஒழுக்கமுடைமையாவது, தங்குலத்திற்கும் இல்லறத்திற்கும் ஒத்த ஒழுக்கமுடையராதல்.

---

1. தோலா நாவின் மேலோர் பேரவை உடனுறை இருக்கை ஒருநாள் பெறுதும் எனின் நிலையழி யாக்கை வாய்ப்ப உலகத்துக்கொட்கும் பிறப்பு யாம் பெறுக எனக் கூட்டுக. பனுவல் என்றது கல்வியை. மேலோர் பேரவைக்கு எட்டும் வந்தது காண்க.

2. இவற்றால் மற்றையோரினும் மிகுதியாகத் தோன்ற லின் வாகை அவை வாகையெனப்பட்டன.

3; ஆமை தன் முதுகு ஓட்டின் உள்ளே தன் கால்கள் நான்கையும் தலையொன்றையும் அடக்கிக் கொள்வது போல ஒருவன் எடுத்த ஒரு பிறவியில் ஐம்புலன்களையும் பொறிவழிச் செல்லாமல் அடக்க வல்லனாயின் அது ஏழு பிறப்புக்கும் பாதுகாவலையுடையதாம்.

உதாரணம்

''ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.''

நடுவு நிலைமையாவது, பகைவர் மாட்டும் நட்டார் மாட்டும் ஒக்க நிற்கும் நிலைமை.

உதாரணம்

''சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி.''

(குறள்—118)

வெஃகாமையாவது, பிறர்பொருளை விரும்பாமை.

உதாரணம்

''படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.''

(குறள்...172)

புறங் கூறாமையாவது, ஒருவரை அவர் புறத்துரையாமை.

உதாரணம்

''அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது.''

(குறள்-181)

தீவினையச்சமாவது, தீவினையைப் பிறர்க்குச் செய்தலை அஞ்சுதல்.

உதாரணம்

''தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னுஞ் செருக்கு.''

(குறள்-201)

அழுக்காறாமையாவது, பிறர் ஆக்கம் முதலாயின கண்டு பொறாமையால் வரும் மனக்கோட்டத்தைச் செய்யாமை.

உதாரணம்

''ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்கா றிலாத இயல்பு.''

(குறள்-161)

பொறையுடைமையாவது, பிறர் தமக்கு மிகுதியாகச்[1] செய்த வழி வெகுளாமை.

உதாரணம்

''மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்.''

(குறள்-158)

பிறவும் இந்நிகரனவெல்லாம் கொள்க.

இடையில் வண்புகழ்க் கொடையும் — இடைதலில்லாத[2] வளவிய புகழினைத் தரும் கொடையும்.

அஃதாவது, கொடுத்தற்கு அரியன கொடுத்தல். இதுவும் பாகுபாடு மிகுதிப்படுதலின் வாகையாயிற்று.

உதாரணம்

''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே
துன்னருஞ் சிறப்பின் உயர்ந்த செல்வர்
இன்மையின் இரப்போர்க்கு ஈஇ யாமையின்
தொன்மை மாக்களின் தொடர்பறி யலரே
தாள்தாழ் படுமணி இரட்டும் பூநுதல்
ஆடியல் யானை பாடுநர்க்கு அருகாக்
கேடில் நல்லிசை வயமான் தோன்றலைப்
பாடி நின்றனென் ஆகக் கொன்னே

---

1. மிகுதி—தன்னிடம் உள்ள பொருள் முதலியவற்றின் மிகுதியால் கொள்ளும் செருக்கு.

2. இடைதல் இல்லாத—தடைபடுதல் இல்லாத காட்டில் இருந்த குமணன் புலவர்க்குக் கொடுக்கத் தன்னிடம் பொருள் இல்லாமை தடையாயிற்று. அதனையும் நீக்கித் தன் தலையைக் கொய்து கொள வாள் தந்தது தடையில் கொடையாம்.

பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல்என்
நாடிழந் ததனினும் நனிஇன் னாதென
வாள்தந் தனனே தலையெனக்கு ஈயத்
தன்னிற் சிறந்தது பிறிதொன்று இன்மையின்
ஆடுமலி உவகையொடு வருவல்
ஓடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே.''[3]

(புறம்-165)

பிழைத்தோர் தாங்கும் காவலும்—தம்மாட்டுப் பிழைத்தோரைப் பொறுக்கும் எமமும்;

உதாரணம்

''தம்மை இதழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை இகழ்ந்த வினைப்பயத்தால் — உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன்,''[4]

(நாலடி. துறவு—8)

எனவும்,

''அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை''

(குறள்—151)

எனவும் வரும்,

பொருளோடும் புணர்ந்த பக்கமும் — மெய்ப்பொருள் உணர்ந்த பக்கமும்.

---

3. தோன்றலாகிய குமணனை யான் பாடி நின்றேனாக அப்போது எனக்குக் கொடுக்கத் தன்னைவிடச் சிறந்த ஒரு பொருள் இல்லாமையால் தன் தலையை எனக்குக் கொடுக்க வேண்டி வாளைத் தன் தலையைக் கொய்து கொள்ளுமாறு கொடுத்தான் என்க. குமணனைப் பெருஞ் சித்திரனார் பாடியது.

4. சான்றோர் தம்மை ஒருவன் இகழின்அதைப் பொறுப்பது மட்டுமின்றி இகழ்ந்தமையால் நரகத்து வீழ்வரோ என இரங்குவதும் அவர் கடனாம்.

### உதாரணம்

''ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயன்இன்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு.''

(குறள்—354)

எனவும்,

சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.''

(குறள்—353)

எனவும் வரும்.

இன்னும் பொருளோடு புணர்ந்த பக்கமும் என்றது, அறம் பொருள் இன்பம் மூன்றினும் அறனும் இன்பமும் அன்றி ஒழிந்த பொருளொடு பொருந்திய பக்கமும் என்றுமாம். பொருளாவது நாடும் அரணும் பொருளும் அமைச்சும் நட்பும் படையும்.

''படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.''

(குறள்—381)

என்பதனாலும் கொள்க. அவையிற்றின் மிகுதி கூறலும் வாகையாம்.

நாடாவது,

''தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு.'[4]

(குறள்—731)

அரணாவது;

''கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்கெளிதாம் நீரது அரண்.''

(குறள்—745)

பொருளாவது,

''உறுபொருளும் உல்கு பொருளுந்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.''

(குறள்—756)

அமைச்சாவது,

''வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு.''

(குறள்—632)

நட்பாவது,

''அழிவின் அவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு.''

(குறள்—787)

படையாவது,

அருவின்று அறைபோகா தாகி வழிவந்த
வன்கண் அதுவே படை.''

(குறள்—764)

பக்கம் என்றாதனால் ஒற்று, தூது, வினைசெயல்வகை குடிமை, மானம் என வருவனவெல்லாம் கொள்க.

அவற்றுட் சில வருமாறு :

''கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்
அகாஅமை வல்லதே ஒற்று.''

(குறள்—585)

''கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்
தக்கது அறிவதாந் தூது.''

(குறள்—986)

பிறவும் அன்ன. 'இன்னும் பொருளோடு புணர்ந்த பக்கம்' என்றதனாற் புதல்வர்ப் பேறுங் கொள்க.

உதாரணம்

''படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே.''

(புறம்—188)

அருளோடு புணர்ந்த அகற்சியும் — அருளொடு பொருந்தின துறவும்.

அஃதாவது, அருளுடைமை, கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, புணர்ச்சி விழையாமை, கள்ளுண்ணாமை, துறவு என்பனவற்றைப் பொருந்துதலாம். அவற்றுள், அருளுடைமை யொழிந்த எல்லாம் விடுதலான் 'அகற்சி' என்றார்.

அருளுடைமையாவது, யாதானும் ஓர் உயிர் இடர்ப்படுமிடத்துத் தன்னுயிர் வருந்தினாற்போல வருந்தும் ஈரமுடைமை.

> ''அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
> பூரியார் கண்ணும் உள.''
>
> (குறள்—241)

கொல்லாமையாவது, யாதொன்றையும் கொல்லாமை.

> ''அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
> பிறவினை எல்லாந் தரும்.''
>
> (குறள்—321)

பொய்யாமையாவது, தீமை பயக்கும் சொற்களைக் கூறாமை.

> ''வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றுந்
> தீமை இலாத சொலல்.''
>
> (குறள்—291)

கள்ளாமையாவது, பிறர்க்குரிய பொருளைக் களவினாற் கொள்ளாராதல்.

> ''களவென்னுங் காரறி வாண்மை அளவென்னும்
> ஆற்றல் புரித்தார்கண் இல்.''
>
> (குறள்—287)

புணர்ச்சி விழையாமையாவது, பிரமசரியம் காத்தல்.

> ''மாக்கேழ் மடநல்லாய் என்றரற்றுஞ் சான்றவர்
> நோக்கார்கொல் நொய்யதோர் புக்கில்லை
> —யாக்கைக்கோர்
> ஈச்சிறகு அன்னதோர் தோலறினும் வேண்டுமே
> காக்கை கடிவதோர் கோல்.''
>
> (நாலடி. தூய்தன்மை-1)

கள்ளுண்ணாமையானது கள் உண்டலைத் தவிர்தல்.

''களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து
ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்.''

(குறள்—928)

துறவானது தன்னுடைய பொருளைப் பற்றறத்துறத்தல்.

''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.''

(குறள்—341)

காமம் நீத்த பாலும் — ஆசையை நீந்த பக்கமும்.

உதாரணம்

''காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய்.''

(குறள்—360)

என்று இரு பால்பட்ட ஒன்பதின் துறைத்து என்று இரண்டு கூறுபட்ட ஒன்பது துறைத்து. (17)

## நச்சினார்க்கினியர்

76. கூதிர் வேனி........துறைத்தே.

இதுமேல் தொகுத்துக் கூறிய எழுவகைத் திணையுள் அடங் காதவற்றிற்கு முற்கூறிய துறைகளே போலத் தொடர் நிலைப் படுத்தாது[1] மறத்திற்கு ஒன்பதும் அறத்திற்கு ஒன்பதுமாக இரு வகைப்படுத்துத் துறை கூறுகின்றது.

இதன் பொருள் :- கூதிர் வேனில் என்று இருபாசறைக் காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும்—கூதிரெனவும் வேனிலென வும் பெயர்பெற்ற இருவகைப் பாசறைக் கண்ணுங் காதலால் திரிவில்லாத மனத்தனாகி ஆண்டு நிகழ்த்தும் போர்த்தொழில் கருதிய மரபானும்:

கூதிர், வேனில் ஆகுபெயர்.[2] அக்காலங்களிற் சென்றிருக்கும் பாசறையாவது தன்மைக்கும் வெம்மைக்குந் தலைமைபெற்ற

1. ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்புபடுத்திக் கூறாமல்.

2. கூதிர்க்காலம் அக்காலத்துத் தங்கியிருக்கும் பாச யையும் வேனிற்காலம் அக்காலப் பாசறை உணர்த்தலின் ஆகு பெயர்.

காலத்துப் போகத்திற் பற்றற்று வேற்றுப்புலத்துப் போந்திருத்தல். இக்காலங்களிற் பிரிதல் வன்மையின் இது வென்றியாயிற்று. தலைவிமேற் காதலின்றிப் போரின்மேற் காதல் சேறலின் ஒன்றியென்றார். இக்காலத்துச் சிறப்புப்பற்றி இரண்டையும் ஓதினாரேனும் ஓர்யாட்டை எல்லை இருப்பினும் அவற்றுவழித் தோன்றிய ஏனைக் காலங்களும்[3] இரண்டாகி அவற்றுள் அடங்குமென்பது ஆசிரியர் கருத்தாயிற்று.

> ''வினைவயிற் பெயர்க்குந் தானைப்
> புனைதார் வேந்தன் பாசறை யேமே.''
>
> (அக-84)

எனத் தலைவியை நினைவன[4] வாகைக்கு வழுவாம். அகத்திற்கு வழுவன்றென்றற்கு மரபென்றார். ஏனைய காலங்களாற் பாசறைப் பெயர் இன்றென்றற்கு இரண்டானும் பெயர் கூறினார். இங்ஙனங் கூறவே முற்கூறிய துறைபோலத் தொடர் நிலைப்படுத்தலின்றாய் இதனானே பலவாகி ஒரு துறைப்படுத்தலும்[5] இன்றாயிற்று.

இனி இருத்தற் பொருண் முல்லையென்பதே பற்றிப் பாசறைக்கண் இருத்தலாற் பாசறை முல்லையெனப் பெயர் கூறுவாரும் உளர்.

(உ-ம்) ''மூதில்வாய்த் தங்கிய முல்லைசால் கற்புடைய
மாதர்பாற் பெற்ற வலியளவோ—கூதிரின்
வெங்கண் விறல்வேந்தன் பாசறையுள் வேனிலா
னைங்கணை தோற்ற வழிவு.''[6]

(பெரும் பொருள் விளக்கம்-புறத்திரட்டு-பாசறை-4)

---

3. கார், முன்பனி, பின்பனி, இளவேனிற் காலங்கள். கார் முன்பனி பின்பனி என்பன கூதிரிலும் இளவேனில் வேனிலிலும்அடங்கும். இரண்டாதலாவதுதட்பக்காலமும் வெப்பக்காலமும் என ஆதல்.
4. யாம் பாசறையேமாகத் தலைவி ஊரகத்து மனைவயின் இருந்தாள் என நினைத்தல்.
5. பார்ப்பனவாகை ஆறனையும் பார்ப்பனவாகை என ஒரு துறைப் படுத்தியதுபோல கூதிர்ப்பாசறை பல இன்மையின் தொகுத்து ஒரு துறையாகக் கூறலும் இல்லை.
6. கூதிர்க்காலத்துப் பாசறையுள் வேந்தனானவன் மன்மதனின் ஐங்கணைகளாலும் வெல்ல முடியாதவனாதலின் அவனுக்கு அக்கணைகள் தோற்று அழிதலானது பழைய மரபுடைய மனைக்கண் தங்கிய தன் கற்புடைய மனைவியிடம் கொண்ட அன்புறுதியின் வலிமையளவாமோ?

''கவலை மறுகிற் கடுங்கண் மறவ
ருவலைசெய் கூரை யொடுங்கத்—துவமைசெய்
கூதிர் நலியவு முள்ளான் கொடித்தேரான்
மூதின் மடவாண் முயக்கு.''

(பு-வெ-வாகை-15)

ஏரோர் களவழித் (தேரோர் தோற்றிய வென்றி) யன்றிக் களவழித் தேரோர் தோற்றிய வென்றியும்—வேளாண் மாக்கள் விளையுட் காலத்துக் களத்துச் செய்யுஞ் செய்கைகளைத் தேரேறி வந்த கிணைப் பொருநர் முதலியோர் போர்க்களத்தே தோற்று வித்த வென்றியன்றிக் களவழிச் செய்கைகளை மாறாது தேரேறி வந்த புலவர் தோற்றுவித்த வென்றியானும்:

என்றது நெற்கதிரைக்கொன்று களத்திற் குவித்துப் போர் அழித்து, அதரிதிரித்துச் சுற்றத்தொடு நுகர்வதற்கு முன்னே கடவுட் பலிகொடுத்துப் பின்னர்ப் பரிசிலாளர் முகந்து கொள்ள வரிசையின் அளிக்குமாறு போல அரசனும் நாற்படையையும் கொன்று களத்திற் குவித்து எருது களிறாக வாள்மட லோச்சி அதரிதிரித்துப் பிணக்குவையை நிணச்சேற்றொடு உதிரப் பேருலைக்கண் ஏற்றி 'ஈனா வேண்மாள் இடந்துழந்தட்ட' கூழ்ப்பலியைப் பலியாகக் கொடுத்து எஞ்சிநின்ற யானை குதிரை களையும் ஆண்டுப் பெற்றன பலவற்றையும் பரிசிலர் முகந்து கொள்ளக் கொடுத்தலாம்.

(உ-ம்) ''இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த
வாண்மின் னாக வயங்குகடிப் படைந்த
குருதிப் பல்லிய முரசுமுழக் காக
வரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
கணைத் துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
யீரச் செறுவிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு செஞ்சாற்

பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்
பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்
கான நரியோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
வேய்வை காணா விருந்திற் போர்வை
யரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப்
பாடி வந்திசிற் பெரும பாடான்
றெழிலி தோயு மிமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
வோடை நுதல வொல்குத லறியாத்
துடியடிக் குழவிப் பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா வீகைத் தகைவெய் யோயே.''

(புறம்-399)

'நளிகட லிருங்குட்டத்து' என்னும் (26) புறப்பாட்டுப் பலி கொடுத்தது.

களவழி நாற்பது புலவர் களவழியைத் தோற்றுவித்தது.

''ஒஒ வுவமை யுறழ்வின்றி யொத்ததே
காவிரி நாடன் கழுமலங் கொண்ட நாண்
மாவுதைப்ப மாற்றார் குடையெல்லாங் கீழ்மேலா
யாவுதை காளாம்பி போன்ற புனனாடன்
மேவாரை யட்ட களத்து.''

(களவழி 40-36)

தேரோர்வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்—தேரின் கண் வந்த அரசர் பலரையும் வென்ற வேந்தன் வெற்றிக்களிப் பாலே தேர்த்தட்டிலே நின்று போர்த் தலைவரோடு கைபிணைந் தாடுங் குரவையானும்.

(உ-ம்) ''சூடிய பொன்முடியும் பூணு மொளிதுளங்க
வாடிய கூத்தரின்வேந் தாடினான்-வீடிக்
குறையாடல் கண்டுவந்து கொற்றப்போர் வாய்த்த
விறையாட வாடாதார் யார்.' [1]

---

1. வேந்து ஆடினான், குறையுடலம் ஆடக்கண்டு வெற்றி கொண்ட வேந்தன் ஆட ஆடாதோர் வீரர் யாவர்?

''விழவுவீற் றிருந்த வியலு ளாங்கட்
கோடியர் முழவின் முன்ன ராடல்
வல்லா னல்லன் வாழ்கவவன் கண்ணி
வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்
திலங்கும் பூணன் பொலங்கொடி யுழிஞையன்
மடம்பெரு மையி னுடன்றுமேல் வந்த
வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி
வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே.''[2]

(பதிற்று-56)

ஒன்றிய மரபிற் பின்தேர்க் குரவையும்—தேரோரை வென்ற கோமாற்கே பொருந்திய இலக்கணத்தானே தேரின்பின்னே கூழுண்ட கொற்றவை கூளிச்சுற்றம் ஆடுங் குரவையானும்.

(உ-ம்) ''வென்று களங்கொண்ட வேந்தன்றேர் சென்றதற்பின்
கொன்ற பிணநிணக்கூழ் கொற்றவை—நின்றளிப்ப
வுண்டாடும் பேய்கண் டுவந்தனவே போர்ப்பரிசில்
கொண்டா டினகுரவைக் கூத்து.''[3]

(பெரும் பொருள் விளக்கம்-புறத்திரட்டு-களம்-12)

எனவரும்.

''களிற்றுக் கோட்டன்ன வாலெயி றழுத்தி
விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினன்
குடர்த்தலை துயல்வரச் சூடி யுணத்தின
மானாப் பெருவளஞ் செய்தோன் வானத்து
வயங்குபன் மீனினும் வாழியர் பலவென

---

2. சேரலாதன் விழா எடுக்கும் ஊரில் கூத்தர் முழக்கும் முழவின் எதிராக ஆடுதலில் வல்லவன் அல்லன்; ஆனால் அறியாமை மிகுதி காரணமாக உடன்று போர்க்கு வந்த வேந்தர் தம் மெய்யை மறந்து வானுலகு சென்று வாழும் வாழ்க்கைக்காக அழிந்துபடும் போர்க்களத்தில் ஆடுவான்.

3. கொன்று களம் கொண்டே வேந்தனின் தேர் செல்ல அதன்பின் கொற்றவை நிணக்கூழ் வார்ப்ப உண்டு ஆடின பேய்ச்சுற்றம் அரசன் பரிவளிக்கப் பெற்றோர் ஆடும் குரவைக் கூத்தைக் கண்டு உவந்தன.

வுருகெழு பேஎய்மக ளயரக்
குருதித்துக ளாடிய களங்கிழ வோயே.''

(புறம்—371)

என்பதும் அது.

பெரும்பகை தாங்கும் வேலினானும்—போர்க்கணன்றியும் பெரியோராகிய பகைவரை ஆத்தொழிற்சிறப்பான் அஞ்சுவித்துத் தடுக்கும் வேற்றொழில் வன்மையானும்:

காத்தாற்றொழிலன்றி அழித்தற்றொழில் பூண்ட முக்கட் கடவுட்குச் சூலவேல் படையாதலானும் முருகற்கு வேல் படையாதலானுஞ் சான்றோர் வேற்படையே சிறப்பப் பெரும்பான்மை கூறலானும் வேலைக்கூறி ஏனைப் படைகளெல்லாம் 'மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின், மொழியாததனையு முட்டின்று முடித்தல்' (666) என்னும் உத்தியாற் பெறவைத்தார்.

(உ-ம்) ''குன்று துகளாக்குங் கூர்ங்கணையான் வேலெறிந்
தன்று திருநெடுமா லாடினா—னென்றும்
பனிச்சென்று மூளாத பல்கதிரோன் சேயோ
டினிச்சென் றமர்பொரா யென்று.''

(பாரதம்)

''இரும்புமுகஞ் சிதைய நூறி யொன்னா
ரருஞ்சமங் கடத்த லேனோர்க்கு மெளிதே
நல்லரா வுறையும் புற்றம் போலவுங்
கொல்லேறு திரிதரு மன்றம் போலவு
மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
யுளனென வருஉ மோரொளி
வலனுயர் நெடுவே லென்னைகண் ணதுவே.''[4]

(புறம்-309)

என்பதும் அது.

'இவ்வே, பீலியணிந்து' என்னும் (95) புறப்பாட்டும் அது.

அரும்பகை தாங்கும் ஆற்றலானும்—வெலற்கரும்பகைவர் மிகையை நன்குமதியாது எதிரேற்றுக் கொள்ளும் அமைதியானும்:

---

4. ஒன்னார் அரிய போரைக் கடத்தல் மற்றவர்க்கு எளிதாகுமோ? புற்றில் நல்ல பாம்பு உறைவது போலவும் மன்றத்தில் கொல்ஏறு திரிதல் போலவும் மாற்றார் பாசறையில் உள்ளான் என்னும்படி வருகின்ற எம் தலைவன்பாலே உளதாகும் எளிதாக.

(உ-ம்) ''எருது காலுறா திளைஞர் கொன்ற
சில்வினை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த யாண ருண்டுகடை தப்பலி
னொக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் லாளர் முகத்தவை கூறி
வரகுகட னீர்க்கு நெடுந்தகை
யரசுவரிற் றாங்கும் வல்லா ளன்னே.''

(புறம்-327)

'களம்புக லோம்புமின்' என்னும் (87) புறப்பாட்டும் அது.

வாழ்க்கை புல்லா வல்லாண் பக்கமும்—உயிர்வாழ்க்கையைப் பொருந்தாத[5] வலிய ஆண்பாலின் கூறுபாட்டானும்:

'பக்கம் என்றதனாற் றாபதப்பக்கமல்லாத போர்த் தொழி லாகிய வல்லாண்மையே கொள்க.

(உ-ம்) ''கலிவர லூழியின் வாழ்க்கை கடிந்து
மலிபுகழ் வேண்டு மனத்த—ரொலிகடல்சூழ்
மண்ணகலம் வேண்டாது வான்வேண்டி யீண்டினார்
புண்ணகலாப் போர்க்களத்துப் போந்து.''[6]

(புறத்திரட்டு-அமர்-3)

இப்பாரதத்துள் அது காண்க.

ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச் சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்ந்து தொல்லுயிர் வழங்கிய அவிப்பலியானும்—பகைவர் நாணும்படியாக உயர்ந்தோரான் நன்கு மதித்தலைக் கருதி இன்னது செய்யேனாயின் இன்னது செய்வலெனத் தான் கூறிய பகுதி யிரண்டனுள் ஒன்றனோடே பொருந்திப் பலபிறப் பினும் பழகிவருகின்ற உயிரை அங்கியங்கடவுட்குக் கொடுத்த அவிப்பலியானும்:

---

5. பொருந்தாத—மதியாத

6. வாழ்க்கையை வெறுத்துப் புகழை விரும்பும் மன முடையார் போர்க்களத்து வந்து மண்ணுலகு வேண் டாது வானுலகு வேண்டிக் கூடினார்கள்.

நாணுதலாவது நம்மை அவன் செய்யாதே நாம் அவனை அறப்போர் செய்யாது வஞ்சனையால் வென்றமையின் அவன் தன்னுயிரை அவிப்பலி கொடுத்தானென நாணுதல்.

(உ-ம்) ''எம்பியை வீட்டுத லெம்மனைக்கா யான்படுதல்
வெம்பகன்முன் யான்விளைப்ப னென்றெழுந்தான்-றம்பி
புறவோரிற் பாணிப்பப் பொங்கெரிவாய் வீழ்ந்தா
னறவோன் மறமிருந்த வாறு.[7]

இப்பாரதத்துள் ஒருவன் இன்னது செய்வலென்று அது செய்ய முடியாமையின் அவிப்பலி கொடுத்தவாறு காண்க.

''இழைத்த திகவாமற் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர். (குறள்-படைச்-9)

இதுவும் அது.

ஒல்லாரிடவயிற் புல்லிய பாங்கினும்-பகைவராயினும் அவர் சுற்றமாயினும் வந்து உயிரும் உடம்பும் உறுப்பும் போல்வன வேண்டியக்கால் அவர்க்கு அவை மனமகிழ்ந்து கொடுத்து நட்புச் செய்தலானும் :

(உ-ம்) ''இந்திரன் மைந்த னுயிர்வேட் டிரந்திரவி
மைந்தனை வெல்வான் வரங்கொண்டான்-றந்தநா
ளேந்திலைவேன் மன்னனே யன்றி யிதற்குவந்த
வேந்தனும் பெற்றான் மிகை.[8]

இப்பாரதத்துப் பகைவனாற் படுதலறிந்துந் தன் கவச குண்டலங் கொடுத்தமை கூறினமையிற் புல்லிய பாங்காயிற்று. அது வீரம்பற்றிய கருணையாகலின் வாகையாயிற்று.

---

7. என் தம்பியை யழித்தல் அல்லது என் தாய்க்காக யான் மாய்தல் என்ற இரண்டில் ஒன்றை இன்றைப் பகலுள் யான் முடிப்பேன் என்று எழுந்தான்; அவன் தம்பி மற்றவர்போல் தடுக்கவும் தடையின்றி மிக்க எரியில் வீழ்ந்தான் அது செய்ய முடியாமையால்.

8. இந்திரனானவன் தன் மைந்தனாகிய அருச்சுனன் உயிரைக் கொல்லாமல் காக்கவேண்டிச் சூரியன் மைந்தனாகிய கன்னனிடம் வரங்கொண்டான். வரம் தந்த நாளில் கன்னன் மிகை (புகழ்) கொண்டான், இந்திரனும் மிகை (இகழ்) கொண்டான்.

இத்துணையு மறத்திற்குக் கூறியன.

பகட்டினாலும் மாவினானும் துகந்தபு சிறப்பிற் சான்றோர் பக்கமும்—எருதும் எருமையுமாகிய பகட்டினானும் யானையுங் குதிரையுமாகிய மாவினானும் குற்றத்தினீங்குஞ் சிறப்பினால் அமைந்தோரது கூறுபாட்டானும் :

இவற்றான் உழவஞ்சாமையும் பகையஞ்சாமையுமாகிய வெற்றி கூறினார். 'பக்கம்' என்றதனாற் புனிற்றாவுங் காலாளுந் தேருங் கொள்க.

(உ-ம்) ''யானை நிரையுடைய தேரோ ரினுஞ்சிறந்தோ
ரேனை நிரையுடைய வேர்வாழ்நர்—யானைப்
படையோர்க்கும் வென்றி பயக்கும் பகட்டே
ருடையோர்க் கரசரோ வொப்பு.''[9]

(பெரும் பொருள் விளக்கம்—புறத்திட்டு—குடிமரபு-9)

''ஏனைப்பெரும் படையனோ சினப்போர்ப் பொறைய
னென்றனி ராயி னாறுசெல் வம்பலிர்
மன்பதை மருள வரசுகளத் தவியக்
கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை
மீபிணத் துருண்ட தேயா வாழியிற்
பண்ணமை தேரு மாவு மாக்களு
மெண்ணற் கருமையி னெண்ணின்றோ விலனே
கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி
யுகக்கும் பருந்தி னிலத்துநிழல் சாடிச்
சேண்பரன் முரம்பி னீர்ம்படைக் கொங்க
ராபரந் தன்ன செலவிற்பல
யானை காண்பலவன் றானை யானே.''[10]

(பதிற்று-77)

---

9. யானைத் தொகுதியுடைய தேர் அரசரினும் ஏரோர் சிறந்தனர். யானைப் படையார்க்கும் வெற்றி தரக் கூடிய எருது பூட்டிய தேருடையார்க்கு அரசரோ ஒப்பாவார்?

10. வழிப்போம் மக்களே! என்னைப் பார்த்து நீவிர் சின மிக்க போர்ப் பொறையன் எவ்வளவு படையுடையன் எனக் கேட்பின் உலகம் மயங்க அரசர்களைக் கொன்று குறையுடலங்கள் துணங்கையாடும்படியான விடத்தில் பிணமீது உருளும் சக்கரம் உடைய தேரும் குதிரையும் காலாளும் எண்ண முடியாமையின் யான் எண்ணிப் பார்க்கவில்லை. கொங்கரது ஆநிரைகள் பரவிச் செல் வனபோல அவன் தானையில் யானை நிரைகள் பரவிச் சென்றன. அதுவே யான் கண்டது.

என்பதுமது.

கட்டில் நீத்த பாலினானும்—அரசன் அரசவுரிமையைக் கைவிட்ட பகுதியானும்.

அது பரதனும் பார்த்தனும் போல்வார் அரசு துறந்த வென்றி.

(உ-ம்) ''கடலு மலையுந் தேர்படக் கிடந்த
மண்ணக வளாக நுண்வெயிற் றுகளினு
நொய்தா லம்ம தானே யிஃதெவன்
குறித்தன னெடியான் கொல்லோ மொய்தவ
வாங்குசிலை யிராமன் றம்பி யாங்கவ
னடிபொறை யாற்றி னல்லது
முடிபொறை யாற்றலன் படிபொறை குறித்தே.''[11]

இஃது அரசு கட்டினீத்தபால்.

''பரிதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநில
மொருபக லெழுவ ரெய்தி யற்றே
வையமுந் தவமுந் தூக்கிற் றவத்துக்
கையவி யனைத்து மாற்றா தாதலிற்
கைவிட் டனரே காதலர தனால்
விட்டோரை விடாஅ டிருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே.''[12]

என்பதும் அது. (புறம்-358)

எட்டுவகை நுதலிய அவையத்தானும்—எண் வகைக் குணத்தினைக் கருதிய அவையத்தாரது நிலைமையானும் :

---

11. இராமன் தம்பியாகிய பரதன் இராமனின் திருவடியைத் தாங்குதலன்றி உலகப் பொறை நோக்கி முடியைத் தாங்கிலன்; அவனுக்கு இம்மண்ணுலக வளாகம் நுண்ணிய வெயிற் காலத் தூசு போன்றதாகும். இஃது என்னே!

12. இவ்வுலகம் ஒரு பகற்போதில் ஏழு தலைவர்களை அடைந்தாற் போல நிலையாமையுடையது. அதனால் உலகையும் தவம் என்பதையும் சீர்தூக்கிப் பார்க்கின் தவத்துக்கு உலகம் வெண் சிறு கடுகளவு கூட ஒவ்வாது. ஆதலால் உலகப் பற்றைக் கைவிட்டார்கள் வீடு விரும்பியவர்கள். உலகப் பற்றை விட்டவரைத் திருமகள் விடாள். விடாதவரே அவளால் விடப்பட்டவராவார்.

அவை குடிபிறப்புக் கல்வி ஒழுக்கம் வாய்மை தூய்மை நடுவு நிலைமை அழுக்காறின்மை அவாவின்மை என விவையுடையராய் அவைக்கண் முந்தியிருப்போர் வெற்றியைக் கூறுதல்.

(உ-ம்) ''குடிபிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மை வாய்மடுத்து மாந்தித் தூய்மையிற்
காதலின்பத்துத் தூங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலு
மழுக்கா றின்மை யவாஅ வின்மையென
விருபெரு நிதியமு மொருதா மீட்டுந்
தோலா நாவின் மேலோர் பேரவை
யுடன்மரீஇ யிருக்கை யொருநாட் பெறுமெனிற்
பெறுகதில் லம்ம யாமே வரன்முறைத்
தோன்றுவழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து
நின்றுழி நின்றுழி ஞாங்கர் நில்லாது
நிலையழி யாக்கை வாய்ப்பவிம்
மலர்தலை யுலகத்துக் கொட்டும் பிறப்பே.''

(ஆசிரியமாலை—புறத்திரட்டு—அவையறிதல்)

என இதனுள் எட்டும் வந்தன.

கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும்—வேத முதலிய வற்றாற் கட்டுதலமைந்த ஒழுக்கத்தோடு பொருந்திய காட்சி யானும்:-

கண்ணது தன்மை கண்மையெனப் படுதலின் அதனைக் கண்ணுமையென உகரங்கொடுத்தார், எண்மை வன்மை வல்லோர் என்பது எளுமை வலுமை வல்லுவோர் என்றாற் போல.

இவை மனத்தான் இவ்வொழுக்கங்களைக் குறிக் கொண்டு ஐம்பொறியினை வென்று தடுத்தலாம். அவை இல்லறத்திற்கு உரியவாக நான்கு வருணத்தார்க்குங் கூறிய அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, நடுவுநிலைமை, பிறர்மனை நயவாமை, வெஃகாமை, புறங்கூறாமை, தீவினையச்சம், அழுக்கறாமை, பொறையுடைமை முதலியனவாம்.

(உ-ம்) ''ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து.''

(குறள்—அடக்க-6)

''ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.''

(குறள்—ஒழுக்கம்-1)

''சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.''

(குறள்—நடுவு-8)

''பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.''

(குறள்—பிறனில்-8)

''படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.''

(குறள்—வெஃகாமை-2)

''அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது.''

(குறள்—புறங்-1)

''தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.''

(குறள்—தீவினை-1)

''ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.''

(குறள்—அழுக்கா-1)

''மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.''

(குறள்—பொறை-8)

பிறவும் இந்நிகரனவெல்லாங் கொள்க.

''விழையா வுள்ளம் விழையு மாயினும்
என்றுங், கேட்டவை தோட்டி யாக மீட்டாங்
கறனும் பொருளும் வழாமை நாடித்
தற்றக வுடைமை நோக்கி மற்றதன்
பின்னா கும்மே முன்னிய முடித்த

லினைய பெரியோ ரொழுக்க மதனா
லரிய பெரியோர்த் தெரியுங் காலை.''[13]
(அகம்—286:8-13)

என் இது தொகுத்துக் கூறியது.

இடையில் வண்புகழ்க் கொடைமையானும்—இடையீடில்லாத வண்புகழைப் பயக்குங் கொடைமையானும்:

உலக முழுதும் பிறர்புகழ் வாராமைத் தன் புகழ் பரத்தலின் இடையிலென்றார்.

வண்புகழ்—வள்ளிதாகிய புகழ்; அது வளனுடையதென விரியும். இக்கொடைப் புகழுடையான் மூப்புப் பிணி சாக்காட்டுக்கு அஞ்சாமையின் அது வாகையாம்:

(உ-ம்) ''மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே
துன்னருஞ் சிறப்பி னுயர்ந்த செல்வ
ரின்மையி னிரப்போர்க் கீஇ யாமையிற்
றொன்மை மாக்களிற் றொடர்பறி யலரே
தாடாழ் படுமணி யிரட்டும் பூநுத
லாடியல் யானை பாடுநர்க் கருகாக்
கேடி னல்லிசை வயமான் றோன்றலைப்
பாடி நின்றனெ னாகக் கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
னாடிழந் ததனினு நனியின் னாதென
வாடந் தனனே தலையெமக் கீயத்
தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையி

---

13. பிறவற்றை விழையாத உள்ளம் பொருளீட்ட விரும்பு மானால், என்றும் பெரியார் வாய்க்கேட்ட அறங்களே அங்குசமாகக் கொண்டு தீநெறி செல்லாமல் உள்ள மாகிய யானையை மீட்டு அறமும் பொருளும் தவறாத படி ஆராய்ந்து தன் தகுதியையும் பார்த்து அதன் பின்னரே எண்ணியது முடித்தல் ஆகும். இதுவே பெரியோர் ஒழுக்கமாகும். இப்பாடலில் கேட்டவை தோட்டியாக உளத்தை மீட்டு என்பதும் அறமும் பொரு ளும் நாடி என்பதும் அடக்கமுடைமை முதலியவற்றைத் தொகுத்துக் கூறியனவாம்.

னாடுமலி யுவகையொடு வருகுவ
லோடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே.''

(புறம்-165)

பிழைத்தோர்த் தாங்குங் காவலானும்—தம்மைப் பிழைத் தோரைத் பொறுக்கும் பாதுகாப்பானும்:

காவலாவது இம்மையும் மறுமையும் அவர்க்கு ஏதம் வாராமற் காத்தலாதலால் இஃது ஏனையோரின் வெற்றியாயிற்று.

(உ-ம்) ''தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா—லும்மை
யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன்.''

(நாலடி-58)

''அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.''

(குறள்—பொறை-1)

பொருளொடு புணர்ந்த பக்கத்தானும்—அரசர்க்குரியவாகிய படை குடி கூழ் அமைச்சு நட்பு முதலியனவும் புதல்வரைப் பெறுவனவுமாகிய பொருட்டிறத்துட்பட்ட வாகைப் பகுதியானும்:

பக்கமென்றதனான் மெய்ப்பொரு ளுணர்த்துதலுங் கொள்க.

(உ-ம்) ''படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணு
முடைப் பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே.''

(புறம்-188)

'கேள்வி கேட்டுப் படிவ மொடியாது' என்னும் (74) பதிற்றுப் பத்தும் அது.

''ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.''

(குறள்—மெய்யு-4)

எனவரும்.

அருளொடு புணர்ந்த அகற்சியானும்—அருளுடைமையோடு பொருந்திய துறவறத்தானும்:

அருளொடு புணர்தலாவது:- ஒருயிர்க்கு இடர்வந்துழித் தன்னுயிரைக் கொடுத்துக் காத்தலும் அதன் வருத்தந் தனதாக வருந்துதலும் பொய்யாமை கள்ளாமை முதலியனவுமாம். இக் கருத்து நிகழ்ந்த பின்னர்த் துறவுள்ளம் பிறத்தலின் இதுவும் அறவெற்றியாயிற்று.

(உ-ம்) ''புனிற்றுப் பசியுழந்த புலிப்பிணவு தனாது
முலைமறாக் குழவி வாங்கி வாய்மடுத்
திரையெனக் கவர்வுற நோக்கி யாங்க
வேரிளங் குழவியின் முன்சென்று காணக்
கூருகிர் வயமான் புலவுவேட்டுத் தொடங்கிய
வாளெயிற்றுக் கொள்ளையிற் றங்கினன் கதுவப்
பாசிலைப் போதி மேவிய பெருந்தகை
யாருயிர் காவல் பூண்ட
பேரருட் புணர்ச்சியி னகலு மாறே.''[14]

''தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.''

(குறள் இன்னா-8)

''வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.''

(குறள் வாய்மை-1)

''களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில்.'' (குறள் கள்ளாமை-7)

''யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி லதனி னிலன்.'' (குறள் துறவு-1)

ஏனையவும் இதன்கண் அடக்குக.

---

14. ஈன்ற அணிய பெண்புலியானது தன்னிடம் பாலருந்தும் குட்டியைப் பிரித்துத் தன் வாய்க்கொண்டு இரையாக உண்ணத் தொடங்கியதைப் போதி மரத்தடியில் மேவிய புத்தர் பெருமான் கண்டு புலால் உணவு விரும்பி யுண்ணத் தொடங்கிய அப்புலியின் வாயில் தான் சென்று தங்கி அப்புலிக்குட்டியின் உயிரைக் காத்த பேரருட் புகழானது உலகெங்கும் பரவியது.

**காமம் நீத்த பாலினாலும்**—அங்ஙனம் பிறந்த பின்னர் எப் பொருள்களினும் பற்றற்ற பகுதியானும் :

**(உ-ம்)** ''காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி
னாமங் கெடக்கெடு நோய்.''

(குறள்-மெய்யு-10)

பாலென்றதனால் உலகியலுணின்றே காமத்தினைக் கைவிட்ட பகுதியுங் கொள்க.

''இளையர் முதிய ரெனவிருபால் பற்றி
விளையு மறிவென்ன வேண்டா—விளையனாத்
தன்றாதை காம நுகர்தற்குத் தான்காம
மொன்றாது நீத்தா னுளன்.''[15]

(பெரும் பொருள் விளக்கம்—புறத்திரட்டு—அறிவுடைமை-15)

என்று இருபாற்பட்ட ஒன்பதிற்றுத் துறைத்தே—முன்னர் ஒன் பானும் பின்னர் ஒன்பானுமாக இரண்டு கூறுபட்ட ஒன்பதாகிய பதினெட்டுத் துறையினையுடைத்து வாகை என்றவாறு.

இதனுள் ஏதுவிரியாதனவற்றிற்கும் ஏது விரித்தவாற்றான் இருபாற்பட்ட பதினெட்டாத லுடைத்தென முடிக்க.[16]

(21)

---

15. அறிவு என்பது இளையவர் முதியவர் என்ற இரு பருவ நிலைக்கு ஏற்ப அமையும் என்று கூறவேண்டுவ தில்லை. ஏன் எனின், தன் தந்தை காமம் நுகரவேண் டித் தன் இளமை துறந்து காமம் இல்லாமல் வாழ்ந்த வனும் இவ்வுலகில் உளன்.

(இது யயாதி கதை கூறியது)

16. இச்சூத்திரத்துள் வகையினும், வேலினானும், ஆற்ற லானும் என்பனபோல இன் ஆன் என்பனவற்றால் பதி னெட்டுத் துறையானமைக்குக் காரணம் கூறியும், கள வழி, முன் தேர்க்குரவையும் பின் தேர்க் குரவையும் என் பன போலக் காரணம் குறிக்கும் இன் ஆன் இல்லாமல் கூறியும் இருத்தலின் காரணம் கூறாதவற்றுக்குக் கள வழியானும் முன் தேர்க் குரவையினானும் பின்தேர்க் குரவையினானும் என்பனவாக இன் ஆன் கொடுத்துப் பதினெட்டு துறை கூறியதாகக் கொள்க

## சோம இளவரசு

சூத்திரம் : 21

கூதிர் வேனி..................துறைத்தே.

கருத்து :-இது, வாகைத்திணையின் துறை பதினெட்டு ஆமாறு விளக்குகிறது. இவைகள் துறைகளென்றதனால் முன் சூத்திரம் கூறிய ஏழும் துறையாகாமல் வாகைத்திணையின் வகையாதல் தேறப்படும்.

பொருள் :- கூதிர் வேனில் என்று இரு பாசறைக்காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும்—கூதிர்ப் பாசறை, வேனிற் பாசறை, என்னும் காலத்திற்கேற்ப அமைத்த கட்டூர்களில் போர் விருப்பால் பொருந்தியிருந்து அமர் கருதிய முறையும். (பாசறை எனினும் கட்டூரெனினும் ஒக்கும்.)

கூதிர்ப் பாசறைக்குச் செய்யுள் :-

''புலம்பொடு வதியு நலங்கிள ரரிவைக்
கின்னா வரும்படர் தீர, விறறந்
தின்னே முடிகதில் லம்ம; மின்னவி
ரோடையொடு பொலிந்த வினைநவில் யானை
நீடிர டடக்கை நிலமிசைப் புரளக்
களிறுகளம் படுத்த பெருஞ்செய் யாடவ
ரொளிறுவாள் விழுப்புண் காணிய புறம்போந்து
வடந்தைத் தண்வளி யெறிதொறு நுடங்கித்
தெற்கேர் பிறைஞ்சிய தலைய நற்பல்
பாண்டில் விளக்கிற் பரூஉச்சுட ரழல
வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகமொடு
முன்னோன் முறைமுறை காட்டப் பின்னர்
மணிபுறத் திட்ட மாத்தாட் பிடியொடு
பருமங் களையாப் பாய்பரிக் கலிமா
விருஞ்சேற்றுத் தெருவி னெறிதுளி விதிர்ப்பப்
புடைவீ ழந்துகி லிடவயிற் றழீஇ
வாடோட் கோத்த வன்கட் காளை,
சுவன்மிசை யமைத்த கையன், முகனமர்ந்து
நூல்கால் யாத்த மாலை வெண்குடை
தவ்வென் றசைஇத் தாதுளி மறைப்ப
நள்ளென் யாமத்துப் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரும் வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே,

(நெடுநல்வாடை, வரி 166 முதல் 188 முடிய)

நக்கீரரின் இப்பழம் பாட்டடிகளில் 'வடந்தைத் தண்வளி யெறிதொறு நுடங்கி' என்பது முதல் பாசறையில் கூதிரின் பரிசு கூறப்படுவ தறிந்தின்புறுக.

'மலைமிசைக் குலைஇய, எனும் மதுரை எழுத்தாளன் அகப் பாட்டும் 'மூதில் வாய்த் தங்கிய' எனும் பெரும் பொருள் விளக்க வெண்பாவும் இத்துறைச் செய்யுட்களாகும்.

இனி, வேனிற் பாசறைக்குச் செய்யுள் :

''பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை
..................................................
'தேம்பாய் கண்ணி நல்வலந் திருத்திச்
சேறுவாய்த் தொழிந்தோ ருள்ளியுந் தோறுமிபு
வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த்
துண்ணா துயங்கு மாசிந் தித்தும்,
ஒருகை பள்ளி யொற்றி, யொருகை
முடியொடு கடகஞ் சேர்த்தி, நெடிதுநினைந்து
பகைவர்ச் சுட்டிய படைகொ ணோன்விர
னகைதாழ் கண்ணி நல்வலந் திருத்தி,
யரசிருந்து பணிக்கு முரசுமுழங்கு பாசறை
யின்றுயில் வதியுநற் காணா டுயழ்ந்து
நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
நீடுநினைந்து தேற்றியு மோடுவளை திருத்தியு
மையல் கொண்டு மொய்யென வுயிர்த்து
மேவுறு மஞ்ஞையி னடுங்கி யிழைநெகிழ்ந்து
பாவை விளக்கிற் பரூஉச்சுட ரழல
விடஞ்சிறந் துயரிய வெழுநிலை மாடத்து
முடங்கிறைச் சொரிதரு மாத்திர ளருவி
யின்ப லிமிழிசை யோர்ப்பனள் கிடந்தோ
ளஞ்செவி நிறைய வாலின..............
..................................................
வெதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின்
முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழியத்
துனைபரி துரக்குஞ் செலவினர்
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே.''

(முல்லைப்பாட்டு. வரி 6 : 71 முதல் 86 முடிய; 100 முதல் இறுதிவரை)

நப்பூதனார் இம்முல்லைப்பாட்டடிகளில் வினைமேற் சென்ற தலைவன் மீளற்குரிய காருக்குமுன் போரை விரும்பிக் காதலை வென்று களத்துத் தங்கும் வேனிற் பாசறைப் பரிசு விளக்குதல் கண்டு மகிழ்க.

2. ஏரோர் களவழியன்றிக் களவழித் தேரோர் தோற்றிய வென்றியும்—களமர் களத்தில் நெற்போரடித்தல் முதலிய விழவார்ப்போடு, போர்க்களத்தில் தேர் மறவர் வெற்றி விழவின் வீறும்;

ஏரோர் களவழிக்குச் செய்யுள்:

''குடிநிறை வல்சிச் செஞ்சா லுழவர்
நடைநவில் பெரும்பகடு புதவிற் பூட்டிப்
பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சில்
உடுப்புமுக முழுக்கொழு மூழ்க ஊன்றித்
தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை
அரிபுகு பொழுதி னிரியல் போகி
வண்ணக் கடம்பின் நறுமல ரன்ன
வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்காற்
கறையணற் குறும்பூழ் கட்சி சேக்கும்.''

(பெரும்பாண். வரி. 107—205)

இனித்தேரோர் களவழிக்குச் செய்யுள் :- (1)

''உருவக் கருந்தேர் முருக்கிமற் றத்தேர்ப்
பருதிசுமந் தெழுந்த யானை—இருவிசும்பிற்
செல்சுடர் சேர்ந்த மலைபோன்ற செங்கண்மால்
புல்லாரை யட்ட களத்து.

(களவழி-4)

(2) ''எனைப்பெரும் படையனோ சினப்போர்ப் பொறையன்
என்றனி ராயின், ஆறுசெல் வம்பலிர்!
மன்பதை பெயர, அரசுகளத் தொழியக்
கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை
மீபிணத் துருண்ட தேயா வாழியிற்
பண்ணமை தேரு மாவு மாக்களும்
எண்ணற் கருமையின் எண்ணின்றோ விலனே;
கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி
உகக்கும் பருந்தி னிலத்துநிழல் சாடிச்
சேண்பரன் முரம்பி னீர்ம்படைக் கொங்கர்

ஆபரத் தன்ன செலவிற்பல்
யானை காண்ப லவன்தானை யானே.

(பதிற்று-செய்-77.)

(3) தேரோர் வென்ற கோமான் முன்றேர்க் குரவையும்—தேர் மறவரை வென்றழித்த குரிசிலின் தேர்முன் அவன் படை மறவர் களித்தாடுங் குரவைக் கூத்தும்.

செய்யுள் :—(1)

''கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக
வாளழி வாங்கி அதரி திரித்த
வாளே ருழவன் மறக்களம் வாழ்த்தி,
.........................................
தேரூர் செருவும் பாடிப் பேரிசை
முன்தேர்க் குரவை முதல்வனை வாழ்த்தி''

(சிலப்பதிகாரம், கால்கோட்காதை
வரி 232-234 & 239-240)

(4) ஒன்றிய மரபிற் பின் தேர்க்குரவையும்—அதனொடு பொருந்து முறையானே, வென்ற குரிசில் சென்ற தேரின்பின் அவன் தானை மறவரும் ஏனை விறலியரும் அவன் புகழ் பாடி வாழ்த்தியாடும் குரவைக் கூத்தும்; (இனி, தேர்ப்பின் களத்துப் பிணக்கூழுண்ணும் பேய்களாடுங் குரவை எனினும் அமையும்.

செய்யுள் :—

''வென்று களங்கொண்ட வேந்தன்தேர் சென்றதற்பின்
கொன்ற பிணதிணைக்கூழ் கொற்றவை—நின்றளிப்ப
உண்டாடு பேய்கண் டுவந்தனவே போர்ப்பரிசில்
கொண்டாடின குரவைக் கூத்து.''

(பெரும்பொருள் விளக்கம்)

''பின்றேர்க் குரவைப் பேயாடு பறந்தலை.''

(சிலப்பதிகாரம், கால்கோட் காதை, வரி 241)

என்பது மது.

(5) பெரும்பகை தாங்கும் வேலினானும்—தனதிற் பெரிய பகைப் படையைத் தடுக்கும் வேல் வென்றியும்.

[பகை-என்பது பகைப் படைக்கு ஆகு பெயர். தாங்குதல்-தடுத்தல்.]

செய்யுள் :—

''பிறர்வேல் போலா தாகி யிவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை யுடைத்தே;
இரும்புற நீரு மாடிக் கலந்திடைக்
குரம்பைக் கூரைக் கிடக்கினும் கிடக்கும்;
மங்கல மகளிரொடு மாலை சூட்டி
இன்குர லிரும்பை யாழொடு ததும்பத்
தெண்ணீர்ப் படுவினும் தெருவினும் திரிந்து
மண்முழு தழுங்கச் செல்லினும் செல்லும்ஆங்
கிருங்கடற் றானை வேந்தர்
பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னாதே.

(புறம்—332)

(6) அரும்பகை தாங்கும் ஆற்றலானும்—தடுத்தற்கரிய மாற்றலர் தானை மடங்கத் தடுக்கும் திறலும்:

[இதிலும், ''பகை''—பகைப்படைக்கு ஆகு பெயர்]

''வணங்கு தொடைப்பொலிந்த வலிகெழு நோன்றாள்
அணங்கருங் கடுந்திற லென்னை முணங்குநிமிர்ந்
தளைச்செறி யுழுவை இரைக்குவந் தன்ன—
மலைப்பரு மகல மதியார் சிலைத்தெழுந்து'
''விழுமியம், பெரியம் யாமே, நம்மிற்
பொருநனு மிளையன், கொண்டியும் பெரிதென''
எள்ளி வந்த வம்ப மள்ளர்,
புல்லென் கண்ணர் புறத்திற் பெயர,
ஈண்டவர் அடுதலு மொல்லான்; ஆண்டவர்
மாணிழை மகளிர் நாணினர் கழியத்
தந்தை தம்மூ ராங்கட்
டெண்கிணை கறங்கச்சென் றாண்டட் டனனே.''

(புறம்-78)

[இடைக் குன்றூர் கிழாரின் இப்புறப்பாட்டு நெடுஞ்செழியன், தன்னை மதியாமல் தன் இளமை இகழ்ந்து மேல் வந்த அரும் பகை தாங்கி வென்ற, ஆற்றலை விளக்குகிறது. மேல் ஐந்தாவதும் இதுவும் ஒரு குரிசிலின் தறுகண்மைத் திறலே குறிப்பினும், முன்னது வேல் விறலை விதந்து கூறப், பின்னது போர்த்திறனும் பெருவலியும் பேசுகிறது.]

(7) புல்லா வாழ்க்கை, வல்லாண் பக்கமும்—சிறந்து பொருந்தாச் சிறிய வாழ்வினும் வண்மை குன்றா வேளாண்மை யும்.

'இடனில் பருவத்தும் ஒப்புரவுக் கொல்கார்
கடனறி காட்சி யவர்' .........ஆதலின்,

வறுமைக் கஞ்சாத் தறு கணருக்கம் வாகைக் குரித்தாயிற்று.

செய்யுள் :—

'எருது காலுறாஅ திளைஞர் கொன்ற
சில்விளை வரகின புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாண ருண்டுகடை தப்பலின்
ஒக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் லாளர் முகத்தவை கூறி
வரகுகட னிரக்கு நெடுந்தகை
அரசுவரிற் றாங்கும் வல்லா ளன்னே,''

(புறம்-327)

இனி, இதற்கு 'வாழ்க்கையை விரும்பாது. வான் விரும்பிப் போர் மகிழும் வல்லாண்மையும்' எனப்பொருள் கூறினும் பொருந் தும். அதற்குச் செய்யுள் வருமாறு :—

'கலிவர லூழியின் வாழ்க்கை கடிந்து
மலிபுகழ் வேண்டு மனத்தர்—ஒலிகடல்சூழ்
மண்ணகலம் வேண்டாது வான்வேண்டி யீண்டினார்
புண்ணியமாம் போர்க்களத்துப் போந்து.

(பாரதவெண்பா)

(8) ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச் சொல்லிய வகை யின் ஒன்றொடு புணர்த்துத் தொல்லுயிர் வழங்கிய அவிப்பலியா னும்—பகைவரும் நாணுமாறு தம் தலைவரைக் குறித்து முன் சொன்ன வஞ்சின வுரையொடு வாய்ப்ப அமைத்துப் பழந் தொடர் புடைய (படையா) உயிரைக் களப்பலியாக வழங்கும் மற வேள்வியும்,

செய்யுள் :—1

''குழாக்க ளிற்றரசர் குறித்தெழு கொலைக்களம்
விழாக் களம்போல மெய்ம்மலி யுவகை

ஆண்மை யுள்ளம் கேண்மையிற் றுரத்தலின்
அழுந்து படப்புல்லி விழுந்து களம்படுநரும்,
.........................................
பிறப்பும் பெருமையும் சிறப்பும் செய்கையும்
அரசறி பெயரும் உரைசெய லாண்மையும்
உடையோ ராகிய படைகோண் மாக்கள்—
சென்று புகுமுலக மொன்றே யாகலின்—
ஒன்றுபடு மனத்தொடு கொன்றுகொன் றுவப்பச்
செஞ்சோற்று விலையும் தீர்ந்து, தம்மனைவியர்
தம்பிணந் தழீஇ நொந்துகலுழ்ந் திரங்கவும்
புதுவது புனைந்த மகளிர்க்கு
வதுவை சூட்டிய வான்படர்ந் தனரே.''

(பழைய பாட்டு-புறத்திரட்டு-1354)

செய்யுள் :—2

'இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்?

(குவள்-779)

(9) 'ஒல்லாரிடவயிற் புல்லிய பாங்கினும்—பகைவரை இடம் வாய்ப்புழி அன்பாற் றழுவிக்கொள்ளும் பொருந்தகவும்;

செய்யுள் :—1

''பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு.''

(குறள்-874)

செய்யுள் :—2

அறத்திற்கே அன்புசார் பென்ப வறியார்;
மறத்திற்கு மஃதே துணை.

(குறள்-76)

இனி, இதற்குப் ''பகைவர் நிலங் கைப்பற்றியாளும் திறலும்'' எனப் பொருள் கூறுவர் இளம்பூரணர். அப்பொருளில் இத்துறைக்குச் செய்யுள் :-

''நனிபுகன் றுறைது மென்னா தேற்றெழுந்து
பனிவார் சிமையக் கானம் போகி
அகநாடு புக்கவர் அருப்பம் வெளவி
யாண்டுபல கழிய வேண்டுபுலத் திறுத்து
மேம்பட மரீஇய வெல்போர்க் குரிசில்.''

(மதுரைக் காஞ்சி, வரி 147-151)

**குறிப்பு**:- இவ்வொன்பதும் மறத்துறையில் வாகைக் குரியன. இனி வரும் ஒன்பதும் அறத்துறையில் வாகைக்குரிய வாகும்.

(10) பகட்டினானும் ஆவினானும் துகள் தபுசிறப்பின் சான்றோர் பக்கமும்-எருதானும் பசுவானும் குற்றமற்ற சீர்மிகு சால்புடையார் பெருமையும்;

[பகட்டால் சிறப்புடைச் சான்றோராவார், கோழை படா மேழிச் செல்வராய வேளாண் மாந்தர்; ஆவாற் சிறப்புறுவார் ஆயர், அதாவது கோவலர். ஆவினானும் எனக் கொள்ளாமல், மாவினானும் எனப் பிரித்து, யானை குதிரையாகிய மாவினானும் என்று உரை கூறுவர் நச்சினார்க்கினியர்; அது மறத்துறைக்குப் பொருந்துமல்லாமல், அவரே கூறுகிறபடி முன் ஒன்பது மட்டும் மறவகையாக இதுமுதல் பின் வரும் ஒன்பதும் அறவகை வாகைத் துறைகளாதலின், அவ்வரிசையில் முதலாகுமிது அறத்துறைப் பொருளோடமையாமை தெளிவு.]

1. பகட்டினாற் சிறப்புடைச் சான்றோர் பெருமைக்குச் செய்யுள்:- 1

''யானை நிரையுடைய தேரோ ரினுஞ்சிறந்தார்
ஏனை நிரையுடைய ஏர்வாழ்நர்—யானைப்
படையோர்க்கும் வென்றி பயக்கும் பகட்டே
ருடையோர்க் கரசரோ வொப்பு?''

(பெரும் பொருள் விளக்கம்)

2. ஆவினாற் சிறப்புடைச் சான்றோர் பெருமைக்குச் செய்யுள்:-

''..............................மறிய
குளகரை யாத்த குறுங்காற் குரம்பைச்
செற்றை வாயிற் செறிகழிக் கதவிற்
கற்றை வேய்ந்த கழத்தலைச் சாம்பின்
அதளோன் துஞ்சும் காப்பி ...தள
நெடுந் தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்
கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்
இடுமுள் வேலி யெருப்படு வரைப்பின்
நள்ளிருள் விடியற் புள்ளெழப் போகிப்
புலிக்குரன் மத்த மொலிப்ப வாங்கி
ஆம்பி வான்முகி லன்ன கூம்புமுகை

உறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ
நாண்மோர் மாறு நன்மா மேனிச்
சிறுகுழை துயல்வருங் காதிற் பணைத்தோட்
குறுநெறிக் கொண்ட கூந்த லாய்மகள்
அளிவிலை யுணவிற் கிளையுட னருத்தி
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்
எருமை நல்லான் கருநாகு பெறூஉ
மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்
இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப் பன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்.''

(பெரும்பாண். வரி 147-168)

''ஆகாத் தோம்பி யாப்பய னளிக்கும்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை.''

(சிலம்பு, அடைக்கலக். வரி, 120-121)

எனும் சிலப்பதிகார அடிகளும் இத்துறையாம்.

(11) கட்டில் நீத்த பாலினானும்—அரசு கட்டிலை இகழ்ந்து துறக்கும் உரவோர் பரிசும்:

செய்யுள் :-

''பரிதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநிலம்
ஒருபக லெழுவர் எய்தி யற்றே
வையமும் தவமும் தூக்கிற் றவத்துக்
கையவி யனைத்தும் ஆற்றா தாகலின்
கைவிட் டனரே காதலர்; அதனால்
விட்டோரை விடாஅள் திருவே;
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே.''

(புறம்-358)

[இங்குக் ''கடிமனை நீத்த பாலினானும் எனப் பாடங் கொண்டு, ''பிறர்மனை நயவாமை குறிக்கும்'' என்பர் இளம் பூரணர். அஃதான்ற அறவொழுக்கா மெனினும், இல்வாழ்வார் எல்லார்க்கும் பொது அறமாதலின் தனி ஒருவர் வாகைக்குரிய வீறாகாது. அன்றியும், அதனினும் அருமைத்தாகும் அறிவழி காம வெறியொழி விறலை இதன் கீழ்க் ''காம நீத்த பாலினா னும் எனக் கூறுதலான், அதிலடங்கும் பிறர்மனை நயவாமை யைத் தனித்தொரு துறையாக்குதலிற் சிறப்பில்லை. இன்னும்,

அப்பாடங்கொள்ளின், இறைமைச் செல்வத்தை இகழ்ந்து துறக்கும் உள்ள வெறுக்கையைக் குறிக்கும் வாகைத்துறை இல்லாதொழியும் ஆகையால், இங்குக் ''கட்டில் நீத்தபால்'' எனும் பாடமே சிறத்தலறிக.]

(12) எட்டு வகை நுதலிய அவையத்தானும்—எண் வகைச் சால்புகளும் நிறைந்தார் மன்றத்து மதிக்கப் பெறுஞ் சிறப்பும்;

குறிப்பு :- இது அவையத்து முந்தியிருக்கும் வீறு கூறுகிறது. அத்தகைய சால்புகள்:- ஒழுக்கம், கல்வி, குடிப்பிறப்பு, வாய்மை, தூய்மை, நடுவுநிலை, அவாவின்மை, அழுக்காறாமை எனப்படுதல் நூலானறிந்தது.

செய்யுள் :-

''குடிப்பிறப் புடுத்துப், பனுவல் சூடி,
விழுப்பே ரொழுக்கம் பூண்டு, காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித், தூய்மையின்
காத லின்பத்துட் டங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி, வைகலும்
அழுக்கா றின்மை, அவாவின்மை, யென்றாங்
கிருபெரு நிதியமு மொருதா மீட்டுந்
தோலா நாவின் மேலோர் பேரவை.''

(ஆசிரிய மாலை)

(13) கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமை யானும்—வரையறுத்த ஒழுக்கங்கருதும் உரனும்;

குறிப்பு :- கண்ணுமை, கண்ணுதல் அடியாகப் பிறந்த பண்புப் பெயர்; (கண்ணுதல்-கருதல்.) ஆளுதல் ஆண்மை எனவும், புகழ்தல் புகழ்மை எனவும் வருதல் போன்றது. விருப்பை வென்று அறிவாற் புலனைக் கட்டுப்படுத்துவதே ஒழுக்கமாதலின், 'கட்டமையொழுக்க மெனப்பட்டது. அது வாகையாதல், ''ஐந்தடக்கலாற்றின்'— ''ஐந்தவித்தானாற்றல்—எனப் புலனடக்குதல் அரிய திறலாகக் கூறப்படுதலானறியலாம். [இனி, ''கட்டமை'' என்பதற்கு 'அறநூல் விதித்த' எனப் பொருள் கூறித் தரும சாத்திரங்களுக்குச் சார்வபௌம ஆதிக்கமளிப்பர் சிலர்; தரும நூல்கள் மக்களுக்குத் தம்முள் மாறுபட விதிப்பனவாதலானும், அவற்றை எழுதியோ ராணைக்கு உளச் சான்றுக்கு எதிராக எல்லாரும் கட்டுப்படுதல் இயல்பன்றாதலானும், ஒருகால் அவ்வகைக் கட்டுப்பாடு வற்புறுத்தப்

படுமேல் அது வாகையாகாமையானும், அது பொருளன்மை யறிக.]

செய்யுள் :- (1)

''ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி''

(குறள்-25)

செய்யுள் :- (2)

''பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.''

(குறள்-6)

(14) இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்-இடையற வின்றி வள்ளிய புகழை வளர்க்கும் கொடையும்.

செய்யுள் :- (1)

''ஒருநாட் செல்லலம், இருநாட் செல்லலம்;
பலநாட் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ,
அணிபூ ணணிந்த யானை யியறே
ரதியமான்; பரிசில் பெறூஉங் காலம்
நீட்டினும் நீட்டா தாயினும், யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவே, பொய்யா காதே;
அருந்தே மாந்த நெஞ்சம்
வருந்த வேண்டா, வாழ்கவவன் தாளே.''

(புறம்-101)

செய்யுள் :- (2)

''கடந்தடு தானை மூவிரும் கூடி
உடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியு முளமே
குன்று முண்டுநீர் பாடினிர் செலினே ''

(புறம்-110)

செய்யுள்:- (3)

''ஈயென இரத்த லிழிந்தன்று, அதனெதிர்
ஈயே னென்ற லதனினு மிழிந்தன்று,
கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன்று, அதனெதிர்
கொள்ளே னென்றல் அதனினு முயர்ந்தன்று,
தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணா ராகுப நீர்வேட் டோரே;
ஆவு மாவுஞ் சென்றுணக் கலங்கிச்
சேற்றொடு பட்ட சிறுமைத் தாயினும்,
உண்ணீர் மருங்கின் அதர்பல வாகும்
புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை
உள்ளிச் சென்றோர்ப் பழியலர், அதனாற்
புலவேன், வாழியர் ஓரி! விசும்பிற்
கருவி வானம் போல
வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே.''

(புறம்-204)

(15) பிழைத்தோர்த் தாங்குங் காவலானும்-தவறிழைத்தோரைப் பொறுக்கும் ஏமமும்;

செய்யுள்:- (1)

''நிலமிசை வாழ்நர் அலமரல் தீர''

எனத் தொடங்கும் தாமம்பல் கண்ணனார் புறப்பாட்டில் கீழ்வருமடிகள் இத்துறை குறிக்கும்.

''நீர்த்தோ நினக்கென வெறுப்பக் கூறி
நின்யான் பிழைத்தது நோவா யென்னினும்
நீபிழைத் தாய்போல் நனிநா ணினையே,
தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்கும் காணுமெனக்
காண்டகு மொய்ம்ப! காட்டினை, ஆகலின்,
யானே பிழைத்தனென்; சிறக்க நின்னாயுள்,
மிக்குவரு மின்னீர்க் காவிரி
எக்க ரிட்ட மணலினும் பலவே.''

(புறம்-43)

செய்யுள்:- (2)

''கருத்தாற்றித் தம்மைக் கடிய செய்தாரைப்
பொறுத்தாற்றிச் சேறல் புகழால்;— ஒறுத்தாற்றின்
வானோங் குயர்வரை வேற்ப பயமின்றே
தானோன் றிடவருஞ் சால்பு.''

(பழமொழி-19)

செய்யுள்:- (3)

''மிகுதியால் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியால் வென்று விடல்.''

(குறள்-158)

(இதில், மிகுதி-செருக்கு; தகுதி-பொறுமை, மிக்கவை—தவறுகள்.)

(16) பொருளொடு புணர்ந்த பக்கத்தானும்—மெய்ப்பொருள் பற்றிய உள்ளப் பரிசும்;

செய்யுள்:-

''முந்நீர்த் திரையி னெழுந்தியங்கா மேதையும்
நுண்ணூற் பெருங்கேள்வி நூற்கரை கண்டானும்
மைந்நீர்மை யின்றி மயலறுப்பா னிம்மூவர்
மெய்ந்நீர்மை மேனின் றவர்.''

(திரிகடுகம்-35)

இனி,

(1) ''ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.''

(குறள்-354)

(2) ''கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.''

எனவரும் வள்ளுவர் குறள்களு மித்துறையாகும்.

(17) அருளொடு புணர்ந்த அகற்சியானும்—யார் மாட்டும் விரிந்து பெருகும் அருளொடு கூடிய துறவும்.

குறிப்பு:- கடனாற்றும் முயற்சிக் கஞ்சித் தனக் கொழிவு தேடும் போலித்துறவை விலக்கி, சுரந்து எல்லார் மாட்டும் பரந்து பயன்தரும் அகன்ற அன்பாற் பிறர்க்கென முயலும் மெய்த் துறவின் வீறே ஈண்டுக் கூறக் கருதலின், வாளா அகற்சி

என்னாது, ''அருளொடு புணர்ந்த'' என்றடையொடு தொடர்ந்து சுட்டப்பட்டது.

செய்யுள்:- (1)

''மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை,''

(குறள்-244)

செய்யுள்:- (2)

''உண்டா லம்ம இவ்வுலகம்; இந்திர
ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே; முனிவிலர்;
துஞ்சலு மிலர், பிறரஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிருங் கொடுக்குவர்; பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர்; அயர்விலர்;
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே.''

(புறம்-182)

(1) காமநீத்த பாலினானும்—வெல்லற்கரிய காமத்தை வெறுத்து விலக்கு மருந்திறலும்;

குறிப்பு:- இது துறவன்று; இல்வாழ்ந்தும் காமம் கடியும் உரனுள்ளமுடைய பெரியார் உண்மையால், வேண்டியவெல்லாம் ஒருங்குவிடும் பெருந்துறவின் வேறாய் இருநிலை வாழ்வினு மொருதலை நிற்போரறமாகும். முற்றும் பற்றுவிடும் கருத்தை இதிற் புகுத்தின், மேற்குறித்த தீரத்துறக்கும் ''அகற்சி'' யுளடங்கிக் கூறியது கூறுங் குற்றமாய் முடியும். ஆதலின், மேலது துறவும், இத்துறை துறவறம் கருதாது காமம் கடியும் இருநிலைக்கும் பொதுவான உரனுள்ளப் பெருமையும் விளக்குதல் வெளிப்படை.

செய்யுள்:-

''இளையர் முதியர் எனவிருபால் பற்றி
விளையு மறிவென்ன வேண்டா—இளையனாய்த்
தன்தாதை காமம் நுகர்தற்குத் தான்காமம்
ஒன்றாது நீத்தா னுளன்.''

(பெரும் பொருள் விளக்கம்)

2 ''எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கென்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.''

(குறள்-910)

(இவ்வொன்பதும் மேற்கூறியாங்கு அறவகை வாகைத் துறைகளாகும்.)

என்றிரு பாற்பட்ட ஒன்பதிற்றுத்துறைத்தே—என வகைக்கு ஒன்பதாய் இருவகையிலெண்ணிய பதினெட்டுத் துறையுடையது வாகைத்திணை.

குறிப்பு:- பதினெட்டுத் துறைத்தே என்னாது, ''இரு பாற்பட்ட ஒன்பதிற்றுத்துறைத்தே'' என்றார்; மேற்கூறியாங்கு முன் மறவகையிலொன்பதும் பின் அறவகையிலொன்பதுமாக வாகைத்திணை துறைகொள்ளும் எனற்கு. இனி, இத்திணைத் துறை பதினெட்டும் தன்மையால் இருவேறு வகைப்படுதலின் அவற்றை ஒருசேர எண்ணுதலமையாதாதலின், ''இருபாற் பட்ட'' எனவும், வகைக்கு ஒன்பதேயாதல் குறிக்க ''ஒன்ப திற்றுத்துறைத்து'' எனவும் விளக்கினார் இந்நூலார்.

இதில் வரும் இன்னும் ஆனும் உரை யசைகள்; பாங்கு பக்கம் என்பன இசை நிரப்பு; ஈற்றேகாரம் அசை.

(27)

76. காஞ்சி தானே பெருந்திணைப் புறனே
பாங்கருஞ் சிறப்பிற் பன்னெறி யானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே.

(18)

ஆ.மொ.இல;

Kanji

77. 'Kanji' is the 'Puram' of 'Perunthinai'

78. It is the ephemeral nature of the world in all phases of life.

பி. இ. நூ.

இல. வி. புற. 16. தொல் சூத்திரமே.

**இளம்பூரணர்**

76. காஞ்சி தானே............நெறித்தே.

இது காஞ்சித்திணையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) காஞ்சி பெருந்திணை புறன்—காஞ்சி என்னும் திணை பெருந்திணை என்னும் அகத்திணைக்குப் புறனாம்; பாங்கு அருஞ்சிறப்பின் பல் நெறியானும் நில்லா உலகம் புல்லிய நெறித்து—அது பாங்காதல் அரிய சிறப்பினாற் பலநெறியானும் நில்லாத உலகத்தைப் பொருந்திய நெறியை யுடைத்து.

பாங்கருமையாவது, ஒருவற்கு ஒரு துணையாகாமை, நிலையாமை மூவகைப்படும்.

இளமை நிலையாமை செல்வம் நிலையாமை யாக்கை நிலையாமை என இவற்றுள்,

இளமை நிலையாமை யாவது,

''பனிபடு சோலைப் பயன்மரம் எல்லாம்
கனிஉதிர்ந்து வீழ்ந்தற்று இளமை—நனிபெரிதும்
வேற்கண்ணள் என்றிவளை வெஃகன்மின் மற்றிவளும்
கோற்கண்ணள் ஆகுங் குனிந்து.''[1]

(நாலடி- இளமை-7)

செல்வம் நிலையாமையாவது,

''அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்பர் ஓரிடத்திற் கூழெனிற் செல்வமொன்று
உண்டாக வைக்கற்பாற் றன்று.''[2]

(நாலடி. செல்வம்-1)

யாக்கை நிலையாமையாவது முன்னர்க் காட்டுதும்.

---

1. பழுத்தமரம் எல்லாம் பயன்படும் என்றாலும் பழங்கள் விழின் பயன்படாவாம். அவை போலவே யாக்கையும் இளமை நீங்கின் பயன் இல்லை. அதனால் இவள் வேல் கண்ணள் என்று அவள் இளமை கண்டு விரும்பாதீர். அவளும் குனிந்து கோலையே கண்ணாகக் கொள்ளும் முதியவளாவாள்.

2. இல்லாள் பக்கமமர்ந்து அறுசுவை உண்டியை ஊட்ட மறுகவளம் வேண்டாம் என மறுத்து உண்ட செல்வரும்-வறியராய் ஓரிடத்தில் கூழின் பொருட்டு இரப்பர்; ஆதலினால் செல்வம் என்பது ஒன்றை நிலைத்ததாக எண்ணி எதிர்காலத்துக்காகும் என்று வைத்தற் சிறப் புடையதன்று.

அதற்கு இது புறனாயவாறு என்னையெனின், ''ஏறிய மடற்றிறம்'' (அகத்திணை-54) முதலாகிய நோந்திறக் காமப் பகுதி அகத்திணை ஐந்தற்கும் புறனாயவாறு போல இது புறத்திணை ஐந்தற்கும் புறனாகலானும் இதுபோல அதுவும் நிலையாமை நோந்திறம் பற்றியும் வருதலானும் அதற்கு இது புறனாயிற்று.

(18)

**நச்சினார்க்கினியர்**

77. காஞ்சி தானே...........புறனே.

இத்துணையும் உரிப்பொருள் பெற்ற அகத்திணைக்குப் புறங் கூறி இஃது உரிப்பொருளில்லாத பெருந்திணைக்குப் புறனிது வென்கின்றது. இது வாகைக்குப் பின் வைத்தார், வீரக்குறிப்பு நிலையாமைக் குறிப்போடு உறவுடைத்து என்றற்கு.

இதன் பொருள் :- காஞ்சிதானே பெருந்திணைப் புறனே- எழுதிணையுட் காஞ்சிதானேயெனப் பிரிக்கப்பட்ட புறத்திணை பெருந்திணைக்குப் புறனாம் என்றவாறு.

அதற்கு இது புறனாயவாறு என்னையெனின், எண் வகை மணத்தினும் நான்கு மணம் பெற்ற பெருந்திணை போல இக் காஞ்சியும் அறமுதலாகிய மும்முதற் பொருளும் அவற்றது நிலையின்மையுமாகிய ஆறனுள்ளும் நிலையின்மை மூன்றற்கும் உரித்தாய் எல்லாத் திணைகட்கும் ஒத்த மரபிற்றாகலானும், 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறும்'[1] (105) என்ற நான்குஞ் சான்றோர் இகழ்ந்தாற் போல அறம் முதலியவற்றது நிலையின்மையுணர்ந்து அவற்றை அவர் இகழ்தலானும், 'ஏறிய மடற்றிற' (51) முதலிய நான்குந்[2] தீய காமமாயினவாறு போல உலகியனோக்கி நிலையாமையும் நற்பொருளன்றாகலானும், உரிப்பொருள் இடை மயங்கி வருதலன்றித் தனக்கு நிலமில்லாத பெருந்திணைபோல அறம்பொருளின்பம் பற்றியன்றி வேறு

---

1. பின்னர் நான்கு—பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் என்னும் ஆரிய மணம் நான்கு.
2. மடலேறுதல், இளமை நீங்கினாளிடத்துக் காமம், ஆற்றாமையுள்ள காமத்துமிகுதி, மிக்க காமத்துமிடல் என்பன நான்கு.

வேறு நிலையாமை யென்பதோர் பொருளின்றாதல் ஒப்புமை யானும், பெருந்திணைக்குக் காஞ்சி புறனாயிற்று. 'கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்' (1) ஏழனையும் அகமென்ற லின் அவ்வகத்திற்கு இது புறனாவதன்றிப் புறப்புறமென்றால் ஆகாமையுணர்க. இது மேலதற்கும் ஒக்கும்.

(22)

## நச்சினார்க்கினியர்

78. பாங்கருஞ் ………… நெறித்தே.

இது முற்கூறிய காஞ்சிக்குப் பொது இலக்கணங் கூறு கின்றது.

இதன் பொருள் :- பாங்கருஞ் சிறப்பின்-தனக்குத் துணை யில்லாத வீட்டின்பம் ஏதுவாக, பல்லாற்றானும்—அறம் பொருள் இன்பமாகிய பொருட்பகுதியானும் அவற்றுப் பகுதியாகிய உயிரும் யாக்கையுஞ் செல்வமும் இளமையும் முதலியவற்றானும், நில்லா உலகம் புல்லிய நெறித்து—நிலைபேறில்லாத உலகியற் கையைப் பொருந்திய நன்னெறியினையுடைத்துக் காஞ்சி என்றவாறு.

எனவே, வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமையைச் சான்றோர் சாற்றுங் குறிப்பினது காஞ்சியாயிற்று. பாங்கு—துணை.

உலகிற்கு நிலையாமை கூறுங்கால் அறமுதலாகிய பொருட் பகுதி ஏதுவாகக் கூறினன்றி உலகென்பதற்கு வடிவு வேறின்மை யிற் பல்லாற்றானுமென்று ஆன் உருபு கொடுத்தார்.[1] கெடுங்காற் கணந்தோறுங் கெடுவனவுங் கற்பந்தோறுங் கெடுவனவுமா மென்றற்கு ஆறென்றார்.[2] நிலைபெற்ற வீட்டினான் இவற்றின் நிலையாமையுணர்தலின் வீடு ஏதுவாயிற்று. பல்லாற்றானு மென்றதனாற் சில்லாற்றானும் வீடேதுவாகலின்றி நிலையாமைக் குறிப்பு ஏதுவாகலுங் கொள்க. இஃது அறிவன் தேயமுந் தாபதப் பக்கமும் பற்றி நிலையின்மைக் குறிப்புப் பெற்றாம்.

---

1. நில்லாவுலகம் என்றது மண்ணை மட்டும் குறியாது இளமை, யாக்கை, செல்வம் முதலியவற்றையும் குறித்தலின் அவற்றுக்கு உருவம் இல்லாமையின் பல வழியும் என்னாது பல வழியானும் (பல்லாற்றானும்) என ஆன் உருபு கொடுத்தார் ஆசிரியர்.

2. ஆறு-வழி கணந்தோறும் கெடும் வழியும் கற்பந்தோறும் கெடும் வழியும் உண்டு. அதனால் ஆறு என்றார்.

(உ-ம்) ''மயங்கிருங் கருவிய விசும்பு முகனாக
விளங்கிய விருசுடர் கண்ணெனப் பெயரிய
வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்
வயிரக் குறட்டின் வயங்குமணி யாத்துப்
பொன்னந் திகிரி முன்சமத் துருட்டிப்
பொருநர்க் காணாச் செருமிகு மொய்ம்பின்
முன்னோர் செல்லவுஞ் செல்லா தின்னும்
விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற
வுளனே வாழியர் யானெனப் பன்மா
ணிலமக ளழுத காஞ்சியு
முண்டென வுரைப்பரா லுணர்ந்திசி னோரே.''[3]

(புறம்-365)

இதனுள் உண்டென உரைப்பரால் உணர்ந்தோரென்றவின் வீடுபேறு ஏதுவாகத் தாபதர் போல்வார் நில்லா உலகம் புல்லியதாயிற்று. வீடுபேறு நிமித்தமாகச் சான்றோர் பல்வேறு நிலையாமையை அறைந்த மதுரைக்காஞ்சி இதற்கு உதாரணமாம்.

(23)

**சோமஇளவரசு**

சூத்திரம் : 22

காஞ்சி தானே.........புறனே.

கருத்து :- இது அகப் பெருந்திணைக்குக் காஞ்சித்திணை புறனாமென்பது சுட்டுகிறது.

பொருள் :- இதன் பொருள் வெளிப்படை.

---

3. கலந்த மேகத் தொகுதியுடைய விசும்பே முகமாக இருசுடரும் கண்ணாகக் காற்று வழங்காத மக்கள் நடமாடாத உலகத்திற்கு, வயிரக்குறட்டை (குடத்தை) யும் வயிரமணி பதித்த ஆரக்காலையும் உடைய தேரினைப் போரிற் செலுத்தியுருட்டிப் போரிடுவோரைக் காணாத வலிமையுடைய முன்னோராகிய வீரர் பலரும் இறந்து செல்லவும் யான் மட்டும் இன்னும் செல்லாமல் (அழியாமல்) விலைமாதர் எனப் பலரும் கூறும்படி யான் இருந்துளேன் என நிலமகள் அழுத நிலையாமையும் உண்டு என அறிந்தவர் உரைப்பர்.

குறிப்பு :- ஏகார மிரண்டில், முன்னது பிரிநிலை; மற்றது ஈற்றசை. பொறியவிக்கும் உரனின்றி இன்பம் விழைந்து மேவன செய்வார் காமவகை பெருந்திணையாவதுபோல, முயற்சி மேற் கொள்ளும் உரனின்றி நிலையாமை சொல்லி நெஞ்சழிய மனமடிவதே காஞ்சியாவதானும், இவ்விரண்டுக்கும் இடம் பொழுதிரண்டும் வரையறையின்மையானும், பெருந்திணைக்குக் காஞ்சி புறனாயிற்று.

(22)

சூத்திரம் : 23

பாங்கருஞ் சிறப்பிற்..........நெறித்தே.

கருத்து .—இது காஞ்சித்திணையின் இயல் விளக்குகிறது.

பொருள் :— பாங்கருஞ் சிறப்பின்—ஒப்பற்ற மறுமை யின்பத்துக்கு; பல்லாற்றானும்—பலவழியானும்; நில்லா வுலகம் புல்லிய நெறித்தே—நிலையற்ற உலகியலை யிகழும் முறையினை யுடையது (காஞ்சித்திணை).

குறிப்பு : நெறித்து என்னும் வினைக்கேற்பக் கொண்ட பொருட்டொடர்பால் காஞ்சித்திணை என்னுமெழுவாய் மேற் சூத்திரத்திலிருந்து கொள்ளப்பட்டது. பாங்கருமை—ஒப்பின்மை. 'சிறப்பு' வீடுபேறாம் மறுமையின்பமாதல் 'சிறப்பென்னும் செம்பொருள் காண்பதறிவு' என்னுங் குறளானறிக. இன்னுருபு ஏதுப் பொருட்டு. பல்லாறு, யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வ நிலையாமை போல்வன கூறுதலாம். மதுரைக் காஞ்சி இதற்கு எடுத்துக்காட்டாகும். இனி, இந்நூலில் இத்திணைக்கு வகுக்கும் துறைகளெல்லாம், உலகியலை இகழ்வதற்கு மாறாக, அதைத் தழுவியே அமைந்திருப்பதால், அதற்கேற்பப் பொருள் கூறுவாருமுளர். அவர் கூறும் பொருளாவது : பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற்றானும்—முறை சிறவாத பல துறையானும்; நில்லா வுலகம் புல்லிய நெறித்தே நிலையற்ற உலகியலைத் தழுவியது காஞ்சித்திணை.

இவ்வுரைக்கு, 'பாங்கு' முறைப் பொருட்டாகும்; 'அருஞ் சிறப்பு' அருங்கேடன் என்பதுபோலச் சிறவாமை குறிக்கும். இப்பொருளுக்கு, இதையடுத்த சூத்திர உரையில் அவ்வத்துறைக்குக் காட்டும் பாட்டே போதியதாம்.

(23)

**சிவலிங்கனார்**

காஞ்சி...........................நெறித்தே.

இத்சூத்திரம் காஞ்சித்திணை பெருந்திணையின் புறன் என்றும் காஞ்சியாவது யாது என்றும் கூறுகின்றது. (இ-ள்) காஞ்சித் திணைதான் பெருந்திணையின் புறனாம். அது நன்றில்லாத சிறப்பினையுடைய பல துறைகளாலும் நிலைபேறில்லாத இவ்வுலகத்தைப் பற்றிய வழியினைக் கூறுவதாகும் என்றவாறு.

நன்றில்லாத சிறப்பாவது செயலால் நன்றில்லாததுபோல் தோன்றிக் கொள்கையால் சிறந்திருத்தல். அத்துறைகள் அடுத்த சூத்திரத்துக் காணப்படுவன. உலக நிலையாமையை அத்துறைகள் மூலமே பொருத்திக்காட்ட இயலுமேயன்றி நேரே உலகின் நிலையாமையைக் காட்ட இயலாது; உலகம் நெடுங்காலமாக நின்று வருதலின் நெறித்து என்பதற்கு நெறியினைக் கூறுதலையுரியது என்க.

அகன் ஐந்திணைகளிற் பெருந்திணையாகிய ஏறிய மடற்றிறம்போல்வன வரின் அவற்றிற்குப் புறனாக ஓதுக்கப்படுதல் போல வெட்சி முதலிய புறத்திணைகளில் நிலையாமையுணர்வு வெறுக்கப்பட்டு ஒதுக்கப்படுதலின் காஞ்சி பெருந்திணைப் புறனாயிற்று பெருந்திணைக்கு முதற்பொருளும் கருப்பொருளும் இன்மையின் இது உரிப் பொருளால் மட்டும் புறனாயிற்று.

இச்சூத்திரத்துக்கு உரையாளர் அனைவரின் உரைகளும் பொருந்தும். புறனாயதற்குக் கூறும் காரணங்களும் பொருந்தமே.

77 மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையும்
கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்
பண்புற வரூஉம் பகுதி நோக்கிப்
புண்கிழித்து முடியும் மறத்தி னானும்
ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோன்
பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்
இன்னனென்று இரங்கிய மன்னை யானும்
இன்னது பிழைப்பின் இதுவா கியனெனத்[1]
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானும்
மின்னகை மனைவி பேஎய் புண்ணோன்
துன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும்

---

1. இதுவாகியரென—**நச். பாடம்**

நீத்த கணவன் தீர்த்த வேலின்
பெயர்த்த மனைவி வஞ்சி யானும்
நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பாடு அஞ்சிய மகட்பா லாலும்
முலையும் முகனுஞ் சேர்த்திக் கொண்டான்
தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ
ஈரைந் தாகும் என்ப பேரிசை
மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம்
மாய்ந்த பூசல் மயக்கத் தானும்
தாமே எய்திய[2] தாங்கரும் பையுளும்
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதா னந்தமும்
நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து
தனிமகள் புலம்பிய முதுபா லையும்
கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்
காதலி இழந்த தபுதார நிலையும்
காதலன் இழந்த தாபத நிலையும்
நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச்
சொல்லிடை இட்ட மாலை நிலையும்
அரும்பெருஞ் சிறப்பிற் புதல்வன்[3] பயந்த
தாய்தப வருஉந் தலைப்பெயல் நிலையும்
மலர்தலை உலகத்து மரபுநன்கு அறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
நிறையருஞ் சிறப்பின் துறையிரண்டு உடைத்தே.

(19)

ஆ. மொ. இல:

79. The great saying about the Death-God cannot be prevented in any way; the old age shown by those who have grown old to those who are still young; the heroism where one kills himself by tearing the wound for the sake of being honoured; the role of devil which guarded the person wounded

---

2. தாமேயேங்கிய—நச். பாடம்

3. மாய் பெருஞ்சிறப்பிற்புதன்வன்—நச். பாடம்.

in the battle there being no relation to guard him; the theme 'mannai' where by the person, died in the battle is pitied by describing his various good natures; the great oath of wreaking vengeance saying "If I fail in this I will become such"; the good natured wife having prevented the devil from touching her wounded husband and having not touched him; the wife having killed herself with the spear by which the husband lost this world there by her love; the refusal of the ancient family to give their daughter to the king who seeks her to marry; the state of being dead falling by the side of her husband embracing his chest and face:- these come to the total of two fives (ten)-they say.

The wailing of the relatives who have surrounded the son who has died in the battle with great honour; the pitiable sight caused by the wives who weep themselves out; 'muthananthaam' where, the passers finding the lady dying with her husband, appreciate the love between them; 'muthupalai' where, the lonely wife having lost her husband in the desert weeps bitterly; the elegaic verse where (the relatives and friends of the dead) others living, feel great sorrow at the death of them and give vent to their feelings; the state of being widower; the widowhood after losing her lover; 'Palainilai', where the good wife, deter -mining to plunge into the fire of cremation with her dead husband, puts forth her arguments in favour of her action; the supreme act of the mother who offers to die at the news of the glorious death of the son in the battle-field and the ode to the crematorium where the nature of the wide world is clearly illustrated by the fact of many people being passed away and of its (crematiorium) existence always-these being ten-this 'Kanji' has two great division.

பி. இ. நூ.

பு. வெ. மா. 4

காஞ்சி காஞ்சி யதிர்வே தழிஞ்சி
பெரும்படை வழக்கொடு பெருங்காஞ் சிய்யே
...........................................
தலையொடு முடிதல் மறப்பெயர்க் காஞ்சி
மாற்றரும் பேய்நிலை பேய்க்காஞ் சிய்யே
தொட்ட காஞ்சி தொடாக்காஞ் சிய்யே
மன்னைக் காஞ்சி கட்காஞ் சிய்யே
ஆஞ்சிக் காஞ்சி மகட்பாற் காஞ்சி
...........................................
எண்ணிய காஞ்சித் துறையென மொழிப

வீர-102

நிலையாமை வாழ்த்து மயக்கம் முதுமை நிலையினொடும்
தொலையா மகிழ்ச்சி பெருமைதீப் பாய்தல் சுரத்திடைத்தன்
தலையார் கணவன் தனையிழத் தல்தனி யேயிரங்கல்
தலையார் மனைவி பேய்சூளுறல் என்றிவை காஞ்சி யென்னே.

இல. வி. புற. 17

முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன்
தலையொடு முடிந்த நிலை............
பண்புற வருஉம் பகுதி நோக்கிப்
புண்கிழித்து முடியும் அத்துறைக் கூற்றும்
ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோன்
பேஎய்ஓம் படுத்த பேஎய் ஓம் புதலும்
ஆய களத்தில் அவிந்தவாள் உழவர்க்குப்
பேஎய் அஞ்சிய பேஎய்க் காஞ்சியும்
வியல்மனை விடலை விழுப்புண் காப்பவும்
துயல்முலைப் பேஎய்மகள் தொட்ட காஞ்சியும்
இன்னகை மனைவி பேஎய் புண்ணோன்
துன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும்
இன்னன்என் றிரங்கும் மன்னைக் காஞ்சியும்
மன்னன்மற வர்க்குமட் டீந்தகட் காஞ்சியும்
காதல் கணவனொடு கதழ்எரி மூழ்கும்
மாதர்மலி வுரைத்த ஆஞ்சிக் காஞ்சியும்
மன்னுயிர் நீத்த வேலின் மனையோள்

இன்னுயிர் நீத்த அத்துறைப் பகுதியும்
கறுத்தவாள் உழவன் இக்கன்னியைத் தருகென
மறுத்துரை யாடிய மகட்பாற் காஞ்சியும்
மன்னவன் இகல்மறம் மடங்கல்வேல் இறைவன்
முன்னிருந் தருமுனை முதிர்ந்தமுன் இருப்பும்
.........காஞ்சித் திணையது விரியே.

இல.வி.புற-21

நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்த
தனிமகள் புலம்பிய முதுபாலை யானும்
..........................................
மனைவியை யிழந்து மனைவயின் இருந்தோன்
தனிநிலை யுரைத்த தபுதார நிலையும்
இவர்பூண் மொய்ம்பன் இறந்தபின் மனையோள்
தவமேற் கொண்ட தாபத நிலையும்
பல்லிதழ் மழைக்கண் பாலகன் மாய்ந்தென
புல்லிய பெருங்கிளைப் பூசல் மயக்கமும்
..........................................
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதா னந்தமும்
..........................................
கொடித்தேர் மன்னவன் மாய்ந்தெனக் குழைவுற்று
அடுத்தோன் புலம்பிய கையறுநிலை......
..........................................
மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
............துன்னிய ஒழிபு.

## இளம்பூரணர்

77. மாற்றருங் கூற்றஞ்......உடைத்தே.

இது. காஞ்சித்துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) 'மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமை முதலாகத் 'தலையொடு முடிந்த நிலையொடு' கூடப் பத்தாகும் என்பர் சிலர். 'பூசல் மயக்கம்' முதலாகக் 'காடு வாழ்த்து' உட்பட வருவனவற்றொடும் இருவகைப்பட்ட துறையை உடைத்து.

[எனவே, முற்கூறிய பத்தும் ஒருவகை யென்பதும் பிற்கூறிய பத்தும் மற்றொரு வகையென்பதும் பெறப்பட்டன]

மாற்று அருங் கூற்றம் சாற்றிய பெருமையும்—மாற்றுதற்கு அரிய கூற்றம் வருமெனச் சொல்லப்பட்ட பெருங் காஞ்சியும்.

உதாரணம்

"இருங்கடல் உடுத்தஇப் பெருங்கண் மாநிலம்
உடைஇலை நடுவணது இடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி அத்தை வீயாது
உடம்பொடு நின்ற உயிரும் இல்லை
மடங்கல் உண்மை மாயமோ அன்றே
கள்ளி ஏய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்காது
இழிபிறப்பி னோன் ஈயப்பெற்று
நிலங்கலன் ஆக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே."[1]

(புறம்-363)

---

1. மாநிலம் தாமே யாண்ட காவலர், சுடுகாடே தம் இடமாகச் சென்று தம் நாட்டைப் பிறர்கொள மாய்ந்தவர் கடற்கரை மணலினும் பலர். அதனால் யான் சொல்வதைக் கேள் உடம்பொடு நிலைத்த உயிர் இல்லை. கூற்றம் உண்டு என்பது மாயமில்லை புறங்காட்டில் உப்பிலாத புழுக்கலை இழிபிறப்பினோன் ஈயப் பெற்று நிலமே உண்கலனாகப் பலி மிசையும் கொடிய நாள் வருவதற்கு முன்னர் இவ்வுலக முழுதையும் துறந்து வீடுபேற்றுக்கு நீ நினைந்த தொழில்களைச் செய்வாயாக.

கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்-அறிவான் மிக்கோர் அல்லாதார்க்குச் சொன்ன முதுகாஞ்சியும்.

உதாரணம்

''பல்சான் றீரே பல்சான் றீரே
கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்
பயன்இல் மூப்பின் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுத்திறல் ஒருவன்
பிணிக்குங் காலை இரங்குவிர் மாதோ
நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்பது அன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே,''[2]

(புறம்-195)

பண்புஉற வருஉம் பகுதிநோக்கி புண்கிழித்து முடியும் மறனும்—இயல்புற வரும் பகுதிநோக்கிப் புண்கிழித்து முடியும் மறக்காஞ்சியும்.

உதாரணம்

''நகையமர் ஆயம் நடுங்க நடுங்கான்
தொகையமர் ஒட்டிய துப்பின்—பகைவர்முன்
நுங்கிச் சினவுதல் நோனான் நுதிவேலான்
பொங்கிப் பரிந்திட்டான் புண்.''[3]

(வெண்பா-காஞ்சி-15)

ஏமச்சுற்றம் இன்றிப் புண்ணோன் பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்—ஓம்பும் சுற்றம் இன்மையாற் புண்ணோனைப் பேய் ஓம்பிய பேய்ப் பக்கமும்.

---

2. பல்சான்றீரே! கணிச்சிப் படைக்கூற்றுவன் பிடிக்கும் போது வருந்துவீர். நீவிர் நல்லது செய்யமாட்டீர்; அல்லதையாவது செய்தலைத் தவிர்மின் அதுவே யாவரும் விரும்புவது. அன்றியும் நன்னெறிப்படுத்துவ தும் ஆகும்—நரிவெரூஉத்தலையார் பாட்டு.

3. விளக்கமுடைய தன் வீரர் கூட்டம் நடுங்கவும் தான் நடுங்காதவனாய், அமரில் வீரரை ஓட்டிய பகைவர் தன் முன் இருந்து தன்னைச் சினவுதலைப் பொறானாய் வேலின் நுனியால் தன் புண்ணைக் கிழித்திட்டான்.

**உதாரணம்**

''ஆயும் அடுதிறலாற் கன்பிலோர் இல்போலும்
தோயுங் கதழ்குருதி தோள்புடைப்பப்—பேயும்
களம்புகலச் சீறிக் கதிர்வேல்வாய் வீழ்ந்தான்
உளம்புகல ஓம்பல் உறும்.''[4]

(வெண்பா-காஞ்சி-16)

**இன்னன்** என்று இரங்கிய மன்னையும்-இத்தன்மையான் என உலகத்தார் இரங்கிய மன்னைக் காஞ்சியும்.

**உதாரணம்**

''சிறியகள் பெறினே எமக்கீயும் மன்னே
பெரியகள் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணும் மன்னே
சிறுசோற் றானும் நனிபல கலத்தல் மன்னே
பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தல் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயும் மன்னே
அம்பொடு வேல்நுழை வழியெல்லாம் தானிற்கும் மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்
புலவுநாறும் என்தலை தைவரும் மன்னே
அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பார்வை சோர
அஞ்சொல்நுண் தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்றுவீழ்ந் தன்றவன் அருநிறத்து இயங்கிய வேலே
ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப் பாடுநரு மில்லைப் பாடுநர்க்கொன் றீகுநரு
மில்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்

---

4. களவீரர் புகழ்ந்து கூறுமாறு சீறிப்பொருது பகைவர் வேல்வாய் வீழ்ந்த வீரனின் குருதியானது தோளில் புடைத்துப்பாவ அதுகண்ட பேயானது அவன் புண்ணைக் காக்கும். இதனால் அவ்வீரனுக்கு அன்பு இல்லாதவர் ஒருவரும் இல்லைபோலும்.

சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்று
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே.''[5]

(புறம்-235)

இன்னது பிழைப்பின் இது ஆகியன் என துன் அருஞ்சிறப்பின் வஞ்சினமும்—இன்னவாறு செய்தலைப் பிழைத்தேனாயின் இன்னேன் ஆகக் கடவேன் எனக் கூறிய துன்னற்கு அரிய சிறப்பினையுடைய வஞ்சினக் காஞ்சியும், [துணிவு பற்றிய 'ஆகியன்'[6] என இறந்த காலத்தாற் கூறினர்.]

**உதாரணம்**

''நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளையன் இவனென உளையக் கூறிப்
படுமணி இரட்டும் பாஅடிப் பணைத்தாள்
நெடுநல் யானையுந் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாமென்று
உறுதுப் பஞ்சாது உடல்சினஞ் செருக்கிச்
சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு

---

5. அதியமான் அஞ்சியின் குணங்களை ஔவையார் சொல்லியிரங்கியது. கொஞ்சம் கள் கிடைத்தால் எமக்கே கொடுப்பான். அதிகம் கள் கிடைத்தால் யாம் அவனைப் பாட எம்முடன் தான் மகிழ்ந்து உண்ணும். சிறுசோறாயினும் பெருஞ்சோறாயினும் கலந்துண்ணுவான். எலும்பும் தசையும் எமக்கீயும். அம்பும் வேலும் நுழையுமிடத்துத் தான் செல்லும். நரந்தமணம் கமழும் தன்கையால் புலவுநாறும் என் தலை தடவும். அத்தகையோன் மார்பில் பகைவர் எறிந்த வேல், பாணர் கையிடத்துள்ள மண்டைக் கலத்தைத் துளை செய்து தன்னாற் புரக்கப் படுவோர் கண்பார்வை சோரப் புலவர் நாவில் சென்று வீழ்ந்தது. யாவர்க்கும் பற்றாக நின்ற எந்தை எங்குளானோ? இனிப் பாடுநரும் இல்லை; பாடுவார்க்கு ஈவாரும் இல்லை. பிறர்க்கு ஈயாது அழியும் உயிர்கள் மிகப் பலவாம்.

6. ஆகியர் என்பது நச். பாடம். ஆகுக என வியங்கோளாகப் பொருள் கொள்க அதற்கு.

ஒருங்ககப் படேஎ னாயின் பொருந்திய
என்நிழல் வாழ்நர் செல்நிழற் காணாது
கொடியன்எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலேன் ஆகுக
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மையான் உறவே.''[7]

(புறம்-72)

இன்நகை மனைவி பேஎய் புண்ணோன் துன்னுதல் கடிந்த தொடாக் காஞ்சியும்—இனிய நகையார்ந்த மனைவி பேய் புண்ணோனைக் கிட்டுதலைக் காத்த தொடாக் காஞ்சியும்.

**உதாரணம்**

''தீங்கனி இரவமொடு வேம்புமனைச் செரீஇ
வாங்குமருப்பு யாழொடு பல்லியங் கறங்கக்
கைபயப் பெயர்த்து மையிழுது இழுகி
ஐயவி சிதறி ஆம்பல் ஊதி
இசைமணி எறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பின் கடிநறை புகைஇக்
காக்க வம்மோ காதலம் தோழி

---

7. சிறு சொல் சொல்லிய சினங்கெழு வேந்தரைத் தாக்கி அகப்படுத்தேனாயின், என் குடை நிழல்வாழ்வோர் செல்லும் இடம் காணாமல் எம் அரசன் கொடியன் என்று கண்ணீர் மல்கக் குடிமக்கள் பழி தூற்றும் கொடுங் கோலனாகுக யான். மாங்குடி மருதனார் என்னும் புலவரைப் புலவர் குழுத்தலைவனாகக் கொண்ட புலவர் பலரும் என் நாட்டைப் பாடா தொழிவாராக. யான் இரப்போர்க்கு ஈயமாட்டாத வறுமை யெய்து வேனாக. —தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பாடியது.

வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகை புண்ணே.''[8]

(புறம்-281)

நீத்த கணவன் தீர்த்த வேலின் பெயர்த்த மனைவி ஆஞ்சியும்—தன்னை நீத்த கணவன் விடுத்த வேலினானே மனைவி தன் உயிரையும் பெயர்த்த ஆஞ்சியும்.

உதாரணம்

''கௌவைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோன்—
அவ்வேலே
அம்பிற் பிறழுந் தடங்கண் அவன்காதற்
கொம்பிற்கும் ஆயிற்றே கூற்று.''[9]

(வெண்பா-காஞ்சி-23)

நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி மகட்பாடு அஞ்சிய மகட்பாலும்—ஒத்து மாறுபட்டுத் தன் மேல் வந்த வேந்தனொடு தன் தொல்குலத்து மகட்கொடை அஞ்சிய மகட்பாற் காஞ்சியும்.

உதாரணம்

''நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையும்
நெடிய அல்லது பணிந்துமொழி யலனே

---

8. தோழி! நெடுந்தகை புண்ணை இரவமலரொடு வேப்பிலையை மனையில் செருகி, மெதுவாகக் கை பெயர்த்து நெய் தடவி வெண்சிறுகடுகு சிதறிப் பல் இயம் கறங்க ஆம்பற் பண் ஊதி மனைப் புறம் எங்கும் பேய்ப் பகையாகப் புகை பரப்பிக் காஞ்சித்துறை பாடிப் பேய் தீண்டாதபடிக் காப்போம் வருக-அரிசில்கிழார் பாடியது.

9. விறல் வெய்யோன் வேல்வாய் வீழ்ந்தான்; அவ்வேலே அவன் கொம்பிற்கும் (மனைவிக்கும்) கூற்று ஆயிற்று (வேலால் உயிர்நீத்தாள்). அதனால் கற்புடைமை என்பது கடிதுதான்.

இஃதிவர் படிவம் ஆயின் வைஎயிற்று
அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை
மரம்படு சிறுதீப் போல
அணங்கா யினள்தான் பிறந்த ஊர்க்கே.''[10]

(புறம்-349)

கொண்டோன் தலையொடு முலையும் முகனும் சேர்த்தி முடிந்த நிலையொடு தொகைஇ ஈர் ஐந்து ஆகும் என்ப-தன்னைக் கொண்டான் தலையொடு தனது முலைகளையும் முகத்தையும் சேர்த்தி இறந்த நிலையும் கூடிப் பத்தாகும் என்பர் சிலர்.

உதாரணம்

''கொலையானாக் கூற்றேற கொடிதே கொழுநன்
தலையானான் தையலாள் கண்டே—முலையான்
முயங்கினாள் வாள்முகமுஞ் சேர்த்தினாள் ஆங்கே
உயங்கினாள் ஓங்கிற்று உயிர்.''[11]

(வெண்பா. காஞ்சி-13)

பேர் இசை மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம் மாய்ந்த பூசல் மயக்கமும்—பெரிய இசையையுடையனாய் மாய்ந்தவனைச் சுற்றிய சுற்றத்தார் அவன் மாய்ந்தமைக்கு அழுத மயக்கமும். [மகன்—ஆண்மகன்]

உதாரணம்

''மீன்உண் கொக்கின் தூவி அன்ன
வால்நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்

---

10. வேந்து மறவனிடம் மகள் வேண்டிக் கடுஞ்சொற்கூறும்; தந்தையாகிய மறவனும் நெடிய வஞ்சினம் கூறிப் பணிந்த மொழி மொழியவில்லை. எனவே அரிவையானவள் (மறவன் மகள்) ஊர்க்கு மரத்தில் பட்ட சிறு தீ அதற்கு அழிவு செய்வதுபோல அழிவு செய்பவளானாள் (போர்மூளும் என்றபடி).

11. தையலாள் கணவனின் தலையைக் கண்டு அமையாதவளாய்ப் பின்னும் முலையோடு முயங்கினாள்; முகத்தோடு சேர்த்தாள். அப்போதே மயங்கினாள்; உயிர் போயிற்று, கூற்றம் கொடிதே.

களிறெறிந்து பட்டனன் என்னும் உவகை
ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்
நோன்கழை துயல்வரும் வெதிரத்து
வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே.''[12]

(புறம்-277)

தாம் எய்திய தாங்கு அரும் பையுளும்—சிறைப்பட்டார் தாம் உற்ற பொறுத்தற்கு அரிய துன்பத்தினைக் கூறுங் கூற்றும்

**உதாரணம்**

''குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்
ஆளன்று என்று வாளில் தப்பார்
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாம்இரந்து உண்ணும் அளவை
ஈன்ம ரோஇவ் வுலகத் தானே.''[13]

(புறம்-74)

---

12. மீனுண்ணும் கொக்கின் சிறகு போலும் வெள்ளிய நரைத்த கூந்தலுடைய முதியவளின் சிறுவன் களிறு எறிந்து பட்டான் என்ற சொற்கேட்ட மாத்திரத்தில் அவள் உவகையானது ஈன்ற காலத்திலும் பெரிதா யிற்று. அவள் உகுத்த மகிழ்ச்சிக் கண்ணீர் பல்கிளையாக வுள்ள மூங்கிலில் பெய்த மழைத் துளிகளினும் மிக்கன.

13. குழந்தையிறந்தாலும் உருவாக இன்றித் தசைப்பிண்டம் பிறந்தாலும் இரண்டையும் ஆண்மகன் இல்லை என்று எண்ணாமல் அவற்றையும் ஆள் என்றெண்ணி வீரர்க் குரிய நிலையில் வாளால் எறிதலைத் தவறமாட்டார் மறக்குடிப் பிறந்தார். அப்படியிருக்க நாயைச் சங்கிலி யால் கட்டி இழுத்து வருதல் போல் என்னை விலங்கிட்டு இச்சிறையில் இருத்திய உறவல்லாப் பகைவர் தரும் தண்ணீரை இரந்து கேட்டு உண்ணுமளவில் என்னைப் பெறுவரோ இவ்வுலகில் என் பெற்றோர்? ஆதலின் காவலன் தரும் தண்ணீரை யான் அருந்தேன்—கணைக் கால் இரும்பொறை கூற்று.

கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கி செல்வோர் செப்பிய மூதானந்தமும்—கணவனொடு இறந்த செலவை நோக்கிச் செல்வோர்* செப்பிய மூதானந்தமும்.

உதாரணம்

''ஒருயி ராக உணர்க உடன்கலந்தார்க்கு
ஈருயிர் என்பர் இடைதெரியார்—போரில்
விடன்ஏந்தும் வேலோற்கும் வெள்வளையி னாட்கும்
உடனே உலந்தது உயிர்.''[14]

(வெண்பா-சிறப்பிற் பொதுவியல்-9)

நனி மிகு சுரத்திடை கணவனை இழந்து தனிமகள் புலம்பிய முதுபாலையும்—மிகுதி மிக்க சுரத்திடைக் கணவனை யிழந்து தனியளாய்த் தலைமகள் வருந்திய முதுபாலையும்.

உதாரணம்

''ஐயோ எனின்யான் புலியஞ் சுவலே
அணைத்தனன் கொளினே அகன்மார்பு எடுக்கவல்லேன்
என்போற் பெருவிதிர்ப்பு உறுக நின்னை
இன்னா செய்த அறனில் கூற்றே
நிரைவளை முன்கை பற்றி
வரைநிழற் சேர்க நடத்திசின் சிறிதே.''[15]

(புறம்-255)

கழிந்தோர் தேத்து கழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்—செத்தோர் மாட்டுச் சாவாதார் வருத்த முற்றுப் புலம்பிய கையறு நிலையும்.

---

* செல்வோர்—வழிச் செல்வோர்.

14. போரில் வேலோற்கும் அவன் மனைவிக்கும் உயிர் உடன் போயின. ஆதலின் இருவரிடையுள்ள நட்பறியா தவர் அவர் இருவரையும் இரண்டுயிர் என்பர், ஒருயிராகவே எண்ணுக.

15. குற்றுயிராய்க் கிடக்கும் தன் கணவனை நோக்கி மனைவியானவள், ''நீ கிடக்கும் நிலை கண்டு ஐயோ எனக் கதறின் அது கேட்டுப் புலி வருமே என அஞ்சு கின்றேன். நின்னைத் தூக்கிச் செல்லலாம் எனின் தூக்க ஆற்றல் இல்லேன். அதனால் என் முன்கை பற்றி மெல்ல நடக்க; மலைப் பக்க நிழலில் செல்வோம்'' என்றாள்.

உதாரணம்

''செற்றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்
உற்றன் றாயினும் உய்வின்று மாதோ
பாடுநர் போலக் கைதொழுது ஏத்தி
இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்
மண்டமர்க் கடக்குந் தானைத்
திண்தேர் வளவன் கொண்ட கூற்றே.''[16]

(புறம்-226)

காதலி இழந்த தபுதாரநிலையும்—காதலியை இழந்த கணவனது தபுதாரநிலையும்.*

உதாரணம்

''யாங்குப்பெரி தாயினும் நோயள வெனைத்தே
உயிர்செகுக் கல்லா மதுகைத் தன்மையின்
கள்ளி போகிய களரியம் பறந்தலை
வெள்ளிடைப் பொத்திய விளைவிறகு ஈமத்து
ஒள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனள் மடந்தை
இன்னும் வாழ்வல் என்னிதன் பண்பே.''[17]

(புறம்-245)

காதலன் இழந்த தாபத நிலையும் — காதலன் இழந்து நிற்கும் தாபத நிலையும்.°

உதாரணம்

''அளிய தாமே சிறுவெள் ஆம்பல்
இளையம் ஆகத் தழையா யினவே, இனியே

---

16. வளவன் உயிர் கொண்ட கூற்றானது. கொல்வதுபோல வந்தோ சினந்து வந்தோ, நெருக்கியோ கொல்ல முற்பட்டிருப்பின் பிழைத்திராது. புகழ்ந்து பாடும் பரிசிலர் போலக் கைதொழுது ஏத்திப்பாடி உயிரை இரந்து பெற்றிருத்தல் வேண்டும்.

* தாரம் தபுநிலை தபுதாரநிலை. மனைவியை யிழந்த நிலை.

° தாபத நிலை — தவநிலை. கைம்மை.

பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுது மறுத்து
இன்னா வைகல் உண்ணும்
அல்லிப் படூஉம் புல்லா யினவே.''[18]

(புறம்-248)

நல்லோள் கணவனோடு நளி அழல் புகீஇ இடையிட்ட மாலை சொல் நிலையும் — கணவனொடு கிழத்தி பெரிய அழற் புகுவழி இடையிட்ட மாலைக் காலத்துக் கூறும் கூற்றும்.

**உதாரணம்**

''பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லாது ஒழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது
அடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெள் சாந்தொடு புளிப்பெய்து அட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரல்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்
நுமக்கரிது ஆகுக தில்ல எமக்கெம்
பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்பற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயும்ஓர் அற்றே.''[19]

(புறம்-246)

18. ஆம்பல் தழை யிரங்கத்தக்கது என் எனின் யாங்கள் இளையராக இருந்தபோது உடுத்தும் தழையாகச் சிறந்தது. இப்போது இவள் கணவன் மாய்ந்தனனாக வருத்தத்துடன் வேளை தவிர்த்து உண்ணும் நாள் தோறும் இரவில் படும் புல்லிய இலையாயின.

19. நீ உன்கணவனொடு செல்க என்று கூறாமல் உடன் தீப் பாயாதே எனத் தடுக்கும் பல் சான்றீரே, தலையில் நெய் பூசாது கைபிழி பிண்டத்தை வேளைக் கீரையொடு உணவாக உண்டு தரையில் பாயின்றிப் படுக்கும்கைம்மை நோற்கும் பெண்டிருள் சேர்வேம் அல்லேம், சுடுகாட்டில் மூட்டிய நெருப்பு உமக்கு அரிதாகலாம். எமக்குத் தாமரைப் பொய்கையும் இந்நெருப்பும் ஒன்றே ஆதலின் என்னை விலக்காதீர் — இவ்வாறு பூதப்பாண்டியன் இறந்தானாக அவன் பெருந்தேவி தீப்பாய்வாள் கூறியது.

அரும்பெருஞ் சிறப்பின் புதல்வன் பயந்த தாய் தப வருஉம் தலைப் பெயல் நிலையும் — அரும் பெருஞ் சிறப்பினையுடைய மகற்பெற்ற தாய் சாதற்கண் அவனைத் தலைப்பெயல் நிலையும்- [தலைப்பெயல் — சேர்தல்][20]

உதாரணம்

''இடம்படு ஞாலத்து இயல்போ கொடிதே
தடம் பெருங்கண் பாலகன் என்னுங் — கடன் கழித்து
முள்எயிற்றுப் பேதையாள் புக்காள் முரண்அவியா
வள்ளெயிற்றுக் கூற்றத்தின் வாய்.''[21]

(வெண்பா-சிறப்பிற்பொதுவியல் —5)

மலர்தலை உலகத்து மரபு நன்கு அறிய பலர் செல செல்லா காடு வாழ்த்தொடும் — இடம் அகன்ற உலகத்தின் மரபு [22] நன்கு விளங்கப் பலரும் மாயத் தான் மாயாத புறங்காடு வாழ்த்துதலும்.

உதாரணம்

''களரி பரந்து கள்ளி போகிப்
பகலுங் கூவுங் கூகையொடு பேழ்வாய்
ஈம விளக்கின் பேஎய் மகளிரொடு
அஞ்சுவந் தன்றிம் மஞ்சுபடு முதுகாடு
நெஞ்சமர் காதலர் அழுத கண்ணீர்
என்புபடு சுடலை வெண்ணீறு அவிப்ப

---

20 மகனைப் பெற்ற தாய் பெற்ற அப்பொழுதே மகனுடன் தானும் சிறந்த நிலையைக் கூறுவது தலைப் பெயல் நிலை. காட்டிய உதாரணம் தாய் மட்டும் இறந்ததற் குரியது. எனினும் அதற்குப் பின்வருமாறு பொருள் கொள்க.

21. ''பாலகனைப் பெறுதலாகிய கடனைக் கழித்து அப் பொழுதே பேதையாள் கூற்றத்தின்வாய் அவனுடன் புக்காள், ஆதலின் ஞாலத்து இயல்பு கொடியது.''

மாய் பெருஞ்சிறப்பிற் புதல்வன் என்பது நச்-பாடம். சிறப்புடையது.

22. மரபு — பிறந்தோர் இறத்தல்.

எல்லார் புறனுந் தான்கண்டு உலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே.''[23]

(புறம்-356)

நிறை அருஞ் சிறப்பின் இரண்டு துறை உடைத்து — ஆக திறையும் அருஞ்சிறப்பினையுடைய இரண்டு துறைகளை யுடைத்து.[24]

[இச்சூத்திரத்தில் வந்த அத்தும் ஆனும் முறையே சாரியை யும் இடைச்சொல்லுமாம்.]

## நச்சினார்க்கினியர்

79. மாற்றருங்...........டுடைத்தே

இது முற்கூறிய காஞ்சித்திணை வீடேதுவாக வன்றி வாளாது நிலையின்மை தோன்றக் கூறும் பகுதி கூறுகின்றது. இதுவும் வாகையைத் தொகுத்தோதிய பொதுச் சூத்திரம் போலத் துறையொடும் படாது நிலையின்மைப் பொருளை வகுத்தோதிய சூத்திரமென்றுணர்க.

இதன் பொருள் :- மாற்றரும் கூற்றம் சாற்றிய பெருமை யும் — பிறராற் றடுத்தற்கரிய கூற்றம் வருமெனச் சான்றோர் சாற்றிய பெருங்காஞ்சியானும்:

கூற்றாவது, வாழ்நாள் இடையறாதுசெல்லுங் காலத்தினைப்

---

23. களர்பரந்து கள்ளிச் செடி மிகுந்து பகலிலும் கூவும் கூகையொடு பிணம் எரியும் எரியே விளக்காகக் கொண்டு பேய்மகளிரோடு பிளந்தவாயுடன் கூடிய இச்சுடுகாடு அஞ்சத்தக்கதாம். காதலர் அழுத கண்ணீர் எலும்பைப் பற்றிய சுடலையாகிய நீற்றை அவிப்ப எல்லாரையும் புறங்கண்டு தன்னைப் புறங்காண்பாரைத் தான் காணாத தாயிருந்தது.

24. இரண்டுவகை - ஈரைந்தாகும் என முற்கூறிய பத்தும் பிற்கூறிய பத்தும் என இருவகை. இதற்குப் பாரதியார் விளக்கம் சிறந்தது.

பொருள்வகையாற்[1] கூறுபடுத்துங் கடவுள்; அதனைத் தான் பேரூர்க் கூற்றம் போலக் கொள்க.[2] கூற்றத்திற்குக் கால மென்பது வேறன்மையிற் 'காலம் உலகம்' (தொல் — சொல்— கிளவி — 58) என முன்னே கூறினார்.[3]

(உ-ம்) ''பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
நல்லது செய்த லாற்றீ ராயினு
மல்லது செய்த லோம்புமி னதுதா
னெல்லாரு முவப்ப தன்றியு
நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே.''

(புறம்-195)

இது வீடேதுவாக வன்றி வீடுபேற்று நெறிக்கட் செல்லும் நெறியேதுவாகக் கூறியது.

'இருங்கடலுடுத்த' என்னும் (369) புறப்பாட்டும் அது.

கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்-இளமைத் தன்மை கழிந்து அறிவுமிக்கோர் இளமை கழியாத அறிவின் மாக்கட்குக் காட்டிய முதுகாஞ்சியானும்:

முதுமை மூப்பாதலான் அது காட்சிப் பொருளாக இளமை நிலையாமை கூறிற்றாம்.

(உ-ம்) ''இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்யுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்

---

1. பொருள் வகை-உயிர் உடம்பு எனும் பொருள்வகை கூறு படுத்தல் — பிரித்தல்.

2. பேரூர்க் கூற்றம் — ஒருநாட்டில் பேரூர் என்னும் கூறு (பிரிவு) பேரூர்க்கூற்றம் ஆனதுபோல வேறு படுத்தும் கடவுள் கூற்றம் ஆயிற்று. வேறு படுத்துவதும் வேறு படுக்கப் படுவதும் கூற்றம் ஆம்.

3. காலம் எனினும் கூற்றம் எனினும் ஒக்கும். ஆதலினால் தான் 'காலம் உலகம்' என்னும் சூத்திரத்துக் கூற்றைக் காலம் என்றார்.

தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமி லாயமொ
டுயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்த
நீர்நணிப் படுகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற்கொண்ட கல்லா விளமை
யளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைத்த சில்சொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே.[4]

(புறம்-243)

இது வீடுபெறுவதற்கு வழி கூறியது.

பண்புற வருஉம் பகுதி நோக்கிப் புண்கிழித்து முடியும் மறத்தினானும்—நன்றாகிய குணம் உறுநிலையாகப் பெறுகின்ற பகுதியாராய்ந்து பெறுதற்குப் பட்ட விழுப்புண் தீர்ந்து வாழும் வாழ்க்கை நிலையின்மையின் அதனை வேண்டாது புண்ணைக் கிழித்து இறக்கும் மறக்காஞ்சியானும்:

இஃது யாக்கை நிலையின்மையை நோக்கிப் புகழ்பெறுதல்

---

4. பூண்கட்டிய உச்சியுடைய தண்டு ஊன்றி நடுக்கம் கொண்டு இருமல் சேர்ந்து சிலவான சொற்சொல்லி வரும் பெரிய முதுமையாளராகிய யாம் மணலில் தம் பாவைக்கு மலர் கொய்தும் குளத்தில் நீராடும் மகளிரொடு கைகோர்த்துத் தழுவிக் கூத்தாடு மிடத்துக் கூத்தாடித் தங்குமிடத்துத் தங்கி, அம்மகளிர் கூட்டத்தோடு நீர்த்துறையிற் றாழ்ந்துள்ள மருதமரக்கிளைமீது ஏறிக் கரையில் உள்ளார் மருளும் படியும் நீர் பிதிரும்படியும் குளத்தில் துடும் என்று ஒலியுண்டாகப் பாய்ந்து குளித்து நீர்க்கீழ் மணலை அள்ளிக் கொண்டு வந்த கல்லா இளமை என்பது எங்குளது? மிக இரங்கத்தக்கது. அது இப்போது நினைத்தாலும் இரக்கம் ஆகின்றது.

குறித்தது. இதனை வாகைத்திணைப் பின்னர் வைத்தார், இக் காஞ்சியும் வாகையொடு மயங்கியுங் காஞ்சியாதல் பற்றி.[1]

(உ-ம்) ''பொருது வடுப்பட்ட யாக்கை நாணிக்
கொன்று முகந்தேய்ந்த வெஃகந் தாங்கிச்
சென்று களம்புக்க தானை தன்னொடு
முன்மலைந்து மடிந்த வோடா விடலை
நடுக னெடுநிலை நோக்கி யாங்குத்தன்
புண்வாய் கிழித்தனன் புகழோ னந்நிலைச்
சென்றுழிச் செல்க மாதோ வெண்குடை
யரசுமலைந்து தாங்கிய களிறுமடி பறந்தலை
முரண்கெழு தெவ்வர் காண
விவன்போ லிந்நிலை பெறுகயா னெனவே.''[2]

இது போர் முடிந்தபின் களம்புக்கு நடுகல் ஆயினானைக் கண்டு உடம்பினது நிலையின்மையினையும் பண்புறவருதலையும்[3] நோக்கி இறந்தமை கூறலிற் காஞ்சியாயிற்று.

ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோற் பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்—கங்குல் யாமத்துக் காத்தற்குரிய சுற்றக் குழாமின்மையின் அருகுவந்து புண்பட்டோனைப் பேயானே காத்த பேய்க் காஞ்சியானும்:

பேய் காத்ததென்றலின் ஏமம் இரவில் யாமமாயிற்று.[4] ஏமம்-காப்புமாம். ஓம்புதலாவது:- அவனுயிர் போந்துணையும் ஓரியும் நரியுங் கிடந்தவன் தசையைக் கோடலஞ்சிப் பாதுகாத்தலாம்.

---

1. விழுப்புண் ஆறி வாழினும் வாழ்க்கை நிலையின்மையின் புண்ணைக் கிழித்து இறத்தல் வெற்றியாகும் ஆதலின் இத்துறை வாகையையும் கொண்டிருத்தலின் வாகையும் காஞ்சியும் கலந்ததாகும்.

2. புகழ்வீரன் போரிற் பொருது புண்பட்ட தன் உடம்பைக் கண்டு நாணி, வேலைத் தாங்கிச் சென்று போர்க்களத்தில் முன்னமே ஓடாது வீரம் காட்டி விழுந்த வீரனது நடுகல்லைப் பார்த்துத் தன் புண்ணைக் கிழித்து இந்நடுகல் வீரனைப் போல் யானும் அந்நிலையைப் பெறுவேனாக என்று வீழ்ந்தான்.

3. பண்புற வருதலாவது நடுகல் ஆகிப் புகழ் பெறுதல்.

4. ஏமம்-காவல். இங்கு அப்பொருளில் இன்றிப் பேய் காப்பது இரவு யாமம் ஆதலின் யாமம் என்னும் பொருளில் வந்தது.

இது சுற்றத்தாரின்மை கூறலிற் செல்வநிலையாமை யாயிற்று.[5] பக்கமென்றதனாற் பெண்டிர் போல்வார் காத்தலும் பேயோம்பாத பக்கமுங் கொள்க.

(உ-ம்) ''புண்ணனந்த ருற்றானைப் போற்றுந ரின்மையிற்
கண்ணனந்த ரில்லாப்பேய் காத்தனவே—யுண்ணு
முளையோரி யுட்க வுணர்வொடுசா யாத
விளையோன் கிடந்த விடத்து.''[6]

ஏனைய[7] வந்துழிக் காண்க.'

இன்னன் என்று இரங்கிய மன்னையானும்—ஒருவன் இறந்துழி அவன் இத்தன்மையோனென்று ஏனையோர் இரங்கிய கழிவு பொருட் கண் வந்த மன்னைக் காஞ்சியானும்:

இது பலவற்றின் நிலையாமை கூறி இரங்குதலின் மன்னைக் காஞ்சியென வேறு பெயர் கொடுத்தார். இது பெரும்பான்மை மன் என்னும் இடைச் சொற் பற்றியே வருமென்றற்கு மன் கூறினார். இது மன்னையெனத் திரிந்து காஞ்சியென்பத னோடடுத்து நின்றது. இஃது உடம்பொடு[8] புணர்த்தல்.

''சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற்றானு நனிபல கலத்தன் மன்னே

---

5. சுற்றம் செல்வத்துள் அடங்குதலின் இவ்வாறு கூறினார்.

6. தன் தசையை உண்ணக்கூடிய பிடரியுடைய ஓரியானது உயிர்போகாதிருத்தல் கண்டு அஞ்சுமாறு உணர்வுடன் இறவாது வீரன் கிடந்த இடத்தில் புண்ணால் துன்புற்ற அவனைக் காக்கும் சுற்றம் இல்லாமையால் கண்துயிலு தல் இல்லாத பேய்கள் காத்தன.

7. பெண்டிர் காத்தலும் பேய்காவாமையும்.

8. மன்னானும் எனற்பாலது மன்னையானும் எனத் திரிந்து நின்றது. மன்னையானும் என்றிருந்தாலும் காஞ்சி எனும் சொல்லடுத்து மன்னைக் காஞ்சியானும் என்னல் வேண்டும். இரங்கற் செய்திகளில் 'மன்' எனும் இடைச் சொல் பெய்யப்பட்டு வருதலின் மன்னைக் காஞ்சி எனப் பட்டது.

பெருஞ்சோற்றானு நனிபல கலத்தன் மன்னே
யென்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே
யம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே''

என இப் (235) புறப்பாட்டு மன் அடுத்து அப்பொருடந்தது.

''பாடுநர்க் கீத்த பல்புக ழன்னே
யாடுநர்க் கீத்த பேரன் பினனே
யறவோர் புகழ்ந்த வாய்கோ லன்னே
திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே
மகளிர் சாயன் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி யுயர்ந்தோர் புக்கி
லனைய னென்னா தத்தக் கோனை
நினையாக் கூற்ற மின்னுயி ருய்த்தன்று
பைத லொக்கற் றழீஇ யதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
நனந்தலை யுலக மரந்தை தூங்கக்
கெடுவி னல்லிசை சூடி
நடுக லாயினன் புரவல னெனவே.''[9]

(புறம்-221)

இதுமன் அடாது அப்பொருடந்தது.

'செற்றன் றாயினும்' என்னும் (222) புறப்பாட்டு முதலியன வும் அன்ன. இதனை[10] ஆண்பாற் கையறுநிலையெனினும் அமையும்.

இன்னது பிழைப்பின் இதுவாகியரெனத் துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத்தானும்— இத்தன்மைய தொன்றினைச் செய்தலாற்றேனாயின் இன்னவாறாகக் கடவேனெனக் கூறிய வஞ்சினக் காஞ்சியானும்;

---

9. புலவீர்! புரவலன் புகழ்சூடி நடுகல் ஆயினன். அவன் இத்தகையான் என எண்ணாமல் கூற்றம் உயிர் போக்கியது. அதனை வைவோம் வம்மின் என்க. அவன் பல்புகழன் (மன்) அன்பினன் (மன்), ஆய்கோலன் (மன்), திண் அன்பினன் (மன்) சாயலன் (மன்) மைந்து (மன்) உயர்ந்தோர் புக்கில் (மன்) என எங்கும் மன் கூட்டுக.

10. மன்னைக் காஞ்சியை.

அது தான் செய்யக் கருதியது பொய்த்துத் தனக்கு வருங் குற்றத்தால் உயிர் முதலியன துறப்பனென்றல். சிறப்பு வீடு பேறன்றி உலகியலிற் பெருஞ்சிறப்பு.

(உ-ம்) ''மெல்ல வந்தெ னல்லடி பொருந்தி
யீயென விரக்குவ ராயிற் சீருடை
முரசுகெழு தாயத் தரசோ தஞ்ச
மின்னுயி ராயினுங் கொடுக்குவெ னிந்நிலத்
தாற்ற லுடையோ ராற்றல் போற்றாதென்
னுள்ள மெள்ளிய மடவோன் றெள்ளிதிற்
றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல
வுய்ந்தனன் பெய்தலோ வரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
வருந்தப் பொரோ னாயிற் பொருந்திய
தீதி னெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தன் மகளி
ரொல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே.''[11]

(புறம்-73)

'நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்,' 'மடங்கலிற் சினைஇய' என்னும் (72, 71) புறப்பாட்டுக்கள் உயிருஞ் செல்வமும் போல்வன நிலையும் பெருளென நினையாது வஞ்சினஞ் செய்தன.

இன்னகை மனைவி பேஎய்ப் புண்ணோற் றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும்—இனிதாகிய நகையினையுடைய மனைவி

---

11. மெல்ல வந்து என் காலில் விழுந்து எமக்கு ஈகு என இரப்பாராயின் இவ்வரசு மட்டுமா கொடுக்க எளிது? இனிய உயிரையும் கொடுப்பேன். என் ஆற்றல் உடைய வீரரின் வலிமையை மதியாது என் உள்ளத்தையும் எள்ளிய அறிவிலியானவன் தூங்கும் புலியை இடறிய வன் போலப் பிழைத்துப்போதல் அரிதாகும். யானை யின் காலில் அகப்பட்ட மூங்கிலின் முனை நசுங் கும்படிச் சென்று பொருது வென்றிலேன் ஆனால், தீதில்லாத மனத்தோடு காதல் கொள்ளாத மகளிரைப் புணரும் புணர்ச்சியில் என் மாலை குழைவதாக—இது சோழன் நலங்கிள்ளி பாடியது.

**தன் கணவன் புண்ணுற்றோனைப் பேய் தீண்டுதலை நீக்கித் தானுந் தீண்டாத காஞ்சியானும்:**

என்றது, நகையாடுங் காதலுடையாள்[12] அவனைக் காத்து விடிவளவுஞ் சுற்றுதலன்றி முயங்குதற்கு உள்ளம் பிறவாதபடி அவன் நிலையாமையை எய்தினானென்றவாறு.

இதுவும் ஆண்பாற்காஞ்சியாம். இக்காஞ்சியென்பதனை முன்னும் பின்னுங் கூட்டுக.[13]

> ''தீங்கனி யிரவமொடு வேம்பு மனைச்செரீஇ
> வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
> கைபயப் பெயர்த்து மைவிழு திழுகி
> யையவி சிதறி யாம்ப லூதி
> யிசைமணி யெறிந்து காஞ்சி பாடி
> நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
> காக்கம் வம்மோ காதலந் தோழி
> வேந்துறு விழுமந் தாங்கிய
> பூம்பொறிக் கழற்கா னெடுந்தகை புண்ணே.''
>
> (புறம்—281)

**நீத்த கணவற் றீர்த்த வேலிற் பேஎத்த மனைவி ஆஞ்சி யானும்**—உயிர்நீத்த கணவன் தன்னுறவை நீக்கின வேல்வடு வாலே மனைவி அஞ்சின ஆஞ்சிக் காஞ்சியானும்:

எஞ்ஞான்றும் இன்பஞ்செய்த கணவனுடம்பு அறிகுறி தெரியாமற் புண்பட்டு அச்சநிகழ்தலின் யாக்கை நிலையாமை கூறியதாம். பேஎத்த என்பது, உரிச்சொன் முதனிலையாகப் பிறந்த பெயரெச்சம். அஞ்சின, ஆஞ்சியென நின்றது.[14]

---

12. நகையாடும் காதல்—கூடி மகிழும் காதல்.

13. வஞ்சினத்தானும் என முன் வந்ததில் வஞ்சினக் காஞ்சி யானும் எனவும். ஆஞ்சியானும் எனப் பின்வருவதில் ஆஞ்சிக் காஞ்சியானும் எனவும் கூட்டுக.

14. 'பேஎ' என்பது உரிச்சொல்—அச்சம் எனும் பொருளுடை யது. அது பேஎத்த எனப் பெயரெச்சமாயிற்று. பேஎத்த மனைவி என்னாது பேஎத்த ஆஞ்சி எனக்கூட்டுக. வேல் என்றது அதனால் பட்ட வடுவை.

''இன்ப முடம்புகொண் டெய்துவிர் காண்மினோ
வன்பி னுயிர்புரக்கு மாரணங்கு—தன்கணவ
னல்லாமை யுட்கொள்ளு மச்சம் பயந்ததே
புல்லார்வேன் மெய்சிதைத்த புண்.''[15]

(தகடூர்யார்த்திரை-புறத்திரட்டு-மூதின்மறம்-8)

இனி 'வேலிற் பெயர்த்த மனைவி'யென்று பாடமோதி,[16] அவ்வேலான் உயிரைப் போக்கின மனைவியென்று கூறி, அதற்குக்,

''கௌவைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோ
—னவ்வேலே
யம்பிற் பிறழுந் தடங்க ணவன்காதற்
கொம்பிற்கு மாயிற்றே கூற்று.''

(பு-வெ-காஞ்சி-23)

என்பதும் காட்டுப.

நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி மகட்பாடு அஞ்சிய மகட்பாலானும் — பெண்கோளொழுக்கத்தினொத்து மறுத்தல்[17] பற்றிப் பகைவனாய் வலிந்து கோடற்கு எடுத்து வந்த அரசனோடு முதுகுடித்தலைவராகிய வாணிகரும் வேளாளருந் தத்தம் மகளிரைப் படுத்தற்கு அஞ்சிய மகட்பாற் காஞ்சி யானும்:

---

15. உடம்பளவில் இன்பம் கொண்டு மகிழும் மகளிர்களே! இதனைக் காணுங்கள். அன்பால் தன் கணவன் உயிரைக் காக்கும் இப்பெண் அவன் மெய்யில் வேல் சிதைத்த புண்ணானது இனி அவன் தன் கணவன் அல்லன் என அஞ்சும் அச்சத்தைக் கொடுத்தது அவட்கு.

16. ஓதுபவர் இளம்பூரணர்.

17. ஒத்துமறுத்தல்—பெண் கொடுக்க இசைந்து அஞ்சி மறுத்தல்.

வேத்தியலாவது உயிர்போற்றாது வாழ்தலின்[18] அவரது நிலையின்மை நோக்கி அவரோடொத்து மகளிரைப் படுத்தற் கஞ்சி மறுப்பாராதலின் 'அஞ்சிய' என்றும் 'மேல்வந்த' வென்றுங் கூறினார். அம்முது குடிகள் தாம் பொருதுபடக் கருதுதலின் உயிரது நிலையாமை உணர்ந்த காஞ்சி யாயிற்று. 'பால்' என்றதனான் முதுகுடிகளேயன்றி 'அனைநிலை வகை' (75) யெனப்பட்டார் கண்ணும்[19] இத்துறை நிகழ்தல் கொள்க.

(உ-ம்) ''நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையு
நெடிய வல்லது பணிந்து மொழியலனே
யிஃதிவர் படிவ மாயின் வையெயிற்
றரிமதர் மழைக்க ணம்மா வரிவை
மரம்படு சிறுதீப் போல
வணங்கா யினடான் பிறந்த வூர்க்கே.''

(புறம்-349)

''களிறணைப்பக் கலங்கின, காஅ
தேரோடத் துகள்கெழுமின, தெருவு
மாமறுகலின் மயக்குற்றன, வழி
கலங்கழாஅலிற், றுறை, கலக்குற்றன
தெறன்மறவ ரிறைகூர்தலிற்
பொறைமலிந்து நிலனெளிய
வந்தோர் பலரே வம்ப வேந்தர்
பிடியுயிர்ப் பன்ன கைகவ ரிரும்பின்
நோவுற ழிரும்புறங் காவல் கண்ணிக்
கருங்கண் கொண்ட நெருங்கல் வெம்முலை
மைய னோக்கிற் றையலை நயந்தோ
ரளியர் தாமேயிவ டன்னை மாரே
செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்

18. வேந்தர் இயல்பாவது உயிரைப் போற்றாமல் எப்போது போர் வந்தாலும் சென்று பொருது மாய்வது.

19. ''அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கம் (75) என்னும் சூத்திரத்து 'அனை நிலைவகை' என்பதற்கு இவர் எழுதியது காண்க.

கழிப்பிணிப் பலகையர் கதுவாய் வாளர்
குழாஅங் கொண்ட குருதியம் புலவொடு
கழாஅத் தலையர் கருங்கடை நெடுவே
லின்ன மறவர்த் தாயினும் மன்னோ
வென்னா வதுகொ றானே
பன்னல் வேலியிப் பணைநல் லூரே.''[20]

(புறம்-343)

இதனுள் 'நிரலல் லோர்க்குத் தரலோ வில்லென' என்றலின் அரசர்க்கு மகட்கொடைக்குரியரல்லாத அனைநிலை வகையோர் பாற்பட்டது.

முலையும் முகனுஞ் சேர்த்திக் கொண்டோன் தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ ஈரைந்தாகுமென்ப-தன் கணவன் தலையைத் தன்முகத்தினும் முலையினுஞ் சேர்த்திக் கொண்டு அத்தலையான் மனைவியிறந்த நிலைமையானுந் தொகை பெற்றுக் காஞ்சிப் பத்துவகைப்படுமென்று கூறுவாராசிரியர் என்றவாறு.

தலை, அவள் இறத்தற்கேதுவாகலின் அது வினைமுதலாயிற்று.[21] மேல் துறை இரண்டென்பாராகலின் இவை பத்தும் ஒரு துறையாமென்றற்கும் இவை ஆண்பாற்குரிய வென்றற்கும் ஈரைந்தென வேறோர் தொகை கொடுத்தார். அவன் தலையல்லது உடம்பினை அவள் பெறாமையின் அவன் யாக்கைக்கு நிலையின்மை யெய்தலின் இதுவும் ஆண்பாற்கே சிறந்ததாம். மனைவி இறந்துபடுதலும் அதனாலெய்துதலின்

---

20. களிறுகள் அலைத்தலால் சோலைகள் கலங்கவும், தேர் ஓடலால் தெருவுகள் புழுதி பரக்கவும் குதிரைகள் சுழலலால் வழிகள் மயங்கவும், நீர்த்துறைகள் படைக்கலம் கழுவலால் கலக்கமுறவும் வேந்தர் தங்கலின் நிலன் நெளியவும் வந்த புதிய வேந்தர் பலரானார். அவர் தையலை நயந்து வந்தவர் அளியர்; இத்தையலின் தந்தையர் செல்வம் வேண்டாதவர்; போரை விரும்பும் மறவர்; வரிசையில்லாதவர்க்குப் பெண் தருதல் இல்லை யென்று கழியாற் கட்டப்பட்ட பலகையுடையராய், வாளுடையராய், கழாத்தலையராய், நெடு வேலையுடையராய் உள்ள மறவரை இவ்வூருடையதாய் இருந்தது. இனி என்னாகுமோ?

21. 'தலையொடு முடிந்த' என்பதற்குத் ''தலையொடு முடிந்த' என உடன் நிகழ்ச்சிப் பொருள் இன்றிக் காரணப் பொருளில் வரும் ஆன் உருபின் பொருள் கூறப் பட்டமையின் இவ்வாறு எழுதினார்; அவள் முடிதற்குக் கணவன் தலை காரணமாதலின்.

மேல் வருகின்ற பெண்பாற்கும் இயைபுபடப் பின்வைத்தார். இதற்கியைபுபடத் தொடாக்காஞ்சியும் ஆஞ்சிக் காஞ்சியும் பெண்பாலொடுபட்ட ஆண்பாற் காஞ்சியாதலின் முன்வைத்தார். இவை ஒருவகையாற் பெண்பாற்கண்ணு நிலையின்மையுடையவாயினும் இரண்டிடத்தும் ஓதிச் சூத்திரம் பல்காமற் சிறப்புடைய ஆண்மகற்கே ஓதிப் பெண்பாற் பகுதியுந் தழீஇயினாரென்றுணர்க. இனி வருகின்ற பத்தும் பெண்பாற்கேயுரிமையின் அவற்றிற்கும் ஈரைந்தென்பதனைக் கூட்டி முடிக்க.

(உ-ம்) ''நிலையி லுயிரிழத்தற் கஞ்சிக் கணவன்
றலையொழிய மெய்பெறாள் சாய்ந்தா — டலையினால்
வண்ணம் படைத்தான் முழுமெய்யு மற்றத
னுண்ணின்ற தன்றோ வுயிர்.''[22]

பேரிசை மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம் ஆய்ந்த பூசன் மயக்கத்தானும் — பெரும்புகழுடையனாகி மாய்ந்தானொருவனைச் சுற்றிய பெண்கிளைச் சுற்றங் குரல் குறைவுபட்ட[23] கூப்பீட்டு மயக்கத்தானும்.

என்றது, சுற்றத்தார் அழுகைக்குரல் விரவியெழுந்த ஓசையை. ஆய்ந்தவென்பது, உள்ளதனுணுக்கம்.[24] 'மாய்ந்த பூசன் மயக்க' மென்று பாடமாயிற்[25] சுற்றம் ஒருங்கு மாய்ந்த வழிப் பிறரழுத பூசன் மயக்கமென்று கொள்ளினும் அமையும். ஈண்டு மாய்ந்த மகனென்றதூஉஞ் சுற்றப்படுவானை அறிவித்தற்கே; ஆண்பாலும் உடன்கூறிய தன்று. மேலனவற்றிற்கும் இஃதொக்கும்.

---

22. கணவனின் தலைமட்டும் பெற்று உடம்பு பெறாளாய் அஞ்சித் தன் நிலையில்லாத உயிரைவிடச் சாய்ந்தாள்; அத்தலையால் தன் உடல் முழுதும் பொலிவுபெற்றாள், அதனால் அத்தலையுள்ளும் உயிர் நின்றது.

23. குரல் குறைவு படுதலாவது உரக்க அழுவதால் குரல் ஒலி குறைவு படுதல்.

24. ''ஒய்தல் ஆய்தல் உள்ளதன் நுணுக்கம்'' என்பது உரியியற் சூத்திரம். ஆய்ந்த — வரவரக் குரல் குறைவு பட்ட என்பது பொருள்.

25. 'சுற்ற மாய்ந்த' என்றதைச் சுற்றம் ஆய்ந்த என்றும் சுற்றம் மாய்ந்த என்றும் பிரிக்கலாம் ஆதலின் இரு வகைப் பாடம் ஆயிற்று.

(உ-ம்) ''இரவலர் வம்மி னெனவிசைத்த லின்றிப்
புரவலன் மாய்ந்துழியும் பொங்கு — முரைமயங்க
வேற்கண் ணியரழுத வெம்பூசல் கேட்டடங்கா
தோற்கண்ண போலுந் துடி.''[26]

(தகடூர் யாத்திரை — புறத்திரட்டு — இரங்கல்—2)

'மீனுண் கொக்கின் றூவி யன்ன' என்னும் (277) புறப் பாட்டும் அது.

தாமே ஏங்கிய தாங்கஞம் பையுளும் - அச்சுற்றத்தாருமின்றி மனைவியர் தாமே தத்தங் கொழுநரைத் தழீஇயிருந்து அழுதது கண்டோர் பொறுத்தற்கரிய நோயானும்:

'தாமே' யெனப் பன்மை கூறினார், ஒருவர்க்குத் தலைவியர் பலரென்றற்கு. ஏகாரம் சுற்றத்திற் பிரித்தலிற் பிரிநிலை.

இது செல்வமும் இன்பமும் ஒருங்கு நிலையாமை கூறியது.[27]

''மழைகூர் பானாட் கழைபிணங் கடுக்கத்துப்
புலிவழங் கதரிடைப் பாம்புதூங் கிறுவரை
யிருள்புக்குத் துணிந்த வெண்குவரற் கல்லளை
யொருதனி வைகிய தனைத்தே பெருவளத்து
வேனின் மூதூர்ப் பூநாறு நறும்பக
லெழுதுசுவர் மாடத்துக் கிளையுடை யொருசிறை
யவரின்று நிகழ்தரு முறவே யதனா
லழுதுபனி கலுழ்ந்தவெங் கண்ணே யவ்வழி
நீர்நீந்து பாவை யசைவது நோக்கிச்
சேனிடை யகன்ற துயிலே யதுவினி
யவருடைக் கனவோ டிவ்வழி யொருநாள்
வாரா தாயினும் யாதாங் கொல்லோ

26. துடிகள் எல்லாம் இரவலரே! பரிசு பெற வம்மின் என்பதற்காக இயக்கப்படுதலேயன்றிப் புரவலன் மாய்ந்த போதும் மகளிர் அழும் குரல் கேட்டுத் தாமும் இயக்கப் படுதல் அடங்காத தோலாகிய கண்கள் உடையன போலும்.

27. சுற்றமின்மையின் செல்வ நிலையாமையும் கணவனை யிழந்தமையின் இன்ப நிலையாமையும் ஒருங்கு கூறியது.

மெலிந்து மெலியுமென் யாக்கையிற்
கழிந்த கழியுமென் னாருயிர் நிலையே.''[28]

'கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்ப' என்னும் (349) புறப்பாட்டும் அது.

தாமே யேங்கிய என்பதற்குச் சிறைப்பட்டார் தாமே தனித் திருந்ததென்று கூறிக்,

''குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினு
மாளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபத
மதுகை யின்றி வயிற்றுத் தீத்தணியத்
தாமிரந் துண்ணு மளவை
யீன்ம ரோவிங் வுலகத் தானே.''

என்னும் (74) புறப்பாட்டுக் காட்டுவாரும் உளர்.

கணவனோடு முடிந்த படர்ச்சி நோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தமும் — மனைவி தன் கணவன் முடிந்த பொழுதே உடன் முடிந்துபோகிய செலவுநினைந்து கண்டோர் பிறர்க் குணர்த்திய மூதானந்தத்தானும்:

ஆனந்தம் — சாக்காடு. முதுமை கூறினார், உழுவலன்பு பற்றி.[29] இப்படி யிறத்தலின் இஃது யாக்கை நிலையின்மை.

---

28. மூதூரில் மாடத்தின் ஒரு மூலையில் சுற்றமும் இன்றிக் கணவனையிழந்து தனித்திருக்கும் இந்நிலையானது மலையடுக்கத்தில் பாதியிரவில் புலி வழங்கும்படியான இடத்தில் கரடியும் வருதற்குரியதும் பாம்பு நடமாடக் கூடியதுமான கல் அளைப் பக்கம் தனித்திருப்பது போலாகும்: அதனால் கண் நீர் நிறைந்தது; கண்பாவை நீரில் அசைவது பார்த்துத் தூக்கமும் அகன்றது. அத் தூக்கம் இனி இறந்த கணவருடன் வரவில்லையாயினும் என்னாகுமோ? என் உடல் மெலியும்: உயிரும் கழியும் போலும்.

29. மூதானந்தம் — பெருஞ்சாக்காடு. உழுவலன்புபற்றிக் கூறியது. முதுமையாவது அன்பின் பெருக்கு.

(உ-ம்) ''ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க்
கீருயி ரென்ப ரிடைதெரியார் —போரில்
விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையி னாட்கு
முடனே யுலந்த துயிர்.''

(பு-வெ-சிறப்பிற்பொது — 9)

நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து தனிமகள் புலம்பிய முதுபாலையும் — மிகுதிமிக்க அருநிலத்தே தன் கணவனை இழந்து தனித்த தலைமகள் தன் தனிமையை வெளிப்படுத்தின முதுபாலையானும்:

'புலம்பிய' எனவே அழுதல் வெளிப்படுத்தல் கூறிற்று. பாலையென்பது பிரிவாகலின் இது பெரும் பிறிதாகிய பிரிவாதல் நோக்கி 'முது பாலை'யென்றார். நனிமிகு சுரமென்று இருகால்[1] அதனருமை கூறவே பின்பினிப் பிரிவு அதற்குச் சிறந்த தன்றாயிற்று.

இதுவும் இன்பமுஞ் செல்வமும் ஒருங்கு நிலையின்மை கூறிற்று.

''இளையரு முதியரும் வேறுபுலம் படர
வெடுப்ப வெழாஅய் மார்பமண் புல்ல
விடைச்சுரத் திறுத்த மள்ள விளர்த்த
வளையில் வறுங்கை யோச்சிக் கிளையு
ளின்ன னாயின னிளையோ னென்று
நின்னுரை செல்லு மாயின் மற்று
முன்னூர்ப் பழுனிய கோளியா லத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே யென்மகன்
வளனுஞ் செம்மலு மெமக்கென நாளு
மானாது புகழு மன்னை
யாங்கா குவள்கொ லளிய டானே.'[2]

(புறம்—254)

---

1. 'நனி' எனவும் 'மிகு' எனவும் இருமுறை. வேனிற் காலத்தே தான் சுரம் கொடியதாகும். பின்பனியில் அன்று என்பதால் இவ்வாறு கூறினார்.
2. சுரத்திடை யிறந்தானைக் கண்டு ஒரு முதியவள் கூறியது நம்முடன் வந்த இளையரும் முதியரும் வேற்றுப் புலம் செல்ல யான் நின்னை எடுக்கவும் எழாதவனாய் நின் மார்பு மண்ணைத் தழுவ இடைச் சுரத்தில் உயிர் விட்ட வீரனே! யான் என் வளையல் இல்லா வறிய கையைத் தலைமேல் வைத்துச் சுற்றத்திடையே இப்படி இறந்தான் என்று புலம்ப அவ்வுரையானது ஊர் முன்னே பழுத்த ஆலமரத்தில் புட்கள் வரும் புதுவருவாய் போல என்மகனின் செல்வமும் தலைமையும் அவன்பால் வருவோர்க்குப் பயன்படுவதாகும் என்று நாளும் புகழ்ந்து பேசும் நின் அன்னைக்குச் செல்லுமானால் அவள் என்ன ஆவாளோ?

கழிந்தோர் தேஎத்து அழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும் — கணவனோடு மனைவியர் கழிந்துழி அவர் கட்பட்ட அழிவு பொருளெல்லாம் பிறர்க்கு அறிவுறுத்தித் தாம் இறந்துபடா தொழிந்த ஆயத்தாரும் பரிசில் பெறும் விறலியருந் தனிப்படருழந்த செயலறு நிலைமையானும்.

ஒழிந்தோரென வரையாது கூறினமையிற் கழிந்தோராற் புரக்கப்படும் அவ்விருதிறத்தாரையும்[3] உடன் கொள்க. கழிந்தோரென்ற பன்மையால் ஆண்பாலுந் தழீஇயினார்; கையறுநிலை அவரையின்றி அமையாமையின். ஆண்பாற் கையறுநிலை மன்னைக் காஞ்சியுள் அடங்கும். அழிவாவன— புனல் விளையாட்டும் பொழில் விளையாட்டுந் தலைவன் வென்றியும் போல்வன.

(உ-ம்) ''தேரோன் மகன்பட்ட செங்களத்து ளிவ்வுடம்பிற்
நீராத பண்பிற் றிருமடந்தை — வாரா
வுலகத் துடம்பிற் கொழிந்தனள் கொல்லோ
லவகற்ற கற்பி னவள்.''[4]

(பாரதம்)

காதலி இழந்த தபுதார நிலையும்-தன் மனைவியைக் கணவனிழந்த தபுதார நிலையானும்:

என்றது தாரமிழந்த நிலை. தன் காதலியை இழந்த பின் வழிமுறைத் தாரம் வேண்டின் அது காஞ்சிக் குறிப்பன்று என்றற் கும், எஞ்ஞான்றும் மனைவியில்லாதானுந் தபுதார நிலைக்கு உரியனாயினும் அது காஞ்சியாகா தென்றற்கும் தபுதார நிலை யென்றே பெயர் பெறுதன் மரபென்றற்கும், காதலியிழந்த நிலையுமென்றே ஒழியாது பின்னுந் தபுதார நிலையுமென்றார்.[5] தலைவர் வழிமுறைத் தாரமும் எய்துவாராகலின் அவர்க்கு நிலையாமை சிறப்பின்மையின் ஆண்பாற் காஞ்சியன்றாயிற்று.

---

3. ஆயத்தாரும் விறலியரும்.

4. தேரோன் மகனாகிய கன்னன் இறந்த போர்க்களத்தில் அவன் உடம்பிற் பொருந்திய நீங்காத அன்புடைய மனைவி நீங்காத கற்புடையளாகிய அவள் இம்மண்ணு லகிற்கு வாராத தேவ உடம்புக்காக இன்று இறந்தாள் போலும்.

5. காதலி யிழந்த நிலை எனினும் தபுதார நிலை எனினும் ஒன்றே. அதனால் தபுதார நிலை என்பது துறைப் பெயராக மட்டுமிருக்க அதன் விளக்கமாகக் 'காதலி யிழந்த' என்பது கூறப்பட்டது எனக் கொள்க.

இஃது யாக்கையும் இன்பமும் ஒருங்கு நிலையின்மையாம்.

(உ-ம்) ''யாங்கு பெரிதாயினு நோயள வெனைத்தே
யுயிர் செகுக் கல்லா மதுகைத் தன்மையிற்
கள்ளி போகிய களரியம் பறந்தலை
வெள்ளிடைப் பொத்திய விளைவிற கீமத்
தொள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனன் மடந்தை
யின்னும் வாழ்வ லென்னிதன் பண்பே.''

(புறம்—245)

காதலன் இழந்த தாபத நிலையும் — காதலனையிழந்த மனைவி தவம்புரிந்தொழுகிய நிலைமையானும்.

இருவரும் ஒருயிராய் நிகழ்ந்தமையின் உயிரும் உடம்பும் இன்பமுஞ் செல்வமும் ஒருங்கிழந்தாள் தலைவியேயாம்.

இதனை இல்லறம் இழத்தலின் அறநிலையின் அமையு மென்ப.[6]

(உ-ம்) அளிய தாமே சிறுவெள் ளாம்ப
லிளைய மாகத் தழையா யினவே
யினியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுது மறுத்
தின்னா வைக லுண்ணு
மல்லிப் படூஉம் புல்லா யினவே.

நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச் சொல்லிடையிட்ட பாலைநிலையும் — கற்புடை மனைவி தன் கணவன் இறந்துழி அவனோடு எரிபுகுதல் வேண்டி எரியை விலக்கினாரோடு உறழ்ந்துகூறிய புறங்காட்டு நிலையானும்.

எல்லா நிலத்தும் உளதாகி வேறு தனக்கு நிலனின்றி வருதலானும் நண்பகல் போல் வெங்கனலான் வெதுப்புதலானும் புறங்காட்டைப்[7] பாலையென்றார், பாலைத்தன்மை எய்திற்று என்றற்கு நிலையென்றார்.

''பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
யணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட

---

6. அறநிலையின்மையும் என்ப என்றிருத்தல் வேண்டும். அறம் — இல்லறம்.

7. புறங்காடு — சுடுகாடு. ஊர்க்குப் புறமான காடு.

காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
தடகிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியு
முயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருகோட்டுப் பண்ணிய கருங்கோட் டீம
நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே.''

(புறம்—246)

மாய்பெருஞ் சிறப்பிற் புதல்வற் பெயரத்[8] தாய்தப வருஉந் தலைப்பெயல் நிலையும் — பொருகளத்துப் பொருது மாயும் பெருஞ்சிறப்பிற்றீர்ந்து தன்மகன் புறங்கொடுத்துப் போந்தானாக, அதுகேட்டுத் தான் சாக்காடு துணிந்து சென்று மகனைக் கூடுங் கூட்டமொன்றானும்; இனி அவன் பிறர் சிறப்பு மாய்தற்குக் காரணமாகிய பெருஞ்சிறப்பொடு களப்பட்டுத் துறக்கத்துப் போயவழி அவனோடு இறந்துபடவரும், தாயது தலைப் பெயனிலைமை யொன்றானும்:

இவ்விருகூறும்[9] உய்த்துக் கொண்டுணர்தலென்னும் உத்தி. நிலையென்றதனால் அவள் இறந்துபடாது மீடலுஞ் சிறுபான்மையாம் காஞ்சியென்று கொள்க. அதற்கு அன்பிற்கு நிலையின்மை யாம்.

(உ-ம்) ''வாதுவல் வயிறே வாதுவல் வயிறே
நோவே னத்தை நின்னீன் றனனே
பொருந்தா மன்ன ரருஞ்சம முருக்கி
யக்களத் தொழிதல் செல்லாய் மிக்க
புகர்முகக் குஞ்சர மெறிந்த வெஃக
மதன்முகத் தொழிய நீபோந் தனையே
யதனா, லெம்மில் செய்யாப் பெரும்பழி செய்த

---

8. அரும்பெருஞ் சிறப்பின் புதல்வற்பயந்த-இளம். பாடம், இதற்கேற்ற உரை நச். கூறும் இரண்டாம் உரை.

9. இவ்விரண்டு கூறானவுரைகளும்.

கல்லாக் காளையை யீன்ற வயிறே.''[10]

(புறத்திரட்டு-மூதின்மறம்-9)

இத் தகடூர் யாத்திரை கரியிடை வோலொழியப் போந்ததற்குத் தாய்தபவந்த தலைப்பெயனிலை.

''எற்கண் டறிகோ வெற்கண் டறிகோ
வென்மக னாத லெற்கண் டறிகோ
கண்ணே கணைமூழ் கினவே தலையின்
வண்ண மாலையும் வாளிவிடக் குறைந்தன
வாயே, பொங்கு நுனைப் பகழி மூழ்கலிற் புலர்வழித்
தாவ நாழிகை யம்புசெறித் தற்றே
நெஞ்சே வெஞ்சரங் கடந்தன குறங்கே
நிறங் கரந்து பலசா நிரைத்தன வதனா
லவிழ்பூ வப்பணைக் கிடந்தோன்
கமழ்பூங் சுழற்றீக் காய்போன் றனனே.[11]

இத் தகடூர் யாத்திரை துறக்கத்துப் பெயர்ந்த நெடுங்கேரளன் தாய் இறந்துபட்ட தலைப்பெயனிலை.

''நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்றுபலர் கூற
மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்

---

10. கொடியவயிறே! நின்னால் ஈனப்பட்ட என்மகன் பகை மன்னரின் போரையழித்து அப்போர்க்களத்தில் தான் இறத்தலைச் செய்யாதவனாதலைக் கண்டு வாரா யாயினை! யானை மீது எறிந்த வேல் அதன் முகத்தில் தைக்க அந்த அளவில் மீண்டுவிட்ட மகனைக் கண்டும் நீ வந்தனை; அதனால் எம் இல்லத்தில் இதுவரை யாரும் செய்யாத பழியைச் செய்த காளையை யீன்ற வயிறாக ஆனாய், அதனால் யான் நோவேன் — இது தாய் கூற்று.

11. இறந்து பட்டவன் என்மகன் ஆதலை எதைப் பார்த்து அறிவேன்? கண்கள் பகைவர் அம்பு மூழ்கி மறைந்தன; தலையும் மாலையும் அம்புபடக் குறைந் தன, வாய் பகைவர் அம்புகள் மூழ்கலால் அம்புப் புட்டிலில் அம்புகள் செறிந்தனபோல் உள்ளது. நெஞ்சம் அம்பு துளைத்துச் சென்றன. துடைகள் அம்பு கள் நிறைந்தன. அம்பாகிய அணையிற் கிடந்தவன் கழலும் தீக்காய்ந்தன, அதனால் இப்பிணங்களுள் வென்ற என் மகன் இவனாவான் என்பதை எதைப் பார்த்து அறிவேன் — தாய் கூற்று.

முலையறுத் திடுவன் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.''[1]

(புறம்—278)

இப் புறப்பாட்டு மீண்டது.

'ஈன்று புறந்தருதல்' என்னும் (312) புறப்பாட்டும் அது.

மலர்தலை உலகத்து மரபு நன்கறியப் பலர் செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு — அகன்ற இடத்தினையுடைய உலகங்களிடத்து வரலாற்று முறைமையினைப் பலரும் பெரிதுணரும்படியாகப் பிறந்தோரெல்லாரும் இறந்துபோகவும் எஞ்ஞான்றும் இறப்பின்றி நிலைபெற்ற புறக்காட்டினை வாழ்த்துதலானும்.

(உ-ம்) ''உலகு பொதியுருவந் தன்னுருவ மாகப்
பலர்பரவத் தக்க பறந்தலை நன்காடு
புலவுங்கொ லென்போல் புலவுக் களத்தோ
டிகனெடுவே லானை யிழந்து,''[2]
(பெரும்பொருள் விளக்கம் - புறத்திரட்டு -இரங்கல்-19)

''களரி பரந்து கள்ளி போகிப்
பகலுங் கூஉங் கூகையொடு பிறழ்பல்
லீம விளக்கிற் பேஎய் மகளிரோ
டஞ்சுவந் தன்றிம் மஞ்சுபடு முதுகாடு
நெஞ்சமர் காதல ரழுத கண்ணீ

---

1. முதியோள், தன் மகன் புறமுதுகிட்டான் எனப் பலர் கூறக்கேட்டு, அமர்க்கு உடைந்தான் எனின் அவன் பாலுண்ட மார்பை யறுப்பேன் எனக் கூறிக் கையிற் கொண்ட வாளோடு பிணக்களம் சென்று பிணங்களைத் துழாவி, உடல் சிதைந்து வேறாகி மல்லாந்து படுத்துக் கிடக்கும் தன் மகனைக் கண்டு ஈன்ற காலத்தினும் பெரிது மகிழ்ந்தாள்.

2. உலகு மறையும்படியான உருவமே தன் உருவம் என்னும் படியாகப் பலரும் பரவும் அகன்ற சுடுகாடானது, மாறுபட்ட நெடிய வேலையுடைய வீரனைப் புலால் நாறும் இக்களத்தில் இழந்தமையால் யான் வருந்துதல் போலத் தானும் வருந்துமோ?

ரென்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப
வெல்லார் புறனுந் தான்கண் டுலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே.''

(புறம்—356)

இதுவுமது.

தொகைஇ ஈரைந்து ஆகுமென்ப — தொகை பெற்றுக் காஞ்சி பத்துவகைப்படுமென்று கூறுவர் ஆசிரியர்; நிறையருஞ் சிறப்பிற் றுறை இரண்டு உடைத்தே — ஆதலான் அக்காஞ்சி நிறுத்தற்கு எதிர் பொருளில்லாத பெரிய சிறப்பினையுடைய ஆண்பாற்றுறையும் பெண்பாற்றுறையுமாகிய இரண்டு துறை யினையுடைத்து என்றவாறு.

எனவே முற்கூறிய பத்தும் இப்பத்துமாக இருபதென்பதுங் கூறினாராயிற்று. நிறையருஞ் சிறப்பென்றதனானே மக்கட்குந் தேவர்க்கும் உள்ள நிலையாமையே காஞ்சிச் சிறப்புடைத்தாகக் கூறப்படுவது ஏனை அஃறிணைப் பகுதிக் கண்ணுள்ள நிலை யாமை காஞ்சிச்சிறப்பன்று என்றுணர்க.[3]

(24)

## சோம இளவரசு

சூத்திரம்—24.

மாற்றருங் கூற்றஞ்..............டுடைத்தே.

கருத்து :- இது, காஞ்சித்துறை விழுப்ப வகை பத்தும் விழும வகை பத்துமாக இருபதாமாறு கூறுகிறது.

பொருள் : 1. மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமை யும்—யார்க்கும் விலக்கொணாது இறுதி தரும் கூற்றினாற்றல் கூறும் பெருங்காஞ்சியும்;

'பல்சான்றீரே' எனும் நரிவெரூஉத்தலையாரின் புறப்பாட் டில் பின்வரும் அடிகளில் மாற்றருங் கூற்றின் பெருமை சாற்று தல் அறிக;

---

3. காஞ்சித்திணையிற் கூறப்படும் நிலையாமைச் சிறப்பு மக்களுக்கும் தேவர்க்குமே யுரியது. விலங்கு முதலிய அஃறிணைப் பொருள்களுக்குக் கூறப்படவில்லை. ஏன் எனின் அவை நிலையாமையுணர்வுடையன அல்ல.

(1) "..............................................
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ."
(புறம்-195)

(2) உடற்றும் பிணித்தீ யுடம்பினுயிர் பெய்திட்
டடுத்துணர்வு நெய்யாக வாற்றறுவை யாகக்
குடித்துண்ணுங் கூற்றங் குடில்பிரியா முன்னே
கொடுத்துண்மின் கண்டீர் குணம்புரிமின் கண்டீர்
(சிந்தாமணி 2620)

2. கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்- இளமை கழிந்த முதியோர், மற்றையவர்க்கு அப்பரிசு சுட்டி யறிவுறுத்தும் முதுகாஞ்சியும்;

இதற்குப் பாட்டு :—
யாணர் வரவின் மேனா ளீங்கிவன்
இளமைச் செவ்வி நயந்த பேதையர்
காத லுண்கண் வருபனி நீங்கி
இன்னுந் துயில்கொண் டிலவே;........
(ஆசிரிய மாலை)

3. பண்புற வரூஉம் பகுதி நோக்கிப் புண்கிழித்து முடியும் மறத்தினானும்—தகுதியொடுபட்ட பரிசு கருதி வாய்த்த புண்ணைக் கிழித்து உயிர் துறக்கும் மறக் காஞ்சியும்.

"பொருது வடுப்பட்ட யாக்கை நாணிக்
கொன்று முகந்தேய்ந்த வெஃகந் தாங்கிச்
சென்று களம்புக்க தானை தன்னொடு
முன்மலைந்து மடிந்த வோடா விடலை
நடுக னெடுநிலை நோக்கி, ஆங்குத்தன்
புண்வாய் கிழித்தனன் புகழோன்; அந்நிலைச்
சென்றுழிச் செல்க மாதோ, வெண்குடை
யரசுமலைந்து தாங்கிய களிறுபடி பறந்தலை
முரண்கெழு தெவ்வர் காண
விவன்போ லிந்நிலை பெறுகயா னெனவே."

இதில் முன் ஒருவன் இறந்து கல்லான நிலையைப் போரில் புண்பட்ட ஒருவன் கண்டு, யாக்கை நிலையாமையை நினைத்துத் தன் புண்ணைக் கிழித்து உயிர் துறந்த தறுகண்மை கூறப்படுதல் அறிக.

4. ஏமச் சுற்றமின்றிப் புண்ணோற் பேஎயோம்பிய பேஎய்ப் பக்கமும்—பேணும் சுற்றத்தாரின்மையால் புண்பட்டவனைப் பேய்பேணும் பேய்க் காஞ்சியும்;

> ''புண்ணனந்த ருற்றானைப் போற்றுந ரின்மையிற்
> கண்ணனந்த ரில்லாப்பேய் காத்தனவே—உண்ணும்
> உளையோரி யுட்க வுணர்வொடுசா யாத
> விளையோன் கிடந்த விடத்து.''

5. இன்னனென் றிரங்கிய மன்னையானும் — இன்ன பரிசுடையா னென்று இறந்தபின் ஒருவனை அயலோர் பரிந்து கூறும் மன்னைக் காஞ்சியும்.

> ''இளையோர் சூடார், வளையோர் கொய்யார்
> நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
> பாணன் சூடான், பாடினி யணியாள்
> ஆண்மை தோன்ற வாடவர்க் கடந்த
> வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
> முல்லையும் பூத்தியோ வொல்லையூர் நாட்டே.''
>
> (புறம்—342)

6. இன்னது பிழைப்பின் இதுவாகியர் எனத் துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத்தானும் — இது செய்யத் தவிர்ந்தால் இன்னவாக முடியக்கடவது எனக்கூறும் ஒப்பற்ற சிறப்புடைய வஞ்சினக் காஞ்சியும்;

> ''மடங்கலிற் சினைஇ மடங்கா வுள்ளத்
> தடங்காத் தானை வேந்த ருடங்கியைந்
> தென்னொடு பொருது மென்ப: அவரை
> ஆரம ரலறத் தாக்கித் தேரோ
> டவர்ப்புறங் காணே னாயின், சிறந்த
> பேரம ருண்க ணிவளினும் பிரிக,
> அறனிலை திரியா வன்பி னவையத்துத்
> திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து
> மெலிகோல் செய்தே னாகுக; மலிபுகழ்
> வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்
> பொய்யா யாணர் மையற் கோமான்
> மாவனு மன்னெயி லாந்தையு முரைசா
> லந்துவஞ் சாத்தனு மாத னழிசியும்
> வெஞ்சின வியக்கனு முளப்படப் பிறருங்
> கண்போ னண்பிற் கேளிரொடு கலந்த

வின்களி மகிழ்நகை யிழுக்கியா னென்றோ?—
மன்பதை காக்கு நீள்குடிச் சிறந்த
தென்புலங் காவலி னொரீஇப்பிறர்
வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே.''

(புறம்—71)

7. இன்னகை மனைவி பேஎய் புண்ணோற் றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும் — புண்பட்டோன் உளையாவாறு இனிய ''வாயில் நகை'' வாய்ந்து வரும் அவன் மனைவி அவனைப் பேய் நெருங்காமற் காத்துத் தொட விடாத தொடாக்காஞ்சியும்,

''தீங்கனி யிரவமொடு வேம்பு மனைச்செரீஇ
வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
கைபயப் பெயர்த்து மையிழு திழுகி
யையவி சிதறி யாம்ப லூதி
யிசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
காக்கம் வம்மோ, காதலந் தோழி!
வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறி யுடைய நெடுந்தகை புண்ணே.''

(புறம்—281)

8. நீத்த கணவற் றீர்த்த வேலிற் பெயர்த்த மனைவி ஆஞ்சியானும் — அவனுடலொடு தன்னையும் விட்டிறந்த கணவனை முடித்த வேலினால் அவன் மனைவி கண்டோ ரஞ்சுமாறு தன்னுயிரைப் போக்கிய ஆஞ்சிக் காஞ்சியும்;

''யானை தந்த முளிமர விறகிற்
கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து
மடமான் பெருநிரை வைகுதுயி லெடுப்பி
மந்தி சீக்கு மணங்குடை முன்றிலி
னீர்வார் கூந்த லுரும்புறந் தாழப்
பேரஞர்க் கண்ணள் பெருங்காடு நோக்கித்
தெருமரு மம்ம தானே தன்கொழுநன்
முழுவுகண் டுயிலாக் கடியுடை வியனகர்ச்
சிறுநனி தமிய ளாயினும்
இன்னுயிர் நடுங்குந்த னிளமைபுறங் கொடுத்தே.''

(புறம்—247)

9. நிகர்த்து மேல்வந்த வேந்தனோடு முதுகுடி மகட் பாடஞ்சிய மகட்பாலானும் — குடித்தொன்மையில் ஒவ்வா நிலையில் ஒத்தானாகக் கருதி மகள் கொள்ளப் படையொடு வந்த மன்னனோடு தொல்குடி மகளைப்படுத்தலஞ்சி, அதை விலக்க அவள் தன்னையர் வந்தவனோடு தம்முயிரைப் பொருட் படுத்தாது பொரும் மகட்பாற் காஞ்சியும்;

''களிறணைப்பக் கலங்கின காஅ'' எனவரும் அடை நெடுங் கல்லியார் புறப் பாட்டில்,

''வந்தோர் பலரே வம்ப வேந்தர்
..............................................
மைய னோக்கிற் றையலை நயந்தோர்;
அளியர் தாமே; யிவள் தன்னை மாரே;
செல்வம் வேண்டார், செருப்புகல் வேண்டி
நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்
கழிப்பிணிப் பலகையர், கதுவாய் வாளர்
குழாஅங் கொண்ட குருதியம் புலவொடு
கழாஅத் தலையர் கருங்கடை நெடுவேல்
இன்ன மறவர்த் தாயினும் மன்னோ
என்னா வதுகொல் தானே
பன்னெல் வேலிப் பனைநல் லூரே.''

(புறம்—345)

''ஏர்பரந்த வயல்'' என்னும் குன்றூர்கிழார் மகனார் புறப் பாட்டும் (புறம்-338) ''கானக்காக்கை'' என்னும் அரிசில் கிழார் பாட்டும் (புறம்-342) மகட்பாற் காஞ்சித் துறையை விளக்குதல் உணர்க.

10. கொண்டேன் தலையொடு, முலையும் முகனும் சேர்த்தி முடிந்த நிலையொடு தொகைஇ, ஈரைந்தாகுமென்ப— இறந்த தன் கணவன் தலையைத் தன் மார்பினும் முகத்தினும் அணைத்து அவனோடு மனைவிதானும் மாய்ந்த முதுகாஞ்சியொடு கூட்டி விழுப்பவகைக் காஞ்சித்துறை பத்தாகும் என்பர் புறநூற் புலவர் ஒரு சாரார்.

''..............................................
என்றிவை சொல்லி யழுவாள் கணவன்றன்
பொன்றுஞ்சு மார்பம் பொருந்தத் தழீஇக்கொள்ள
நின்றான் எழுந்து, நிறைமதி வாண்முகங்
கன்றிய தென்றவள் கண்ணீர்கை யான்மாற்ற.''

(சிலப்பதி—காதை 19 வரி 60 முதல் 63)

இனி, விழும வகைக் காஞ்சித்துறை பத்தும் கூறுகிறார்.

அவை பின்வருமாறு:-

11. பேரிசை மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்ற மாய்ந்த பூசன் மயக்கத்தானும் — மிகுந்த புகழோடு பொருது மடிந்த குரிசிலொருவனை வளைந்திரங்கும் சுற்றத்தார் அரற்றி ஓய்ந்த அழுகைக்குரலரவ மயக்கமாம் காஞ்சியும்:

''இரவலர் வம்மி னெனவிசைத்த லின்றிப்
புரவலன் மாய்ந்துழியும் பொங்கும்—உரையழுங்க
வேற்கண் ணியரழுத வெம்பூசல் கேட்டடங்கா
தோற்கண்ண போலுந் துடி.''

தகடூர் யாத்திரை.

''பாடுநர்க் கீத்த'' என்னும் பொத்தியார் புறப்பாட்டும் இத்துறையே கூறும்.

12. தாமே யேங்கிய தாங்கரும் பையுளும்—போரில் ஊறு பட்டு ஓய்ந்தோர் தாங்களே பொறுத்தற்கரிய வருத்தங்கொண்டு ஏங்கும் துன்பக் காஞ்சியும்;

[பையுள்—துன்பம்.]

இதில் தாமே என்பதை மனைவியர்மேல் ஏற்றி வேறு பொருள் கூறுவாரும் உளர். அது பொருந்தாமை வெளிப்படை.

''குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினு
மாளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபத
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
யீன்ம ரோவிவ் வுலகத் தானே.''

(புறம்-74)

13. கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தமும்—கொழுநனொடு மாய்ந்த மனைவியின் மீச்செலவைக்கண்டு வழிச் செல்வோர் இரங்கிக் கூறும் மூதானந்தக் காஞ்சியும்;

1. ''......... கெடுகவென் ஆயுளென
மன்னவன் மயங்கி வீழ்ந்தனனே, தென்னவன்
கோப்பெருந் தேவி குலைந்தனள், நடுங்கிக்
கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்
றிணையடி தொழுது வீழ்ந்தனளே மடமொழி.''

(சிலப்பதி-காதை 20 வரி 77-81)

இதில், கண்ணகி காட்டிய சான்றால் தான் குற்றமற்ற கோவலனைக் கொல்வித்த தன் தவறு கண்டு நெடுஞ்செழியன் உயிர் துறக்க, அவன் பெருங்கோப்பெண்டும் அவனுக்குப்பின் இருக்கத் தரியாமல் உடன் உயிர் இழந்தது கூறும் மூதானந்தம் வருதல் காண்க.

2. ''ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க்
கீருயி ரென்ப ரிடைதெரியார்;—போரில்
விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையி னாட்கு
முடனே யுலந்த துயிர்.''

(புற-பொரு-வெ-மா)

14. நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து தனி மகள் புலம்பிய முதுபாலையும்—மிகப்பெரிய சுரத்திடைக் கொழுநனை யிழந்து தனியளாய் மனைவி யரற்றும் முதுபாலைக் காஞ்சியும்;

1. ''என்றிறத் தவலங் கொள்ள லினியே
வல்வார் கண்ணி யிளையர் திளைப்ப
நகாஅ லெனவந்த மாறே யெழாநெற்
பைங்கழை பொதிகளைந் தன்ன விளர்ப்பின்
வளையில் வறுங்கை யோச்சிக்
கிளையு ளொய்வலோ கூறுநின் னுரையே''

(புறம்-253)

2. ''ஐயோ வெனின்யான் புலியஞ் சுவலே,
யணைத்தனன் கொளினே யகன்மார் பெடுக்கவல்லேன்;
என்போற் பெருவிதிர்ப் புறுக, நின்னை
யின்னா துற்ற வறனில் கூற்றே;
நிரைவளை முன்கை பற்றி
வரைநிழற் சேர்க நடத்திசிற் சிறிதே.''

(புறம்-255)

''கலஞ் செய்கோவே'' என்னும் புறப்பாட்டும் இத்துறையே யாம்.

15. கழிந்தோர் தேஎத்துக் கழிபடருறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்—மாய்ந்தோர் மாட்டு அவருக்காக மிக வருந்தி மற்றையோ ரிரங்கும் கையறுநிலைக் காஞ்சியும்;

> ''இளையோர் சூடார், வளையோர் கொய்யார்,
> நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
> பாணன் சூடான் பாடினி யணியாள்,
> ஆண்மை தோன்ற வாடவர்க் கடந்த
> வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
> முல்லையும் பூத்தியோ வொல்லையூர் நாட்டே.''
>
> (புறம்-242)

இதற்குக் ''கணவனொடு மனைவியரும் கழிந்துழி இறந்துபடா தொழிந்த ஆயத்தாரும் விறலியரும் தனிப் படருழந்த செயலறு நிலைமை'' எனக் கூறுவர் நச்சினார்க்கினியர்; அது மற்ற மூதானந்தம் கையறு நிலைகளு ளடங்குதலின் ஈண்டுப் பொருந்தாமை யறிக.

16. காதலியிழந்த தபுதார நிலையும்—அன்புடை மனைவியை யிழந்த கணவனது தபுதாரநிலைக் காஞ்சியும்;

> ''ஓவத் தன்ன விடனுடை வரைப்பிற்
> பாவை யன்ன குறுந்தொடி மகளி
> ரிழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்,
> கழைக்க ணெடுவரை யருவி யாடிக்
> கான யானை தந்த விறகிற்
> கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
> புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே.''
>
> (புறம்-251)

குறிப்பு :- 'தாரம்தபு'' என்றது ''தபுதாரம்'' என நிலைமாறி நின்றது; மூன்றில், கடைப்புறம் என்பனபோல அதனால் சொல்மாற்றி, ''தாரம்தபுநிலை—இல்லாளை யிழந்த நிலை'' எனப் பொருள் கொள்ளற்பாற்று. தபுதல்-கெடுதல்; அதாவது இழவு.

17. காதலனிழந்த தாபத நிலை—காதற் கணவனை யிழந்து தவிக்கும் மனைவிநிலை குறிக்கும் தாபதநிலைக் காஞ்சியும்;

> 1) ''அளிய தாமே சிறுவெள் ளாம்பல்,
> இளைய மாகத் தழையா யினவே;

இனியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப்
பொழுதுமறுத்
தின்னா வைக லுண்ணு
மல்லிப் படூஉம் புல்லா யினவே.''
(புறம்-248)

2) ''குய்குரன் மலிந்த கொழுந்துவை யடிசி
லிரவலர்த் தடுத்த வாயிற் புரவலர்
கண்ணீர்த் தடுத்த தண்ணறும் பந்தர்க்
கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி
யல்லி உணவின் மனைவியோ டினியே
புல்லென் றனையால், வளங்கெழு திருநகர்!
வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டு
முனித்தலைப் புதல்வர் தந்தை
தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே.''
(புறம்-250)

18. நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச் சொல்லிடை யிட்ட பாலைநிலையும்—மனைவி, இறந்த கணவனோடு ஈமமேறிப் பெருந்தீயிற் புகுவாள் இடைவிலக்குவார்க்குக் கூறும் பாலைக் காஞ்சியும்;

''பல்சான் றீரே! பல்சான் றீரே!
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே!
யணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
தடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பாற்பெய் பள்ளிப் பாயின்று வதியு
முயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீம
நுமக்கரி தாகுக தில்ல, வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பறு
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயுமோ ரற்றே.''

19. மாய்பெருஞ் சிறப்பிற் புதல்வற் பயந்த தாய்தப வரூஉந் தலைப்பெயனிலையும்—பெருஞ்சிறப்பொடு களத்துப்

பொருது மாய்ந்த மகனைப் படையழிந்து மாறினன் எனப் பிறர் பழிகூறக் கேட்ட தாய், அன்னவனை யீன்றமைக்கு நாணித் தன்னுயிர்விட முனைந்து களஞ்சேருந் தலைப்பெய னிலைக் காஞ்சியும்;

''நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோண்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்று பலர்கூற,
மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துளவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.''

(புறம்-278)

''கடல்கிளர்ந் தன்ன'' என்னும் ஔவையார் புறப்பாட்டும் இத்துறையேயாம்.

இனி, ''மாய்பெருஞ் சிறப்பிற் புதல்வன் பெயர'' எனப் பாடங்கொண்டு, ''சிறப்பழியப் புதலவன் புறக்கிட'' எனப் பொருள்கூறி, அதற்குத் தகடூர் யாத்திரைப் பாட்டின் பகுதியை எடுத்துக் காட்டுவர் நச்சினார்க்கினியர். அது, தாயின் மூதின் மறம் பேணினும், மகனைப் புறக்கொடைப்பழி பூண வைப்பதால் அப்பாடத்தினும் ''புதல்வற் பயந்த'' என்ற இளம்பூரணர் பழம் பாடமே பொருட் சிறப்புடைத்து.

20. மலர்தலை யுலகத்து மரபு நன்கறியப் பலர் செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு—விரிந்த இடத்தையுடைய உலகத்து இயல்முறை நன்றாய் உணருமாறு பல்லோரும் மாய்ந்தொழியத் தான் ஒழியாது நிற்கும் புறங்காட்டை வாழ்த்தும் காஞ்சியுடன்;

''..........................................................
நெஞ்சமர் காதலர் அழுத கண்ணீர்
என்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப
எல்லார் புறனும் தான்கண் டுலகத்து
மன்பதைக் கெல்லாம் தானாய்த்
தன்புறம் காண்போர்க் காண்பறி யாதே.''

(புறம்-356)

என்பது இத்துறை.

**நிறையருஞ் சிறப்பில் துறைஇரண் டுடைத்தே-நிரம்பிய அரிய சீருடைய காஞ்சித் துறைகள் இருவகைத்தாம்.**

குறிப்பு :- இதில் ஆன் எல்லாம் அசை. ஏகாரம் ஈற்றசை; இசை நிரப்பெனினும் அமையும்.

முதலில் ஒரு பத்தைக்கூறி, ''நிலையொடு தொகைஇ ஈரைந்தென்ப'' என எண் கொடுத்துப் பிரித்து நிறுத்திய துடன், 'என்ப' என முற்றுவினை பெய்து முடித்தலின் அது பிறர் கோள் கூறியதாகும். காஞ்சித்துறை அப்பத்தே என்பது அவர் காலத்து ஒரு சாரார் கொள்கையாதலின், அவற்றைத் தொகுத் துத் தனி எண் கொடுத்துப் பிரித்தார். அது தானுடன் படாப் பிறர் கோளெனற்கு 'என்ப' எனப் படர்க்கை வினைமுற்றுப் பெய்து, பின் தம் துணிபு விளக்கி மற்றொரு பத்தும் சேர்த்துக் காஞ்சித் துறை இருவகையாய் இருபதாமென முடித்தார். இனி முதற் பத்தை ஈரைந்தாகும் எனப் பிரித்து நிறுத்தியதால் பின்கூறிய பத்தையும் பத்தெனத் தொகுத்துச் சுட்டியேனும், அல்லது முன் பத்தோடு கூட்டி எண்ணித்துறை இருபதெனச் சுட்டியேனும், இறுதியில் மொத்தத் தொகை எண் கூறுதல் வேண்டும். ஈற்றடி ''துறை ஈரைந்தே'' என்றேனும் அன்றித் ''துறை இருவகைத்தே'' என்றேனும் முன் பாடம் இருந்து பின் அது சிதைந்து இருத்தல் கூடும் எனத் தோன்றுகிறது. இதில் பின் கூறிய துறை பத்தும் துன்ப நிலை குறிப்பதால் இவை விழும வகை யாதல் வெளிப்படை; அதனால் விழுப்ப வகையாக முற் கூறிய துறைவகை பத்தின் வேறாகும் பின்பத்தும் என்பது விளங்குகிறது. இத்தன்மை வேறுபாட்டால் இச்சூத்திரங் கூறும் காஞ்சித்துறை இருபதும் ஒரு படித்தாய் நிரல்பட எண்ணாமல் வகைக்குப் பத்தாய்ப் பிரித்துத் தொகுத்து இருவகைப்படுமெனத் தெரிக்கப்பட்டன.

(24)

**78. பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே**
**நாடுங் காலை நாலிரண் டுடைத்தே.**

(20)

ஆ. மொ. : இல.

**Padan**

**80. 'Padan' is the 'Puram' of 'Kaikkilai'**
**It is of eight aspects if we examine.**

பி. இ. நூ.

இல. வி. புற. 18

பாடாண் திணையே கைக்கிளைப் புறனே
பாடுதற்குரிய ஆடவன் தனாஅது
பாடாமை ஒழுக்கம் பாடுமந் நெறித்தே.

## இளம்பூரணர்

78. பாடாண் பகுதி.................டுடைத்தே.

இது, பாடாண்திணை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பாடாண் பகுதி கைக்கிளைப் புறன்-பாடாண் திணைப்பகுதி கைக்கிளை என்னும் அகத்திணைக்குப் புறனாம்; நாடும் காலை நால் இரண்டு உடைத்து-அஃது ஆராயுங் காலத்து எட்டுவகையினை உடைத்து.

அவையாவன :- கடவுள் வாழ்த்து வகை, வாழ்த்தியல் வகை, மங்கல வகை, செவியறிவுறுத்தல், ஆற்றுப்படை வகை, பரிசிற்றுறை வகை, கைக்கிளை வகை, வசை வகை என்பன: அவையாமாறு முன்னர்க் காட்டுதும்.

அதற்கு இது புறனாயவாறு என்னையெனின், கைக்கிளையா வது ஒரு நிலத்திற்கு உரித்தன்றி ஒருதலைக் காமமாகி வரு மன்றே; அதுபோல இதுவும் ஒருபாற்கு உரித்தன்றி ஒருவனை ஒருவன் யாதானும் ஓர் பயன் கருதிய வழி மொழிந்து நிற்பது ஆகலானும், கைக்கிளையாகிய காமப்பகுதிக்கண் மெய்ப்பெயர் பற்றிக் கூறுதலானும், கைக்கிளைபோலச் செந்திறத்தாற் கூறுத லானும் அதற்கு இது புறனாயிற்று. நோந்திறமாவது கழி பேரிரக்கம்; செந்திறமாவன அஃது அல்லாதன.

(20)

## நச்சினார்க்கினியர்

80. பாடாண் பகுதி...டுடைத்தே.

இது மேற் 'புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்' (56) என்புழிக் கிடக்கைமுறை கூறிய முறையான் இறுதிநின்ற பாடாண்டிணைக்குப் பொது விலக்கணம் உணர்த்துவான் அதற்குப் பெயர் இன்னதெனவும் அது கைக்கிளைப் புறனாமெண வும் அஃது இத்துணைப் பொருளுடைத்தெனவுங் கூறுகின்றது.

இதன் பொருள்:- பாடாண்பகுதி கைக்கிளைப் புறனே— பாடாணெனப்பட்ட புறத்திணையது கூறு கைக்கிளையென்று கூறப்பட்ட அகத்திணைக்குப் புறனாம்; நாடுங்காலை நாலிரண்டு உடைத்து—தன்னை நாடிச் சொல்லுவார் செய்யுளுண் முடிந்த பொருள் பாடாணாகவே நிறுப்ப நாடுங்காலத்து எண்வகைப் பொருளுடைத்து என்றவாறு.

பாடாணென்பது பாடுதல் வினையையும் பாடப்படும் ஆண் மகனையும் நோக்காது, அவனதொழுகலாறாகிய திணையுணர்த் தினமையின் வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஒரு தலைவன் பரவலும் புகழ்ச்சியும் வேண்ட ஒரு புலவன் வீடுபேறு முதலிய பரிசில் வேண்டலின் அவை[1] தம்மின் வேறாகிய[2] ஒருதலைக் காமமாகிய கைக்கிளையோடொத்தலிற் பாடாண்டிணை கைக்கிளைப் புறனாயிற்று. வெட்சி முதலிய திணைகளுஞ் சுட்டியொருவர்ப் பெயர் கொடுத்துங் கொடாதும் பாடப்படுதலிற் பாடாண்டிணையாயினும் ஒருவனை ஒன்று நச்சிக் கூறாமையின் அவர் பெறுபுகழ் பிறரை வேண்டிப் பெறுவதன்றித் தாமே தலைவராகப் பெறுதலின், அவை கைக்கிளைப் புறன் ஆகாமை உணர்க.[3] இவ்விரு கூறுந் தோன்றப் பகுதியென்றார். புகழை விரும்பிச் சென்றோர் வெட்சி முதலியவற்றைப் பாடின் அவை கைக்கிளைப் புறன் ஆகாதென உணர்க.

இதனானே புறத்திணை ஏழற்கும் பெயரும் முறையும் ஒரு வாற்றாற் கூறினாராயிற்று. நாலிரண்டாவன இப்பாடாண் டிணைக்கு ஓதுகின்ற பொருட் பகுதி பலவுங் கூட்டி ஒன்றும், இரு

---

1. அவை—இருவர் விருப்பம்.
2. தம்மின் வேறாகிய ஒருதலைக்காமம்—தலைவன் தலைவியருள் ஒருவர் மாட்டு நிகழும் வேறான ஒரு தலைக் காமம். பாடுவோன் விருப்பம் வேறு; பாடப் படுவோன் விருப்பம் வேறு. கைக்கிளையில் தலைவன் விருப்பம் தலைவிபால் உண்டு. தலைவிக்கு விருப்பம் என்பதில்லை. அதனால் பாடாணிலும் கைக்கிளையிலும் தனித்தனி மாறுபட்ட விருப்பம் இருத்தலின் கைக்கிளைக் குப் புறன் பாடாண் ஆயிற்று.
3. வெட்சி முதலிய திணைகளும் பாடாணுக்குரிய ஆயினும் திணைத்தலைவர் புகழ்ச்சியை விரும்புதல் இல்லாமல் புலவர் அவரைப் புகழ்தலின் அவை பாடாண் எனப் படலாமேயன்றிக் கைக்கிளைப் புறன் எனப்படா.

வகை வெட்சியும் பொதுவியலும் வஞ்சியும் உழிஞையுந் தும்பை யும் வாகையுங் காஞ்சியுமாகிய பொருள்கள் ஏழுமாகிய எட்டுமாம்.

இனி இக்கூறிய ஏழுதிணையும் பாடாண்டிணைப் பொருளா மாறு காட்டுங்கால் எல்லாத்திணையும் ஒத்ததாயினும் அவை பெரும்பான்மையுஞ் சிறுபான்மையுமாகி வருதலும் அவை இரண்டும் பலவும் ஒருங்கு வருதலும் பாடாண்டிணைக்கு மேற் கூறும் பொருளும் விராய் வருதலுமாமென்று உணர்க.

(உ-ம்) "முனைப்புலத்துக் கஃதுண்ட மூந்நிரைபோல் வேந்தூர்
முனைப்புலம்பு முன்னிரையும் வீசி—யெனைப்புலத்துச்
சென்றது நின்சீர்த்தி தேர்வளவ தெவ்வர்போ
னன்றுமுண் டாக நமக்கு."[4]

இது கூற்றுவகையானன்றிக் குறிப்பு வகையான் ஒன்று பயப் பானாக்கி நினைத்துரைத்தலின் வெட்சியும் வாகையும் வந்த பாடாண்டிணையாம்.

"அவலெறி யுலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வள்ளை கொய்யு
முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த
தடந்தா ணாரை யிரிய வயிரைக்
கொழுமீ னார்கைய மரந்தொறுங் குழாஅலின்
வெண்கை மகளிர் வெண்குரு கோப்பு
மழியா விழவி னிழியாத் திவவின்
வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ
மன்ற நண்ணி மறுகுசிறை பாடு
மகன்கண் வைப்பி னாடும னளிய
விரவுவேறு கூலமொடு குருதி வேட்ட
மயிர்புதை மாக்கண் கடிய கழற
வமர்கோ ணேரிகந் தாரெயில் கடக்கும்

---

4. தேர்வளவனே! ஊர் முன்னே புல் உண்ட மூன்று வகை யான ஆநிரை மகிழ்வதுபோல மகிழும்படி வேந்தர்தம் ஊர் முன்னே கவர்ந்து வந்த ஆநிரைகளைச் செலுத்தி இப்படி எவ்விடத்தும் நின்புகழ் சென்றது. நின்பகைவர் நின்னால் நலம் பெற்றது போல எமக்கும் நன்மை யுண்டாகுக—இன்னது வேண்டும் எனக் கூறாமையின் குறிப்பாயிற்று. ஆநிரை வீசி என்றதால் வெட்சியும் வெற்றி குறித்தலால் வாகையும் ஆயிற்று.

பெரும்பல் யானைக் குட்டுவன்
வரம்பி றானை பரவா வூங்கே.''[5]

(பதிற்று-29)

இதில் இமையவரம்பன் றம்பி பல்யானைச் செல்கெழு குட்டு வனைப் பாலைக் கௌதமனார் துறக்கம் வேண்டினாரென்பது குறிப்பு வகையாற் கொள்ள வைத்தலின் இது வஞ்சிப் பொருள் வந்த பாடாணாயிற்று.

'இலங்கு தொடி மருப்பின்' என்னும் பதிற்றுப்பத்து உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பாகிய உழிஞையாயினும் பதின்றுலாம் பொன் பரிசில் பெற்றமையிற் பாடாணாயிற்று.

''பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே
பணியா வுள்ளமொ டணிவரக் கெழீஇ
நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே
வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகல
மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே
நிலந்திறம் பெயருங் காலை யாயினுங்
கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே
சிறியிலை யுழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்துக்
குன்று நிலைதளர்க்கு முருமிற் சீறி
யொருமுற் றிருவ ரோட்டிய வொள்வாட்
செருமிகு தானை வெல்போ ரோயே
யாடுபெற் றழிந்த மள்ளர் மாறி

---

5. கூலங்களோடு குருதிப் பலியைக் கொண்ட முரசின் கண்கள் பகைவர் அஞ்ச முழங்க அமர் ஏற்றுப் பகைவர் மதிலை வென்று கடக்கும். பல்யானைச் செல்கெழு குட்டுவனின் அளவு கடந்த சேனைகள் பரந்து சென்று பாழ்படுத்துவதற்கு முன்னே, மகளிர் அவல் இடித்த உலக்கையை வாழை மரத்தில் சார்த்திவிட்டு வள்ளைப் பூக்கொய்யும்படி உள்ள நெல்வயலில் நாரைகள் ஓடும்படி அயிரைமீனையுண்ணும் பறவைகள் மரங்களில் கூடி யிருக்க அவற்றை வளையலணியாத கையுடைய சிறுமி கள் ஓட்டும்படியாக விழவு நீங்காததால் பாணர் யாழ் நரம்பில் பண் அமைத்துச் சென்று மன்றத்தையடைந்து ஊர்ப்பக்கங்களில் நின்று பாடும்படியான ஊர்களை யுடைய நாடாயிருந்தது. இன்று அது நீங்கியது.

நீகண் டனையே மென்றனர் நீயு
நுந்நுகங் கொண்டினும் வென்றோ யதனாற்
செல்வக் கோவே சேரலர் மருக
காறிரை யெடுத்த முழங்குகுரல் வேலி
நனந்தலை யுலகஞ் செய்தநன் றுண்டெனி
னடையடுப் பறியா வருவி யாம்ப
லாயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே.'[6]

(பதிற்று-63)

இது வாகைத்துறைப் பாடாண் பாட்டு.

இப் பதிற்றுப்பத்து நூறும் இவ்வாறே வருதலிற் பாடாண் டிணையேயாயிற்று. புறத்துள்ளும் இவ்வாறு வருவனவும் உணர்க

(25)

**சோம இளவரசு**

சூத்திரம் : 25

பாடாண் பகுதி......டுடைத்தே.

கருத்து :- இது பாடாண் திணைக்கூறுகள் அகத்தில்

---

6. செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியது. பார்ப்பாரை யன்றிப் பிறரைப் பணியமாட்டாய். நட்டோர்க்கன்றிப் பிறர்க்கு அஞ்சிக் கண்ணோடமாட்டாய்; நின் மார்பை நின் மனைவியர்க்கன்றி மலர்த்த மாட்டாய்; உலகமே மாறினும் சொன்ன சொல் தவற மாட்டாய்; உழிஞை மாலைசூடி. பகைப் புலத்துப் பொருள் மிகக் கிடைக்குமாறு சேனையைச் செலுத்தி ஒரே முறறுகையில் இருபெரு வேந்தரைப் புறங்கண்ட சேனையுடைய போர் வென்றியுடையவன் நீ; பிற வேந்தர் போரில் வெற்றி கொண்டும் நின்னிடத்துத் தோற்ற பகைவரின் வீரர் அவரைவிட்டு வந்து நீ விரும்பு வதையே யாமும் விரும்புவேமானேம் என்றார்கள்; மேலும் பல போர்களில் வெற்றி கொண்டாய் செல்வக் கடுங்கோவே! சேரலர் மருகனே! மேற்சொன்ன சிறப்பு களையுடைய காரணத்தினால் நீ உலக மக்கள் செய்த அறம் நிலை பெறுமாயின் நீ ஆம்பல் வெள்ளம் என்னும் எண் கடந்த காலமாக வாழ்வாயாக.

கைக்கிளைத் திணைக்குப் புறனாகும் எனவும், பாடாண் திணை எட்டு வகைப்படும் எனவும் கூறுகிறது.

பொருள் :- இதன் பொருள் வெளிப்படை.

குறிப்பு :- புறத்திணைகள் ஏழனுள் முன் ஆறும் கூறி முடிந்ததனாலும், எஞ்சிய பாடாண் ஒன்றே இதிற் கூறப்படுத லானும், பிறவற்றுள் ஒவ்வொன்றைப் பிரித்துக் கூறிய முன் சூத்திரங்களிற் போலத் ''தானே'' என்னும் பிரிநிலைச் சொற் குறிப்பு ஈண்டு வேண்டாதாயிற்று. புறனே... உடைத்தே என்ப வற்றின் ஏகாரம் அசை.

மற்றத்திணைகள் போலத் தனக்கொரு தனிநிலை பெறாமல் பிறதிணைகளை நிலைக்களனாகக் கொண்டு ஏற்றவிடத்தவை ஒவ்வொன்றின் பகுதியே பாடாணாய் அமையுமதனியல் கருதிப் ''பாடாண் பகுதி'' எனச் சுட்டப்பட்டது. வெட்சிப்பாடாண், வஞ்சிப்பாடாண், உழிஞைப்பாடாண், தும்பைப்பாடாண், வாகைப்பாடாண், காஞ்சிப்பாடாண், புரைதீர்காமம் புல்லிய பாடாண் என்றெழுவகையிற் பாடாண் பிறத்தலின், அவ்வத் திணைப்பகுதி நீக்கிப் புகழ்ச்சிக்குரிய ஒவ்வொரு பகுதியே பாடாணாமென்பது விளங்கப் பாடாண் என்னாமற் 'பாடாண் பகுதி' எனத் தெளிக்கப்பட்டது. பாடாண் வகை ஒவ்வொன்றி னும் அத்திணைப்பகுதி பிரித்துப் பாடாண் பகுதியை ஆய்ந்தறிய வேண்டுதலின் ''நாடுங்காலை'' எனக் கூறிய குறிப்பும் தேர்தற் குரியது. நாலிரண் டெனக் குறிக்கப்பட்டவை, பாடாண்திணை வகைகள். அவற்றின் விளக்கம் பின் ''கொடுப்போ ரேத்தி'' எனும் சூத்திரத்தில் கூறுகிறார்; அதையடுத்துத் ''தாவி னல்லிசை' எனுஞ் சூத்திரத்தால் பாடாணின் துறைகளை விளக்குகிறார்; முன், உழிஞைக்கு முதலில் அதன் வகை கூறிய பிறகு அதன் துறைகளை விளக்கியது போலப் பாடாண் துறைகள் பின் எட்டிறந்தன கூறுதலானும், அவற்றை இதில் எட்டெனச் சுட்டுத லமையா தாகலானும், இத்திணை வகை எட்டே பின் விரிப்பதானும், இதில் எட்டு எனுமெண் துறைத்தொகையென நச்சினார்க்கினியர் கொண்டது பொருந்தாதென்க. இனிப் புறத் திணை ஆறும், அன்பினைந்திணை... கைக்கிளை யாம் அகத் திணைகள் இரண்டுமாகப் பாடாண் பிறக்கும் வகை எட்டெனினு மமையும்.

இனி, கைக்கிளையிற் காதற்சிறப்பு ஒருவர்க்கேயாவது போலப் பாடாண் சிறப்பும் பொதுமையின்றித் தகவுடையார் ஒரு வருக்கே உரித்தாக வருதலானும், கைக்கிளையில் காதற் கூற்றுப்

பாராட்டுந் தலைவன் மாட்டாவது போற் பாடாண் கூற்றும் புகழ் வோர்தம் பக்கலிலே யமைதலானும், இரண்டினுக்கும் நிலம் பொழுது வரையறை இன்மையானும், கைக்கிளையி லிழுக்கு நீக்கித் ''தருக்கியவே'' சொல்லி யின்புறுதல் போலப் பாடாணில் பழிதழுவாப் புகழ்மை யொன்றே பயில்வதானும் இருதிணையுமொரு தலையாச் செந்திறமா யமைதலானும், பாடாண் கைக்கிளைக்குப் புறனாயிற்று.

(25)

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் பாடாண்திணை கைக்கிளைத்திணைப் புறன் என்பதும் அதன் வகையும் கூறுகின்றது.

(இ-ள்) பாடாண் திணையானது கைக்கிளைத் திணைப் புறனாம். அது ஆயும் காலத்து எட்டு வகையினையுடையதாகும் என்றவாறு.

வெட்சி முதல் வாகையீறாகவுள்ள திணைகள் போர் தொடுப் போரும் எதிர்ப்போருமாகிய இருவர்க்கும் உரியனவாதலும் காஞ்சி யாவர்க்கும் உரியதாதலும் போல் இன்றிப் பாடாண் திணை பாடப்படுபவர் பாடுபவர் எனும் இருவருள் பாடுவோர் விருப்பு ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிருத்தலின் வெட்சி தானே, காஞ்சி தானே எனக் கூறாமல் பாடாண் பகுதி எனக் கூறினார், பாடுவார் அளவில் நிற்றலால் இக்கருத்தானே அடுத்த சூத்திரத்தில் பாடாணை ஒன்றன் பகுதி என்றதும் காண்க.

கைக்கிளை காதலர் இருவருள் ஒருவரிடம் நிகழும் விருப்பம் போலப் பாடப்படுவோர் பாடுவோர் எனும் இருவருள் பாடுவோ ரிடமே விருப்பு நிகழ்தலின் கைக்கிளைப் புறன் பாடாண் ஆயிற்று. இதுவும் உரிப் பொருளாற் புறனாயிற்று.

பாடாண் நாலிரண்டாவன கடவுள் வாழ்த்து வகை, வாழ்த்தியல் வகை, மங்கலவகை, செவியறுவுறுத்தல், ஆற்றுப் படைவகை, பரிசிற்றுறை, கைக்கிளைவகை, வசைவகை என்பன என்பர் இளம்பூரணர். கொடுப்போர் ஏத்திக் கொடார்ப்பழித்தல் என்பதில் உள்ள பழித்தலை வசைவகை எனக் கொள்ளின் கொடுப்போர் ஏத்துதலைப் புகழ்ச்சிவகை எனல் வேண்டும். அதை விடுத்தமையானும், துயிலெடைநிலை, நிமித்தம், ஓம்படை என்பன இவற்றுள் அடங்காமையானும் அவர் கூற்று ஆய்தற்குரியதாகும்.

நச்சினார்க்கினியர், நாலிரண்டாவன இப்பாடாண்திணைக்கு ஓதுகின்ற பொருட்பகுதி பலவும் கூட்டி ஒன்றும், இருவகை வெட்சியும் பொதுவியலும் வஞ்சியும் உழிஞையும் தும்பையும் வாகையும் காஞ்சியுமாகிய பொருள்கள் ஏழும் ஆகிய எட்டுமாம் என்பர். பொதுவியல் என்பது அவர் கருத்துப்படி எல்லாத் திணை களுக்கும் பொதுவான துறைகளைக் கூறுவதாதலின் பொதுவியற் பாடாண் என ஒன்று இன்றி வெட்சிப்பாடாண் முதலியவற்றி லேயே அடங்கும் ஆதலின் அவர் கருத்தும் ஆய்வுக்குரியதாம்.

பாரதியார் கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல் முதல் விளக்குநிலை வரையுள்ள ஏழும் வாயுறை வாழ்த்து முதல் கைக்கிளை வரையுள்ள நான்கு சேர்த்து ஒன்றும் ஆக எட்டு என்பர். அவர் கொடுப்போர் ஏத்திக் கொடார் பழித்தல் என்பதை ஏத்தலும் பழித்தலும் என இரண்டாக்குவர். இயன்மொழி வாழ்த்து என்பதை இயன்மொழியும் வாழ்த்தும் என இரண்டாகக் கொள்ளவில்லை. வாயுறை வாழ்த்து முதலிய நான்கும் தனித் தனிச் சிறப்புடைய துறைகளாக விளங்க அவற்றை ஒன்று எனக் கோடலும் பொருந்தாது.

வெள்ளைவாரணனார் நாலிரண்டாவன அடுத்து வரும் இரண்டு நூற்பாக்களில் (20, 21) விரித்துரைக்கப்பட்டமை காணலாம் என்பர். அமரர் கண் முடியும் அறுவகைகளும் புரைதீர் காமம் புல்லிய வகையொன்றும், செந்துறை வண்ணப்பகுதி யொன்றும் ஆக எட்டு என்பர். அமரராவார் வீரர்; அவர் கண் முடியும் அறுவகைகளாவன வெட்சி முதலிய திணைகளிற் கூறப் படும் வீரர் இடமாகப் பாடப்படும் பாடாண்கள் என்பர் அவர். பின்வரும் இரண்டு சூத்திரங்களிலும் நாலிரண்டாவன இவை எனக் கொள்ளுதற்குரிய குறிப்பு ஏதும் இல்லை. அன்றியும் இரண்டு சூத்திரங்களிலும் கூறப்பட்டன அமரர்கண் முடியும் அறுவகை, புரைதீர் காமம் புல்லிய வகை, பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கு, முன்னோர் கூறிய குறிப்பு என நான்காம். அந்நான்கில் அமரர் கண் முடியும் அறுவகையையும் ஆறு எனக் கொள்ளின் மற்றைய மூன்றும் சேர்க்க ஒன்பதாகும். பரவலும் புகழ்ச்சியும் குறிப்பும் ஆகியவை செந்துறை வண்ணப் பகுதி என ஒன்றாய் அடங்கும் எனின் அமரர் கண் முடியும் அறுவகையும் ஒன்றாய் அடங்கும் எனின் தவறாமோ?

நாலிரண்டாவன இன்னத் எனத் தெளிவு பெறாத நிலையில் ஒருவாறு பின்வருவனவற்றைக் கொள்ளலாம்.

1. அமரர் கண்முடியும் அறுவகை.

2. புரைதீர் காமம் புல்லிய வகை.

3. பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கும் முன்னோர் கூறிய குறிப்பும் கூறும் செந்துறை வண்ணப் பகுதி.

4. கடவுள் மாட்டுக் கடவுட் பெண்டிர் நயத்தல்.

5. கடவுள் மாட்டு மானிடப் பெண்டிரும் மானிடப் பெண்டிர் மாட்டுக் கடவுளரும் நயத்தல்.

6. குழவி மருங்கின் காமப்பகுதி

7. ஊரொடு தோற்றம்.

8. கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருவன.

பாடாணின் விரியாகக் கூறப்படும் சூத்திரங்களுக்கு முன்னர் இவை கூறப்படுதலினாலும் அவ்விரித்துறைகளை இவற்றுள் அடக்கலாம் ஆதலினாலும் மேற்கூறிய எட்டுமே நாலிரண்டாவன என்னலாம்.

**79. அமரர்கண் முடியும் அறுவகை யானும்**
**புரைதீர் காமம் புல்லிய வகையினும்**
**ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப.**

(21)

ஆ. மொ.: இல.

80 **Six kinds which deal about celestial beings and the theme which deal with the faultless love form one aspect — so say the learned.**

பி. இ. நூ.

பு. வெ. மா 9.

அமரர்கண் முடியும் அறுவகை.

### இளம்பூரணர்

79. அமரர்கண் முடியும்.........ஒன்றும் என்ப.

இது, பாடாண் பாட்டிற்கு உரியதோர் பொருண்மை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அமரர்கண் முடியும் அறுவகையானும்—அமரர்கண் முடியும் கொடிநிலை கந்தழி வள்ளி புலவராற்றுப் படை புகழ்தல் பரவல் என்பனவற்றினும்.

புரைதீர் காமம் புல்லிய வகையினும்—குற்றந் தீர்ந்த காமத்தைப் பொருந்திய வகையினும்.

அஃதாவது, ஐந்திணை தழுவிய அகம்.

ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப—அவையிற்றின் ஒரு கூற்றின் பாகுபாடு பாடாண்திணை யாதற்குப் பொருந்தும் என்பர் புலவர்.

அஃதாவது, கொடிநிலை முதலிய ஆறும் கடவுட் புகழ்ச்சியன்றிப் பாட்டுடைத் தலைவனைச் சார்த்தி வருதல். காமப்பகுதியிற் பாடும் பாட்டுடைத் தலைவனைச் சார்த்தி வருதல் என்ற இவ் விருவகையானும் ஒருவனைப் புகழ்தலாற் பாடாண்பாட்டு ஆயிற்று[1]

இன்னும் 'புரைதீர் காமம் புல்லிய வகையினும் ஒன்றன் பகுதி' என்ற அதனான், ஐவகைப் பொருளினும் ஊடற் பொருண்மை பாடாண்பகுதிக்கு ஒன்றும்[2] என்றவாறாம். இன்னும் இதனானே இயற்பெயர் சார்த்தி வாராது நாடும் ஊரும் இதுவென விளங்கவரும் ஊரன் சேர்ப்பன் என்னும் பெயரினான் ஒரு கூறு குறிப்புப்பற்றி வரும் பகுதியும் பாடாண் பாட்டாம் என்று கொள்க.[3]

(21)

---

1. கொடிநிலை முதலிய ஆறும் அவற்றின் தன்மை மட்டும் பாடப்படுமாயின் அவை கடவுள் வாழ்த்தோடு சேர்ந்து விடும். அவை பாட்டுடைத் தலைவனைச் சார்த்தி வருமாயின் பாடாண் ஆகும். கொடியின் இயல்பும் பாட்டுடைத் தலைவன் சிறப்புமாகிய இரண்டும் கூறும் பாடல் பாட்டுடைத் தலைவன் பக்கமாகிய ஒன்றன் பகுதியால் அப்பாடல் பாடாண் ஆம் என்க. இப்படியே பிறவும். கோவை நூல்களில் அகன் ஐந்திணைப் பகுதியும் பாட்டுடைத் தலைவன் சிறப்பும் கூறப்படுதலின் அந்நூற் பாடல்களில் பாட்டுடைத் தலைவன் சிறப்பாகிய ஒன்றன் பகுதியால் அப்பாடல்கள் பாடாண் ஆகும். (அவையே அகத்திணை காரணமாக அகன் ஐந்திணையும் ஆம்.)

2. ஒன்றும்—மிகப் பொருந்தும். இதற்குக் கண்ணகியைப் பிரிந்த பேகனிடம் அரிசில்கிழார் முதலிய புலவர் பாடிய புறப்பாடல்களைக் கொள்ளலாம்.

3. அகப் பாடலாயினும் இயற்பெயரைச் சார்த்திவரின் புறப்பாடலாய்ப் பாடாண் ஆதலேயன்றி இயற்பெயரைச் சார்த்தி வாராமல் பாடப்படுவோனின் ஊரும் நாடும் விளங்கப் பாடின் அவன் யாவன் என வெளிப்படுதலின் அவையும் பாடாண் ஆம்.

## நச்சினார்க்கினியர்

**31.** அமரர் கண்........மென்ப.

இது முன்னர் எட்டெனப் பகுத்த பாடாண்டிணையுள் ஏழொழித்துத் தன் பொருட் பகுதிகள் எல்லாங் கூடி ஒன்றாமென்று பாடாண்டிணை தேவரும் மக்களுமென இருதிறத்தார்க்கே உரிய என்பார் அவ்விரண்டினுள் தேவர்பகுதி இவையென்ப துணர்த்துகின்றது.

இதன்பொருள் :- அமரர் கண் முடியும் அறுவகையானும்—பிறப்பு வகையானன்றிச் சிறப்பு வகையால் தேவர்கண்ணே வந்து முடிதலுடையவாகிய அறுமுறை வாழ்த்தின் கண்ணும், புரைதீர் காமம் புல்லிய வகையினும்—அத்தேவரிடத்தே உயர்ச்சி நீங்கிய பொருள்களை வேண்டுங் குறிப்புப் பொருந்தின பகுதிக் கண்ணும், ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப—மேற் பாடாண் பகுதியெனப் பகுத்து வாங்கிக் கொண்ட ஒன்றனுள் தேவரும் மக்களுமெனப் பகுத்த இரண்டனுள் தேவர்க்கு உரித்தாம் பகுதியெல்லாந் தொக்கு ஒருங்குவருமென்று கூறுவார் ஆசிரியர் என்றவாறு.

அமரர் கண்ணே வந்து முடியுமெனவே அமரர் வேறென்பதூஉம் அவர் கண்ணே வந்து முடிவன வேறென்பதூஉம் பெற்றாம். அவை முனிவரும் பார்ப்பாரும் ஆனிரையும் மழையும் முடியுடை வேந்தரும் உலகுமாம். இவை தத்தஞ் சிறப்பு வகையான் அமரர் சாதிப் பாலவென்றால் வேதமுடிவு. இதனானே பிறப்பு முறையாற் சிறந்த அமரரை வாழ்த்தலுஞ் செல்லாமையே முடிந்தது தந்திரவுத்தி வகையான். வகையென்றதனானே அமரரை வேறுவேறு பெயர் கொடுத்து வாழ்த்தலும் ஏனைப் பொதுவகையாற் கூறி வாழ்த்தினன்றிப் பகுத்துக் கூறப்படாமையும்[1] கொள்க. புரை உயர்ச்சியாதலின் உயர்ச்சியில்லாத காமமாவது மறுமைப்பயன் பெறுங் கடவுள் வாழ்த்துப்போல் உயர்ச்சியின்றி இம்மையிற்பெறும் பயனாதலின் இழிந்த பொருள்களிற் செல்லும் வேட்கைக் குறிப்பு. புல்லிய வகையாவது அம் மனக் குறிப்புத் தேவர் கண்ணே பொருந்திய கூறாது தன்பொருட்டானும் பிறன் பொருட்டானும் ஆக்கத்துமேல் ஒருவன் காமுற்ற

---

1. பொது வகையாற் கூறுதல்—அமரர்க்கும் முனிவர் முதலியவற்றுக்கும் பொதுத்தன்மை வகை. பகுத்துக் கூறுதல்— வேறுபடுத்திக் காட்டிக் கூறுதல்.

வழி அவை அவற்குப் பயன் கொடுத்தலாம். இது ஒன்றனுடைய பகுதியென்க. இத்துணைப் பகுதியென்று இரண்டிறந்தன எனக் கூறாது வாளாதே பகுதியென்றமையில் தேவரும் மக்களுமென இரண்டேயாயிற்று. அத்தேவருட் பெண்டெய்வங் 'கொடிநிலை கந்தழி' (88) என்புழி அடங்கும். மக்களுட் பெண்பால் பாடுதல் சிறப்பின்மையிற் 'செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ' (புறம்-3) என்றாற்போலச் சிறுபான்மை ஆண்மக்களோடு படுத்துப் பாடுப. 'வகை' யென்றதனான் வாழ்த்தின் கண் மக்கட்பொருளும் உடன் றழுவினும் அவை கடவுள் வாழ்த்தாமென்று கொள்க.

(உ-ம்) ''எரியெள் ளுவன்ன நிறத்தன் விரியிணர்க்
கொன்றையம் பைந்தா ரகலத்தன் பொன்றா
ரெயிலெரி யூட்டிய வில்லன் பயிலிருட்
காடமர்ந் தாடிய வாடல னீடிப்
புறம்புதை தாழ்ந்த சடையன் குறங்கறைந்து
வெண்மணி யார்க்கும் விழவின னுண்ணூற்
சிரந்தை யிரட்டும் விரலனிரண் டுருவா
யீரணி பெற்றவெழிற் றகைய னேரு
மிளம்பிறை சேர்ந்த நுதலன் களங்கனி
மாறேர்க்கும் பண்பின் மறுமிடற்றன் றேறிய
சூலம் பிடித்த சுடர்ப்படைக்
காலக் கடவுட் குயர்கமா வலனே.''[2]

(பதிற்று.)

இது கடவுள் வாழ்த்து.

தொகைகளிலுங் கீழ்க்கணக்கிலும் உள்ள கடவுள் வாழ்த்தெல்லாம் இதன்கண் அடக்குக.

இனி அறுமுறை வாழ்த்தும் வருமாறு :-

''நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.''

(குறள்-நீத்-8)

---

2. நெருப்புப் போலும் நிறத்தன்; கொன்றைத்தார் மார்பன்; முப்புரத்தை எரியூட்டியவன்; சுடுகாட்டில் ஆடியவன்; நீள் சடையன்; வெள்ளியமணி துடைகளின் பக்கமிருந்து ஒலிக்கும் படியான விழாவுடையவன்; துடியை ஒலிக்கும் விரலன்; இரண்டு உருவாய் அழகு பெற்றவன்; பிறைசேர்ந்த நுதலன்; களங் கனிபோலும் மிடற்றன்; சூலம்பிடித்த கடவுள். அத்தகையவனின் வெற்றி உலகில் உயர்க.

''கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை.''

(குறள்-வான்-5)

''நாகின நந்தி யினம்பொலியும் போத்தென
வாய்வா ளுழவர் வளஞ்சிறப்ப வாயர்
அகன்றார் சுரைய கறந்தபால் சீர்சிறந்த
வான்பொருள் வட்டத் தயிராகு மத்தயிர்
மெல்லக் கடைவிடத்து நெய்தோன்று நெய்பயந்து
நல்லமு தன்ன வளையாகு நல்ல
புனிதமு மெச்சிலு நீக்கித் துனியின்றி
யன்ன பெரும்பயத்த வாகலாற் றொன்மரபிற்
காரார் புறவிற் கலித்த புதர்மாந்தி
யாவா ழியரோ நெடிது.''[3]

ஏனைய வந்துழிக் காண்க.

''புயல்சூடி நிவந்த பொற்கோட் டிமயத்து
வியலறைத் தவிசின் வேங்கை வீற்றிருந்தாங்
கரிமான் பீடத் தாசுதொழ விருந்து
பெருநிலச் செல்வியொடு திருவீழ் மார்பம்
புதல்வருந் தாமு மிகலின்று பெறூஉந்
துகளில் கற்பின் மகளிரொடு விளங்கி
முழுமதிக் குடையி னமுதுபொதி நீழ
லெழுபொழில் வளர்க்கும் புகழ்சாய் வளவன்
பிறந்தது பார்த்துப் பிறர்வாய் பரவநின்
னறங்கெழு சேவடி காப்ப வுறந்தையோ
டூழி யூழி வாழி
யாழி மானில மாழியிற் புரந்தே.''[4]

---

3. இளங்கன்றுகள் பெருகிப் பசுக்கூட்டத்திடையே விளங்கும் பகடு போல வாளுழவராகிய வீரர் நன்மை பெருகுமாறு, ஆயர் மடிச்சுரையில் கறந்த பால் தயிராகும். அத்தயிரைக் கடைய நெய் தோன்றும்; அந்நெய்யைக் கலந்து நல்ல அமுது உண்ணும் சோறாகும். இப்படியாகப் பெரிய பயனுடையன ஆநிரைகள் ஆதலால் அவை காடுகளிற்றழைத்த புதர்களை நிறைய வுண்டு நெடிது வாழ்வனவாக.

4. யார் யாரைப் பாடியது என்பது தெரியவில்லை. இமய மலைப் பாறைத் தவிசில் வேங்கை வீற்றிருந்ததுபோல

இது கடவுள் வாழ்த்தி ஒழியாது தனக்குப் பயன்படுவோன் ஒருவனையுங் கூட்டி வாழ்த்தலின் புரைதீர் காமம் புல்லிய வகையாயிற்று.

(26)

## சோம இளவரசு

சூத்திரம் : 26

அமரர்கண் முடியு.........மென்ப.

கருத்து :- இது, பாடாண் திணை இயல் விளக்குகிறது.

பொருள் :- அமரர்கண் முடியும் அறுவகையானும் போர் மறவர் (அஃதாவது பொருநர்)பாற் சென்றமைவனவாக முன் இவ்வியலில் விரித்து விளக்கிய வெட்சி முதல் காஞ்சியீறான புறத் திணை வகையாறினும் (புரை தீர்காமம் புல்லிய வகையினும்) குற்றமற்ற அகப் பகுதியில் அன்பளைந்த காதல் திணைவகை யினும்; ஒன்றன் பகுதி ஒன்றும் என்பட அவ்வெழுவகைத் திணை களுள் இயல்பாக இதற்கேற்புடைய ஒவ்வொன்றின் கூறே பாடாணாய் அமையும் என்று கூறுவர் புறநூற் புலவர்.

குறிப்பு :- தனிநிலை பெறாமல், பிறதிணைகளை நிலைக் களனாகக்கொண்டு, அவ்வவற்றில் புகழ்மைக்கேற்ற பகுதியே பாடாணா யியையுமென்பதை மேற்சூத்திரத்தில் ''பாடாண் பகுதி'' எனச்சுட்டி, இதில் அதன் தன்மை தெளிய விளக்கப் பட்டது. மேற்கூறி முடித்த ஆறு புறத்திணைப் பகுதிகளிலும், அகத்திணை வகைகளுள் புகழ்மையொடு பொருந்தாப் பெருந் திணை போன்ற பழிபடும் இழி காமவகை விலக்கித் தூய காதற்

---

அரியாசனத்து பிற அரசு தொழ வீற்றிருந்து நிலமகளும் திருமகளும் விரும்பும் நின்மார்பைத் தம் புதல்வரும் தாமும் இனிதாகப் பெறும் கற்புடை மகளிரொடு விளங்கி யிருந்து குடைநிழலில் ஏழுலகும் வளர்க்கக்கூடிய புதல்வன் பிறந்தானாகப் பார்த்துப் பிறர் தம் வாயால் பரவ நின் சேவடி காப்ப நின் உறையூரொடு ஊழிக் காலம் சக்கரத்தையுடைய திருமால் உலகைப் புரத்தல் போல நீயும் உலகம் புரந்து வாழ்வாயாக.

இப்பாடலில் ஆழிமால் போல நிலம் புரந்து என்பது மட்டில் கடவுள் வாழ்த்தாம். மற்றையன பரிசிலன்தான் விரும்பியவனை வாழ்த்தியது.

பகுதிகளிலும், புகழ்மை பாராட்டுதற்கேற்ற கூறு பாடாண் எனப் பெறும் (பாடாண்—பெருமை, அஃதாவது பீடு). அவ்வத்திணைப் பொருளின்மேல் அதிற் சிறந்த ஒருவரின் புகழ்பாராட்டும் பகுதி யளவே பாடாணாகும். சிறப்பெதுவும் புகழ்க்குரிய யாதாமோ ரொழுக்கம் பற்றியன்றி யமையாதாகலின், அச்சிறப்பின் புகழாம் பாடாணும் அவ்வத் திணைப் புறத்துப் பிறத்தலே இயல்பாகும். ஆதலின், பாடாண் பிற திணைகளின் சார்பாய்ப் புகழ்மைப் பொருட்டாயமைதல் வெளிப்படை. இனி, அகப்புறத் திணை களனைத்தும் மக்கள் ஒழுக்கம் பற்றியவையாதலின் பாடாணும் மக்கட்குரியதேயாதல் வேண்டுமாதலானும், பண்டைச் சான்றோர் பாடாண் பாட்டுக்களெல்லாம் மக்களில் தக்கார் மாண்புகழாகவே வருதலானும், சூத்திரவைப்பு முறையில் தொல்காப்பியரின் மாறாத நியமப்படி இது பாடாணியல் விளக்கம் கூறவேண்டும் சூத்திரமாதலானும், சூத்திரச் சொற்போக்கால் தொல்காப்பியர் கருத்தறிதல் உரையறமாதலானும், சூத்திரச் செம்பொருளிது வாதல் ஒருதலை.

இனி, இச் சூத்திரச் சொற்பொருளை வைப்புமுறையில் இடத்திற்கியையக் கொள்ளாமல் முன்னுரைகாரர் முரண்படத் தத்தம் விருப்பின்படி வெவ்வேறாய்க் கூறுவர். அவருரை நெடு வழக்கால் புலவரை மருட்டுதலால், மெய்ப் பொருளறிய அவருரைப் பெற்றி யாராய்தலும் பொருத்தமாகும்.

இதற்கு இளம்பூரணர் உரையாவது:-

''அமரர்கண் முடியும் கொடிநிலை கந்தழி வள்ளி புலவராற்றுப்படை புகழ்தல் பரவல் என்பனவற்றினும், குற்றந் தீர்ந்த (ஐந்திணை தழுவிய அகமான) காமத்தைப் பொருந்திய வகையினும், அவற்றின் ஒரு கூற்றின் பாகுபாடு பாடாண்டிணை யாதற்குப் பொருந்தும்'' என்பதே.

''கொடிநிலை முதலிய ஆறும், கடவுட் புகழ்ச்சியன்றிப் பாட்டுடைத் தலைவனைச் சார்த்தி வருதல், காமப்பகுதியிற் பாடும் பாட்டுடைத்தலைவனைச் சார்த்தி வருதல் என்ற இவ் விருவகையானும் ஒருவனைப் புகழ்தலால் பாடாண் பாட்டா யிற்று'' என்பது இச்சூத்திரத்தின்கீழ் இளம்பூரணர் தரும் சிறப்புரையாகும்.

இனி, இதற்கு உரைகாணும் நச்சினார்க்கினியர் கூறுவது:- முதற்கண், ''பாடாண்திணை தேவரும் மக்களும் என இருதிறத் தார்க்கே உரிய என்பார். இவ்விரண்டனுள் தேவர் பகுதி இவை

யென்பதுணர்த்துகிறது (இச் சூத்திரம்)'' என்று இச்சூத்திரக் கருத்தை வரைந்து கொள்ளுகின்றனர். பின்னர்த் தாம் வரைந்து கொண்ட கருத்துடன் பொருந்த, ''பிறப்பு வகையானன்றிச் சிறப்பு வகையால் தேவர்கண்ணே வந்து முடியும் அறுமுறை வாழ்த்தின் கண்ணும், அத்தேவரிடத்தே உயர்ச்சி நீங்கிய பொருளை வேண்டுங் குறிப்புப் பொருந்தின பகுதிக்கண்ணும், மேல் பாடாண் பகுதியெனப் பகுத்து வாங்கிக் கொண்ட ஒன்றனுள்—தேவரும் மக்களும் எனப்பகுத்த இரண்டனுள்—தேவர்க்குரித்தாம் பகுதியெல்லாந் தொக்கு ஒருங்குவரும் என்று கூறுவார் ஆசிரியர்'' என்றவர் கூறினார். இதன் பிறகு தாம் கூறும் புதுப் பொருளைப் பொருத்திக் காட்டவேண்டி விரிவுரையிற் பல வருவித்துக் கூறுவர். அவையிற்றுள் இங்குச் சில கூறுதும்.

அமரரான தேவர் பரவப்படுதலேயன்றி, ''முனிவரும் பார்ப்பாரும் ஆனிரையும் மழையும் முடியுடை வேந்தரும் உலகு'' மாக ஆறும் பரவப்படுங்கால் அப்பராவு தேவர் கண்ணே வந்து முடியுமென்பர். அன்றியும் பராவப்பெறுந் தேவரல்லா இவ்வாறும் ''சிறப்பு வகையால் அமரர் சாதிப்பால என்றல் வேத முடிவு'' என ஓரமைதி காட்டுவர். இனி, ''புரைதீர் காமம் புல்லியவகை'' என்பதில் புரையைக் குற்றமென்னாது அதற்கு மாறாய உயர்ச்சி யெனக் கொண்டு, உயர்ந்த மறுமைப்பயனாம் வீடுபேறு வேண்டாமல் இழிந்த இம்மைப் பயன்களை விரும்பித் தேவர்ப் பராவுதலை ஆசிரியர் ''புரைதீர் காமம் புல்லிய''தாகக் கூறினா ரெனக் கொள்ள வைக்கின்றார். ''ஒன்றன் பகுதி ஒன்றும்'' என்றற்கு ''உரித்தாம் பகுதியெல்லாம் தொக்கு ஒருங்குவரும்'' என்றுரை கூறுவர். இச்சூத்திரத்துக்கு நச்சினார்க்கினியர் கண்ட இப்பொருள் இளம்பூரணர் உரையோடு மாறுபடுவதுடன், தொல்காப்பியர் கருத்து ஆகாமையும் சிறிது சிந்திக்கத் தெளி வாகும்.

1 முதலில், தாம் கருதிய ''ஆறுவகை''யினை இந்நூலார் யாண்டு எவ்வாறு சுட்டினாரென்பதை இரண்டு உரைகாரருமே விளக்கினாரிலர். தாம் கூறக்கருதிய தொகைப்பொருள் இவை யெனத் தாமே வகை சுட்டி விளக்காமல், உரைப்பார் உரைக்கும் வகையெல்லாம் சென்று அமையச் சூத்திரிப்பது இலக்கணநூல் நோக்குக்கும் தொல்காப்பியர் சொற்போக்குக்கும் பொருந்துவ தன்று. இந்நூலார் தாமே வரையறை செய்திலரெனில், அஃது அவர் நூலைக் கற்பவரை மயங்க வைக்கவும் மாறுகூறவும் இடந்தரும் இழுக்காய் முடியும். அவர் கூறும் அறுவகையினை அவர் நூலிலிருந்தே கண்டு தெளியாமையானே, உரைகாரர்

பலரும் பலவாறு தத்தம் மனம் போனவாறெல்லாம் மயங்கி மாறுபடக் கூறற்கிடனாயிற்று. இதனாலன்றே நச்சினார்க்கினியர் ஈங்கு அறுவகையினைப் பரவும் வகையாக்காமல் பரவப்படும் செயற்கைக் கடவுட் போலிகளாம் தேவர்—பார்ப்பார்—பசு—மழை—மன்னர்—உலகு என்றெண்ணினார். இதற்குமாறாக இளம்பூரணர் ஈண்டு அறுவகையை வணங்கப் பெறும் பொருள்களாக்காமல் வணக்க வகைகள் ஆறெனக் கொண்டு, ''கொடிநிலை கந்தழிவள்ளி புலவராற்றுப்படை புகழ்தல் பரவல்'' என்று கூறுவர். கற்றுவல்ல இருபேருரைகாரர் இதற்கு இவ்வாறு வெவ்வேறு பொருள் தம்முள்முரணிக் கூறுவரேல், மற்றையோர் உண்மை துணிவதெப்படிக் கூடும்? இவ்வாறு பலரும் பலவாறு கூற இடம் வைத்துத் தெளிவின்றி மயங்குமாறு தொல்காப்பியர் சூத்திரியாரென்பது ஒருதலை. அவர் தேர்ந்து தெரிக்க நுதலிய பொருளை நுவலும் இச்சூத்திரத்து அறுவகைகளை அவர் நூலிற் கண்டு தெளிவதே கற்பவர் கடனாகும்.

2. இனி நச்சினார்க்கினியர் உரையில், நேரே பராவப்படும் பிறப்பு வகையால் இயற்கைத் தேவராவார் வேறு; தேவராய்ப் பிறவாவிடினும் வைதிகர்வாய்ச் சிறப்பு வகையால் தாம் பெறும் வணக்கத்தை மெய்த்தேவர்பால் உய்க்கும் பொய்த்தெய்வப் போலிகள் வேறு ஆறு எனக் கூறப்படுகிறது. எனவே, இவ்வுரை அசலும் படியுமான தெய்வப் பகுதிகளிற் சென்று சேரும் வணக்க வகையெல்லாம் ஒருங்கு தொகுத்து இச்சூத்திரங் கூறவேண்டுவது ஏழு வகையாகவும், இந்நூலார் சூத்திரத்தில் அறுவகையென மறந்து கூறினரெனத் தொல்காப்பிரைப் பழித்ததாகும்.

3. இன்னும், இயற்கை வகைப் பிறவித்தேவரன்றியும், பராவு வெறியான் மக்கள் தாமே ''விகார வகையான்'' அமராக்கிச் செய்யும் வாழ்த்துப் பெறுஞ் செயற்கைப் பொய்த்தேவப் போலிகள் நச்சினார்க்கினியர் கூறுமாறு ஆறே எண்ணில் அமைவனவன்றே. புள், விலங்கு, ஊர்வன, யாறு, மலை, மரம், செடி, கொடியாகிய பொருள்களில் வாழ்த்துக் கடியப்படுவதொன்றேனுமுண்டோ? பாம்பு, எலி, பருந்து, மயில், மாடு, ஆல், வேல், அரசு அனைத்தையும் நாளும் நம்மவர் வணங்கக் காண்கிறோம். இது நல்ல வழிபாடெனவே கருதப்படுகிறது. கீதையும் வேதமும் 'எப்பொருளுந் தெய்வமாகும், எதன் வணக்கமும் தெய்வத்தின் பாற்சென்று முடியும்' என விளக்கியிருக்க பசு பார்ப்பாராதி ஆறு மட்டுமே வழுத்தற்குரியனவென்பது பொருந்தாதன்றே.

4. இனி, வேதம் தமிழர் பாடிக்கொணாதாகவே, வேத முடிவென உரைகாரர் கூறுவவெல்லாம் சரியெனத் தமிழ் கற்பார் கொள்ளவும், கொண்டு வாளா அமையவும் கடவரென நச்சினார்க்கினியர் கருதினர் போலும்! அவர் இங்குக் கூறிய அறுவகையினவே தேவர்க்காம் வணக்கம் பெறற்குரிய வென்று எந்த வேதம் எப்பகுதியிற் கூறியுள்ளது? இதற்குத் தெளிவான வேத வாசகங் காட்டும் வரை இதுவே வேதமுடிவென்பது துணியப்படாததாகும்.

இனி, ஆறு புறத்திணைகளினடியாகப் பிறக்கும் பாடாண் பகுதிகளுக்குச் செய்யுள் வருமாறு:-

(1) வெட்சிப்பாடாண்:-

''முனைப்புலத்துக் கஃதுடை முந்நிரைபோல் வேந்தூர்
முனைப்புலம்பு முன்னிரையும் வீசி— எனைப்புலத்துச்
சென்றதுநின் சீர்த்தி தேர்வளவ! தெவ்வர்போல்
நன்று முண்டாக நமக்கு''

பழைய பாட்டு. நச்-உரைமேற்கோள்

''செருப்பிடைச் சிறுபரலன்னன்'' எனும் புறப்பாட்டும் (257) ''முட்காற்காரை'' எனும் உலோச்சனார் புறப்பாட்டும் (புறம்-258), ''நறவுந் தொடுமின்'' எனும் பேராலவாயர் பாட்டும் (புறம்-262), ''குயில் வாயன்ன'' எனும் ஔவை புறப்பாட்டும் (புறம்-269) வெட்சியின் வகையாம்.

(2) வஞ்சிப்பாடாண்:-

''வேத்தமர் செய்தற்கு மேற்செல்வான் மீண்டுவந்
தேத்தினர்க் கீத்துமென் றெண்ணுமோ— பாத்தி
யுடைக்கல மான்றேர் உடனீத்தான் ஈத்த
படைக்கலத்திற் சால பல.''

தகடூர். புறந்திரட்டு-1257

''காலனும் காலம் பார்க்கும்'' எனும் கோவூர் கிழார் புறப்பாட்டும் (புறம்-41) ''வல்லாராயினும்'' எனும் காரிக்கண்ணனார் பாட்டும் (புறம்-57) வஞ்சிப்பாடாண் வகையாதலறிக.

(3) உழிஞைப் பாடாண்:-

''வெஞ்சின வேந்த னெயில்கோள் விரும்பியக்கால்
அஞ்சி யொதுங்காதார் யாவரவர்—மஞ்சுசூழ

வான்றோய் புரிசைப் பொறியு மடங்கினவால்
ஆன்றோ ரடக்கம்போ லாங்கு.''

(பெரும்பொருள் விளக்கம்-புறத்திரட்டு-1329)

''இரும்பனை வெண்டோடு'' எனும் கோவூர் கிழார் பாட்டும் (புறம்-45), ''மணிதுணர்ந்தன்ன மாக்குரல் நொச்சி'' எனும் மோசி சாத்தனார் பாட்டும் (புறம்-272) ''நீரறவறியா'' எனும் காமக்கண்ணியார் பாட்டும் (புறம்-271) உழிஞைப் பாடாணாதல் காண்க.

(4) தும்பைப் பாடாண் :-

''இன்கடுங் கள்ளின் ஆமூ ராங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகால் மார்பொதுங் கின்றே, ஒருகால்
வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே,
நல்கினும் நல்கா னாயினும் வெல்போர்ப்
போரருந் தித்தன் காண்கதில் லம்ம;
பசித்துப் பணைமுயலும் யானை போல
இருதலை யொசிய வெற்றிக்
களம்புகு மல்லற் கடந்தடு நிலையே.''

(புறம்-80)

''யாவி ராயினும் கூழை தார்கொண்
டியாம்பொருது மென்ற லோம்புமின்; ஓங்குதிறல்
ஒளிறிலங்கு நெடுவேல் மழவர் பெருமகன்
கதிர்விடு நுண்பூண் அம்பகட்டு மார்பின்
விழவுமேம் பட்ட நற்போர்
முழவுத்தோ ளென்னையைக் காணா வூங்கே.''

(புறம்-88)

(5) வாகைப் பாடாண் :-

''நீர்மிகிற் சிறையு மில்லை; தீமிகின்
மன்னுயிர் நிழற்றும் நிழலு மில்லை;
வளிமிகின் வளியு மில்லை; ஒளிமிக்
கவற்றோ ரன்ன சினப்போர் வழுதி
தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன்; போரெதிர்ந்து
கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கெனக்
கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே
அளியரோ அளியர்அவ னளியிழந் தோரே,

நுண்பல சிதலை யரிதுமுயன் றெடுத்த
செம்புற் றீயல் போல
ஒருபகல் வாழ்க்கைக் கலம்வரு வோரே.''

(புறம்-51)

இன்னும், ''இமிழ் கடல் வளைஇய'' எனும் குடபுலவியனார் பாட்டும் (புறம்-19) வாகைப் பாடாண் பகுதியாகும்.

''இரும்பனம் புடைய லீகை'' எனும் பரணர் பாட்டும் (பதிற்று-42), ''வாங்கிரு மருப்பீற்றீந் தொடை'' எனும் கபிலர் பாட்டும் (பதிற்று-66) ஒழுகுவண்ணச் செந்துறைப் பாடாணாத லறிக.

(6) காஞ்சிப் பாடாண் :-

''அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவின்
எந்தையு முடையே மெங்குன்றும் பிறர்கொளார்;
இற்றைத் திங்க ளிவ்வெண் நிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெங்
குன்றுங் கொண்டார்; யா மெந்தையு மிலமே.''

(புறம்-112)

இது பாரியின் யாக்கை நிலையாமையும் செல்வ நிலையாமை யுங் கூறுதலிற் காஞ்சியாய்ப், பாரி புகழ் குறித்தமையாற் பாடாணுமாயிற்று.

''நோகோ யானே, தேய்கமா காலை,
பிடியடி யன்ன சிறுவழி மெழுகித்
தன்னமர் காதலி புன்மேல் வைத்த
இன்சிறு பிண்டம் யாங்குண் டனன்கொல்?
உலகுபுகத் திறந்த வாயிற்
பலரோ டுண்டல் மரீஇ யோனே.''

(புறம்-234)

இன்னும், இவ்வெள்ளெருக்கிலையார் புறப்பாட்டில் வேள் எவ்வியின் கொடைவென்றி வேளாண்மையும் அவனிறந்தற்கிரங் கலு முடன் கூறலால், இது காஞ்சிப் பாடாணாயிற்று.

(7) இனிப் புரைதீர் காமம் புல்லிய பாடாண் குற்றமற்ற கைக்கிளையினும் அன்பொத்த ஐந்திணை மருங்கினும் பிறக்கும்.

அதற்குச் செய்யுள் :-

(அ) கைக்கிளைப் பாடாண் வருமாறு :-

''பெண்மை யுணராப் பெதும்பை யெழில்நறவம்
கண்வாய் மடுத்துக் களித்ததளை யண்மித்தன்
உள்ளத் துறைந்தொளிரு மோவியநீ மண்ணில்நடை
கொள்ளத் தகுமோ கொடுமையெனும் வள்ளலையச்
செல்வி சிரித்துச் சிறகிலேன் நான்பறக்குங்
கல்வியறி யேனிரண்டு காலுடையே னாதலினால்
மெல்ல நடக்கின்றேன் வெகுள்வானே னென்னவவன்
கல்லா மழலைசெவிக் கண்டென்னும் எல்லாநின்
பொல்லாப் புருவச் சிலைகுனித்துப் போர்விழியால்
கொல்லா தருளிக் கொடுமைதவிர்த் தில்லோடென்
நெஞ்சத்தை யாள நினையாயோ நீயல்லால்
தஞ்சமிலேன் என்றிரக்குந் தன்கொடைமை எஞ்சாதான்
அஞ்சொற் பொருளை யறியாதவள் மயங்க
அஞ்சிப் பொறுக்கவென வல்லாந்து கெஞ்சும்
உலகாளு மன்னன் உளமார்ந்த காதல்
விலகாத வேளாண்மை வேட்டு.''

(ஆ) இருவயினொத்த தூய காதற் பாடாண்:-

''வையக மலர்ந்த'' எனும் பெருங்குன்றூர் கிழாரின் பதிற்றுப் பத்து (88-ஆம்) பாட்டில்,

''...........................................................
சேணாறு நல்லிசைச் சேயிழை கணவ!
மாகஞ் சுடர மாவிசும் புகக்கும்
ஞாயிறு போல விளங்குதி பன்னாள்;

(பதிற்றுப் பத்து-88)

என வருவது ஒழுகுவண்ணச் செந்துறைப் பாடாண், ''நல்லிசைச் சேயிழை கணவ'' என்றதனால் புரைதீர் காமம் புல்லிய பாடாணாயிற்று. இதுவே போல, ''மீள்வயினிற்ப'' எனும் (90 ஆம்) பாட்டிலும் புரைதீர் காமம் புல்லிய பாடாண் வருதலறிக. அது வருமாறு :-

''.......................................................
வளங்கெழு குடைச்சூ லடங்கிய கொள்கை
ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை
வண்டார் கூந்தல் ஒண்டொடி கணவ!
நின்னாள்

திங்க ளனைய வாக திங்கள்
யாண்டோ ரனைய வாக; யாண்டே
ஊழி யனைய வாக; ஊழி
வெள்ள வரம்பின வாகென வுள்ளிக்
காண்கு வந்திசின் யானே, செருமிக்
குருமென முழங்கு முரசிற்
பெருநல் யானை யிறைகிழ வோயே.''

(பதிற்று-90)

(26)

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் பாடாண்பகுதி எட்டனுள் இரண்டு கூறுகின்றது.

(இ-ள்) அமரர் கண் முடியும் அறுவகை யானும்—தேவரிடமாகச் சார்த்தப்படும் அறுவகைப் பாடாண் வகையானும், குற்றம் தீர்ந்த காமப் பொருளைப் பொருந்திப் புறமாக வரும் பாடாண் வகையானும் ஒன்றன் பகுதியாகிய பாடாண் திணை பொருந்தி வரும் என்றவாறு.

மற்றைத் திணைகள் எல்லாம் இருவர் பக்கமும் பொருந்தி நிகழப் பாடாண் மட்டும் பாடுவோன் பாடப்படுவோன் எனும் இருவர் பக்கங்களுள் பாடுவோர் பக்கமாகவே அமைதலின் ஒன்றன் பகுதி என அதற்குப் பெயராயிற்று.

அமர்—விருப்பம். அமரர் விருப்பத்தை நிறைவேற்றுபவர்; அவராவார் தேவர். அவர் கண் முடிதலாவது போரில் எதிர்த்து வீரங்காட்டி வீழ்ந்த வீரர்க்குத் தெய்வமாகக் கல்லெடுத்தலாம். அமர்—போர், அமரர்—போர் வீரர். வீரர்கண் முடியும் அறுவகை நிலையும் தெய்வ நிலையாம். அறுவகையாவன காட்சி, கால் கோள், நீர்ப்படை, நடுகல், பெரும்படை, வாழ்த்து என்பன. இவை எல்லாத் திணை வீரர்க்கும் உரியன.

அமரர் கண்முடியும் அறுவகையாவன கொடிநிலை, கந்தழி, வள்ளி, புலவராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்பன என்பர் இளம்பூரணர். கொடிநிலை கந்தழி வள்ளி என்பன பின்னர்க் கூறப்படுதலானும் (27) பரவலும் புகழ்ச்சியும் சந்துறை வண்ணப்பகுதியில் வரும் என அடுத்துக் (22) கூறப்படுதலானும் அவர் கூற்றுப் பொருந்தாது

நச்சினார்க்கினியர் முனிவரும் பார்ப்பாரும் ஆநிரையும் மழையும் முடியுடையரசரும் உலகும் ஆம் என்பர். வையத்துள் வாழ்

வாங்கு வாழ்பவன் வான் உறையும் தெய்வத்துள் வைக்கப் படும் (குறள்) ஆதலின் வாழ்வாங்கு வாழும் வணிகரும் வேளாள ரும் அமரர்கண் முடிபவரேயாதலின் அவரை விட்டது ஏன்? பார்ப்பன வாழ்த்தும் அரசர் வாழ்த்தும் இயன்மொழி வாழ்த்துள் அடங்கும். ஆதலின் அவர் கூற்று ஆய்தற்குரியதாம்.

இளம்பூரணர் நச்சினார்க்கினியர் கருத்துகளைப் பாரதியார் சிறப்பாக மறுப்பதும் காண்க.

இனிப் பாரதியார் வெட்சித்திணை முதல் காஞ்சித் திணை யிறுதியாகவுள்ள ஆறு திணைகளிலும் வரும் போர் வீரர்கள் பற்றிய வாழ்த்து முதலியன அமரர்கண் முடியும் அறுவகை என்பர். அவ்வீரர்களின் போர்ச் செயல்களைத் தனித்தனித் துறைகளாக ஆங்காங்கே கூறிவிட்டமையின் அவற்றையே மீண்டும் பாடாண் எனப் பெயர் கொடுத்துக் கூறுகின்றார் ஆசிரியர் என்பது ஆய்வுக்குரியதாகும். வெட்சித்திணை வீரரின் போர்ச்செயல் பற்றிய பாடலுக்குத் திணை துறை கூறுகையில் வெட்சித்திணையும் துறையும் கூறுதலுண்டே தவிர வெட்சிப் பாடாண் திணை எனத் திணை கூறுதல் இல்லை.

புரைதீர் காமம் புல்லிய வகையாவது குற்றம் தீர்ந்த அகன் ஐந்திணைக் காமம் பற்றிப் பாடும்போது அதனை அகத் திணையிற் சார்த்தாது புறத்திணையிற் சார்த்திக் கொள்ளுமாறு தலைவன் தலைவியர் பெயர் நாடு ஊர் முதலியவற்றைக் குறித்துப் பாடப்படும் முறை.

80. வழக்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்
முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே.

(22)

ஆ. மொ: இல:

82. The mode of composing in the meter of 'Senthurai' having as theme the worshipping and praising on the model of the ancient sayings and in the usage being of different types is not forbidden.

பி. இ. நா.

பு. வெ. மா. 9

......புகழ்ந்தனர் பரவல் பழிச்சினர் பணிதல்.

வீர. 106.

புகழ்ச்சி பரவல் குறிப்பு...... பாடாண் பகுதி.

இல. வி. புற. 19

வீற்றதொன் றெய்துகம் வியனிலத் தியாமெனப்
போற்றரும் இறைக்கெதிர் புகழ்ந்தனர் பரவலும்
விடுசுடர் எறிக்கும் மேனிவா ணவனைப்
படுபயன் கருதிப் பழிச்சினர் பணிதலும்

## இளம்பூரணர்

80 வழக்கியல் மருங்கின்... வரைவின் றாங்கே.

இது, சில பொருட்கண் வரும் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வழக்கியல் மருங்கின் வகைபட நிலைஇ பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்— மேற் சொல்லப்பட்டன வழக்கு இயலும் பக்கத்து வகை பெற நிறுத்திப் பரவலும் புகழ்ச்சியும் கருதிய பக்கத்தினும், முன்னோர் கூறிய குறிப்பினும்— முதலாசிரியர் கூறிய காமக்குறிப்பினும், செந்துறை வண்ணம் பகுதி வரைவு இன்று ஆங்கு— செந்துறைப்பாட்டின் கண் வரும் வண்ணப் பகுதி வரைதல் இல்லை அவ்விடத்து.

குறிப்பு என்பது காமம் ஆமாறு வருகின்ற சூத்திரத்துள் ''காமப் பகுதி கடவுளும் வரையார்'' (புறத்திணை-23) என ஒட்டி எழுந்தமையான் உணர்க.

இதனாற் சொல்லியது, தேவபாணியும்[1] அகப்பொருள் பாடும் பாட்டும் இசைத் தமிழில் வரைந்து ஓதினாற் போலச்[2] செந்துறைப்பாட்டிற்கு[3] உரிய செய்யுள் இவை என்று உரைத்தல் இல்லை பாடாண்பாட்டின்கண் வருங்காலத்தென்பது. எனவே எல்லாச் செய்யுளும் ஆம் என்றவாறு.

---

1. தேவபாணி—கடவுட் பாட்டு. அதாவது பண்ணொடு பாடப்படும் பாட்டு.
2. தொல்காப்பியர் செய்யுளியலில் ஓதியுள்ளார்.
3. செந்துறைப் பாட்டு— இயல்பு கூறும் இயற்பாட்டு. செந்துறை வண்ணப் பகுதி— இசை வேறுபாட்டோடு கூடிய இயல்பு கூறும் பாட்டு. பாரதியார் உரை விளக்கம் காண்க.

இனி, புகழ்தல் படர்க்கைக் கண்ணும், பரவல் முன்னிலைக் கண்ணும் வருமாறு:

''கண்ணகல் ஞாலம் அளந்ததூஉம் காமருசீர்த்
தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉம்—நண்ணிய
மாயச் சகடம் உதைத்ததூஉம் இம்மூன்றும்
பூவைப்பூ வண்ணன் அடி.''[4]

(திரிகடுகம். கடவுள் வாழ்த்து)

இது புகழ்தல்.

''வைய மகளை அடிப்படுத்தாய் வையகத்தார்
உய்ய உருவம் வெளிப்படுத்தாய்—வெய்ய
அடுந்திறல் ஆழி அரவணையாய் என்றும்
நெடுந்தகை நின்னையே யாம்.''[5]

(வெண்பா. பாடாண்-3)

இது பரவல்.

''வெறிகொள் அறையருவி வேங்கடத்துச் சேறி
நெறிகொள் படிவத்தோய் நீயும்—பொறிகட்கு
இருளீயும் ஞாலத்து இடரெல்லாம் நீங்க
அருளீயும் ஆழி யவன்.''[6]

(வெண்பா. பாடாண்-42)

இது புலவராற்றுப்படை.

''மாயவன் மாயம் அதுவால் மணிநிரையுள்
ஆயனா எண்ணல் அவனருளான்—காயக்

---

4. பூவைப்பூ வண்ணனாகிய திருமாலின் அடியே ஞாலம் அளந்ததும் குருந்த மரம் சாய்த்ததும் மாயச் சகடம் உதைத்ததும் ஆம்.

5. நெடுமாலே! நின்னை யாங்கள் நிலமகளை அடிக்கீழ்ப் படுத்தாய்; உலகினர் உய்யப் பேருருவம் வெளிப்படுத்தினாய்; அரிய ஆற்றலமைந்த சக்கரத்தையும் அரவுப் படுக்கையையும் உடையாய் என்று இப்படிக் கூறினேம். என்றும்—என்று கூறினேம்-என்+றும் எனக. நெடுந்தகை—நெடுமால்.

6. துறவு நெறி கொள்ளும் வடிவுடைய புலவனே! நீயும் வேங்கடத்துச் செல்வாயாக. அங்குள்ள ஆழியான் உலகுக்கு இருள் தரும் உலகத்தில் நின் இடம் நீங்கத் தன் அருளை ஈயும்.

கழலவிழக் கண்கனலக் கைவளையார் சோரச்
சுழலழலுள் வைகின்று சோ.''[7]

(வெண்பா. பாடாண்-40)

இது கந்தழி.

''வேண்டுதியால் நீயும் விழைவோ விழுமிதே
ஈண்டியம் விம்ம இனவளையார் பூண்தயங்கச்
சூலமோ டாடுஞ் சுடர்ச்சடையோன் காதலற்கு
வேலனோ டாடும் வெறி.''[8]

(வெண்பா. பாடாண்-41)

இது வள்ளி. வள்ளி என்பது ஈண்டு வெறியாட்டு. கொடி நிலை வந்த வழிக் காண்க. இனி, அவை சார்ந்து வருமாறு முன்னர்க்[9] காட்டுதும்.

இனிக் காமப்பகுதி வருமாறு:-

''மலைபடு சாந்தம் மலர்மார்ப யாம்நின்
பலர்படி செல்வம் படியேம்— புலர்விடியல்
வண்டினங்கூட் டுண்ணும் வயல்சூழ் திருநகரிற்
கண்டனங் காண்டற் கரிது.''[10]

(வெண்பா-பாடாண்-47)

இஃது ஊடற்பொருண்மைக்கண் வந்தது. இனி, இயற்பெயர் சார்த்தியும் வரும்.

---

7. கண்ணனை ஆநிரையுள் ஆயனாக எண்ணாதே. அவன் அருளால் கோபிக்க அசுரர் கழல்கள் அவிழ அவர் தம் மனைவியர் கைவளை சோரச் சோ என்னும் அரண் நெருப்பில் தங்கியது. அதனால் அவன் மாயம் அப்படிப் பட்டதாம்.

8. தொகுதியான வளையணிந்த மகளிர் சுடர்ச்சடையோன் மகனாகிய முருகற்கு வேலனோடு சேர்ந்து ஆடும் வெறிக்கூத்தைப் பெண்ணே நீயும் விரும்புவாயாக. அவ் விருப்பம் சிறந்ததாம்.

9. சூ. 27இல் காண்க.

10. சாந்தம் மலர் மார்பனே! பல பரத்தையரும் தோயும் நின் மார்பாகிய செல்வத்தை யாம் தோயேம். திருநகரில் காலையில் அதைக்கண்டேம், காணற்கு இனிதா யிருந்தது. இப்பாடல் பாட்டுடைத் தலைவனையே தலைவி ஊடிக் கூறினாள் எனக் கொள்க. இல்லையேல் அகத்திணையாகிவிடும், இயற்பெயர் கூறப்படாமையின்.

''வையை தன்
நீர்முற்றி மதில்பொருஉம் பகையல்லால் நேராதார்
போர்முற்றொன்று அறியாத புரிசைசூழ் புனலூரன்[11]
(கலி-மருதம்-2)

என்பது குறிப்பினாற் பாட்டுடைத்தலைமகனே கிளவித் தலைமகனாக வந்தது.

''பூந்தண்டார்ப் புலர்சாந்தின் தென்னவன் உயர்கூடல்
தேம்பாய அவிழ்நீலத் தலர்வென்ற அமருண்கண்
ஏந்துகோட் டெழில்யானை ஒன்னாதார்க் கவன்வேலில்
சேந்துநீ இனையையால் ஒத்ததோ சின்மொழி.''[12]
(கலி-குறிஞ்சி-21)

இது காமத்தின்கண் வந்தது.

(22)

## நச்சினார்க்கினியர்

82. வழங்கியவன்......வரைவின் றாங்கே.

இது மேல் 'ஒன்றன் பகுதி' (81) என்புழித் தோற்றுவாயாகச் செய்த இருபகுதியுண் மக்கட் பகுதி கூறுகின்றது.

இதன்பொருள் :- பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்-ஒரு தலைவன் தன்னைப் பிறர் வாழ்த்துதலும் புகழ்ந்துரைத்தலுங் கருதிய பக்கத்தின் கண்ணும், வகைபட முன்னோர் கூறிய குறிப்பி

---

11. நீர்மிகுந்து அலையால் மதிலைப் பொருவதல்லாமல் பகைவர் முற்றிப் பொருள் இல்லாத மதில்சூழ்ந்த புனலூரன் எனத் தலைவனைக் கூறலின் அவன் சோழன் என்பது குறிப்பினாற் பெறப்படும். எனவே இது குறிப்பினாற் பாட்டுடைத் தலைவனே கிளவித் தலைவனாவான் என்பதாம்.

12. சிலவான சொல்லுடைய தலைவியே! தென்னவன் கூடலில் அவிழும் நீலம்போலும் நின் கண்கள் பகைவர்க்கு அவன்வேல் சிவந்தது போலச் சிவந்து இப்படி இருத்தல் தக்கதோ?— இவ்வகப் பாட்டில் தென்னவனைச் சார்த்தி வந்தது பாடாண் ஆயிற்று.

னும் — அறம்பொருளின்பங்களின் கூறுபாடு தோன்ற முன்னுள்ளோர் கூறிய குறிப்புப்பொருளின் கண்ணும், செந்துறை நிலைஇ - செவ்வனகூறுந் துறைநிலை பெற்று, வழங்கு இயல் மருங்கின்—வழங்குதல் இயலுமிடத்து, ஆங்கு வண்ணப்பகுதி வரைவின்று— அச்செந்துறைக்கண் வருணங்களின் கூறுபாடு நிகழ்ந்தன நீக்கு நிலைமையின்று என்றவாறு.

பரவல் முன்னிலைக்கட் பெரும்பான்மை வரும். பரவலும் புகழ்ச்சியுந் தலைவன் கண்ணவாய்ப் பரிசில் பெறுதல் பாடுவான் கண்ணதாகலின் ஒருதலைக் காமமாகிய கைக்கிளைக்குப் புறனாயிற்று. முன்னோர் கூறிய குறிப்பும் பாடப்படுவோன் கண் வேட்கை யின்மையிற் கைக்கிளையாம். குறிப்பென்றார், அறம் பொருள் இன்பம் பயப்பச் செய்த செய்யுளைக் கேட்டோர்க்கும் அஃது உறுதி பயத்தலைக் குறித்துச் செய்தலின். செந்துறை யாவது விகார வகையான் அமரராக்கிச் செய்யும் அறுமுறை வாழ்த்தினைப் போலாது உலகினுள் இயற்கை வகையான் இயன்ற மக்களைப் பாடுதல்.[1] இது செந்துறைப் பாடாண்பாட்டெனப்படும்.

'வண்ணமுந் தொடையும் பொரீஇ யெண்ணா' (குறிஞ்சி 31) என்பவாகலானும் ஐவகை நிறத்தினையும் வண்ணமென்ப வாகலானும் வண்ணமென்பது இயற்சொல்; வருணமென்பது வடமொழித் திரிபு.[2]

ஆங்கு வண்ணப்பகுதி வரைவின்றெனவே வருகின்ற காமப் பகுதியிடத்து வண்ணப்பகுதி வரையப்படுமாயிற்று; கைக்கிளைக் கிழத்தியை உயர்ந்தோன் வருணத்துப் படுத்துக் கூறாதது, 'அனைநிலை' (75) வருணத்துப் படுத்துத் தோன்றக் கூறலின்.

(உ-ம்) ''நிலநீர் வளிவிசும் பென்ற நான்கி
னளப்ப ரியையே
நாள்கோ டிங்கள் ஞாயிறு கனையழ

---

1. அமரரை அமரராகவே பாடுதலும் முனிவர் முதலியவற்றை அவைகளாகவே கொண்டு பாடுதலும் இயற்கை வகையாற் பாடுதலாம். முனிவர் முதலியவற்றை அமரராக்கிப்பாடுதல் விகார வகையாற் பாடுதலாம்.

2. வண்ணம்—செய்யுள் இசை, நிறம் எனும் பொருளில் வரும் போது தமிழ் இயற்சொல்லாம். சாதி எனும் பொருளில் வடமொழித்திரிபாம். வர்ணம்—வருணம் —வண்ணம்

லைந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை
போர்தலை மிகுத்த வீரைம் பதின்மரொடு
துப்புத்துறை போகிய துணிவுடை யாண்மை
யக்குர னனைய கைவண் மையையே
யமர்கடந்து மலைந்த தும்பைப் பகைவர்
போர்பீ டழித்த பெகுப்புகன் முன்ப
கூற்று வெகுண்டு வரினு மாற்று மாற்றலையே
யெழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து
நோன்புரி தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை
வானுறை மகளிர் நலனிகல் கொள்ளும்
வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பி
னொடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ
பல்களிற்றுத் தொகுதியொடு வெல்கொடி நுடங்கும்
படையே ருழவ பாடினி வேந்தே
யிலங்குமணி மிடைந்த பொலங்கலத் திகிரிக்
கடலக வரைப்பினிப் பொழின்முழு தாண்டநின்
முன்றிணை முதல்வர்போல நின்று நீ
கெடாஅ நல்லிசை நிலைஇத்
தவாஅ லியரோவிவ் வுலகமோ டுடனே.''[3]

(பதிற்று—14)

பரவற்கண் வந்த செந்துறைப் பாடாண் பாட்டு; இதனை வாழ்த்தியலென்பர்.

''வரைபுரையு மழகளிற்றின்மிசை
வான்றுடைக்கும் வகையபோல

---

3. இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பாடியது.

கொடுங்குழைக்குக் கணவனே! படையேர் உழவ! பாடினி வேந்தே! தும்பை சூடிய பகைவரது போர்ப் பெருமையை அழித்த வலி மிக்கவனே! நீ, நிலம் நீர் நெருப்பு காற்று என்ற நான்கு போல அளப்பரியை; நாள்கோள் திங்கள் ஞாயிறு நெருப்பு ஆகிய நான்கும் ஒன்று சேர்ந்தாற் போன்ற விளக்கம் உடையை: துரியோதனன் முதலிய நூற்றுவர்க்கும் போரில் துணையாயிருந்த அக்குரன் போலும் வண்மையுடையை; கூற்றுவன் வெகுண்டு வரினும் மாற்றுவாய், சான்றோர்க்குக் கவசமாவாய்; உலகமுழு தாண்ட நின் முன்னோர் போல இவ்வுலகில் நல்ல புகழை நிறுத்திக் கெடாது வாழ்வாயாக.

விரவுருவின கொடிநுடங்கும்
வியன்றானை விறல்வேந்தே!
நீ, யுடன்று நோக்கும் வா யெரிதவழ
நீ, நயந்து நோக்கும் வாய் பொன்பூப்பச்
செஞ்ஞாயிற்று ணிலவு வேண்டினும்
வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்
வேண்டியது விளைக்கு மாற்றலை யாகலி
னின்னிழற் பிறந்து நின்னிழல் வளர்ந்த
வெம்மள வெவனோ மற்றே யின்னிலைப்
பொலம்பூங் காவி னன்னாட் டோருஞ்
செய்வினை மருங்கி னெய்த லல்லதை
யுடையோ ரீதலு மில்லோ ரிரத்தலுங்
கடவ தன்மையிற் கையற வுடைத்தென
வாண்டுச்செய் நுகர்ச்சி யீண்டுங் கூடலி
னின்னா டுள்ளுவர் பரிசில
ரொன்னார் தேஎத்து நின்னுடைத் தெனவே.''[4]

(புறம்—38)

இது புகழ்ச்சிக்கண்வந்த செந்துறைப் பாடாண்பாட்டு. இயையியன்மொழி யென்பதும் அது.

---

4. சோழன் குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆவூர் மூலங்கிழார் பாடியது. ''வேந்தே! நீ சினந்து பார்க்கும் இடம் எரி பரக்கவும், விரும்பி நோக்கும் இடம் பொன் விளங்கவும் வேண்டி செஞ்ஞாயிற்றில் நிலவு வேண்டினாலும் வெண் திங்களில் வெயிலை வேண்டினாலும் வேண்டியதை விளைக்கும் ஆற்றலுடையை. நின் நிழலில் பிறந்து வவர்ந்த எம்மளவில் நின் வண்மைச் சிறப்பு என்பது யாதாகும்? பரிசிலர் யாவரும் பகைவர் நாட்டில் இருந்தாலும் நின்னாடு நின்னுடைய தாக இருத்தலின் நின்னாட்டையே விரும்புவர். ஏன் எனின், தேவ உலகத்தாரும் அவ்வுலகைத் தாம் செய்த நல் வினை காரணமாக எய்துதல் அன்று அங்கே உடையோர் ஈதலும் இல்லாதவர் இரத்தலும் இல்லை யாதலின் அவ்வுலகம் விரும்பத்தக்கதன்று என்று நினைத்து அவ்வுலகத்துச் சென்று நுகரும் இன்பம் இவ் வுலகத்தும் உண்டு என்று கருதி நின்னாடு நினைப் பார்கள்.

> "உண்டா லம்ம விவ் வுலக மிந்திர
> ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
> தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
> துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
> புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி
> னுலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்வில
> ரன்ன மாட்சி யனைய ராகித்
> தமக்கென முயலா நோன்றாட்
> பிறர்க்கென முயலுந ருண்மை யானே."
>
> (புறம்—182)

இது வகைபட முன்னோர் கூறிய குறிப்பின்கண் வந்த செந்துறைப் பாடாண்பாட்டு.

இது முனிவர் கூறுமாறு போலக் கூறிப் பரவலும் புகழ்ச்சியுங் கூறாது மறுமைப் பயன் பிறர்க்குறுதி பயப்பக் கூறலிற் கைக்கிளைப் புறனாய்ப் பாடாணாயிற்று.

இவை செந்துறை மார்க்கத்து வண்ணப்பகுதியாகிய பாடல் பற்றி வருமென்பதூஉம் வெண்டுறை மார்க்கமாகிய நாடகத்துள் அபிநயத்துக்கு உரியவாகி வருமென்பதூஉங் கூறின், அவை ஈண்டுக் கூறல் மயங்கக் கூறலாம். அன்றியும் ஏனை அறுவகைத் திணைக்கும் இங்ஙனங் கூறாது இத்திணைக்கே உரித்தாகக் கூறு தற்கோர் காரணமின்மையானும் அங்ஙனங் கூறாரென்ப. பரவலும் புகழ்ச்சியும் அவ்வப் பொருண்மை கருதினாரைத் தலைவராக வுடைமையானும், ஏனையது அக்குறிப்பிற்று அன்றாகலானும் அதற்குப் பாட்டுடைத் தலைவர் பலராயினும் ஒருவராயினும் பெயர் கொடுத்துங் கொடாதுங் கூறலானும் வேறு வைத்தா ரென்க. இத்துணை வேறுபாடுடையதனைப் பரவல் புகழ்ச்சி யோடு கூடவைத்தார், அவை முன்னோர் கூறிய குறிப்பி னுள்ளும் விராய் வரும் என்றற்கு. இன்னும் அதனானே பாடாண்டிணைப் பொருண்மை மயங்கி வரினும் முடிந்த பொரு ளாற் பெயர்பெறு மென்று கொள்க.

'நிலமிசை வாழ்நர்' என்னும் (43) புறப்பாட்டுப் புலவன் அரசனை வைது ஆறி அது நன்குரைத்தல். அஃது இயற்கை வகையானன்றிச் செயற்கை வகையாற் பரவலும் புகழ்ச்சியுந் தொடர்ந்த முன்னோர் கூறிய குறிப்பு.

இன்னும் மயங்கி வருவன வெல்லாம் இதனான் அமைக்க.

(27)

**சோம. இளவரசு**

சூத்திரம் ; 27

''வழங்கின் மருங்கின்......றாங்கே.

கருத்து :- இது சில பாடாண் துறைகளில் இயற்பாவிடத்துப் பயிலும் இசைப்பா வகை கூறுகிறது.

பொருள் :- வழங்கியன் மருங்கில் — பல பிறதிணைப் பகுதிகள் பாடாணாய்ப் பயிலுமிடத்து; வகைபட நிலைஇ—அதனதன் கூறுபட நின்று; பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்—வாழ்த்தலும் புகழ்தலும் நுதலுமிடத்தும்; முன்னோர் கூறியகுறிப்பினும்- பண்டைச் சான்றோர் செந்துறை வழக்குச் சுட்டும் பிறவிடத்தும்; செந்துறை வண்ணப் பகுதி வரைவின்று— இயற் பாக்களேயன்றி இசைவகை வண்ணக் கூறுகளும் விலக்கப்படா.

குறிப்பு :- ''ஆங்கு'' உரையசை, ஏகாரம் ஈற்றசை, உம்மைகள் எண் குறிப்பன. செந்துறையாவது. இசைத்தமிழ்ப் பாட்டு வகை. வண்ணம் என்பது இசைக்குரிய ஓசை வேறுபாடு. பிறதிணைகளிற் போலப் பாடாணிலும் இயற்பாக்கள் பெரிதும் வழங்கும்; எனில், இங்குக் குறித்த சில பாடாண் வகைகளுக்கு மட்டும் இயற்பாக்களே யன்றி இசைப்பா வண்ணக் கூறுகளும் வந்து பயில்வதுமுண்டு என்பதே இச்சூத்திரக் கருத்தாகும். அது ''வண்ணப் பகுதி வரு'' மெனக் கூறாது, ''வரைவின்று'' என்றதனால் விளங்கும். பாடாணில் பெரிதும் பயில்வன இயற்பாக்களே, இசைப்பா வண்ண வகை சிறுவரவிற்றே; அதுவும் இங்குக் குறித்த வகைகளில் மட்டுமே யாம்.

இதில் முன்னோர் கூறிய குறிப்பென்றது, பரவலும் புகழ்தலுமல்லாப் பிறதுறைகளை; குறித்த அவ்விரண்டிலும் செந்துறை வண்ணம் சிறப்புடைத்தாகும்; மற்றைய பாடாண்துறைகளில் பண்டைச் சான்றோர் செந்துறைக்குரியவெனக் குறித்தவற்றிற்கே இசைப்பா வண்ணம் ஏற்புடைத்து; அல்லனவெல்லாம் இயற்பாக்களே ஏற்குமென்க.

புகழ்ச்சிப் பாடாண் வகைக்கு ஒழுகு வண்ணச் செந்துறைப் பாவகை வருமாறு :-

''அட்டா னானே குட்டுவன், அடுதொறும்
பெற்றா னாரே பரிசிலர் களிறே;
வரைமிசை யிழிதரு மருவியின் மாடத்து
வளிமுனை யவிர்வருங் கொடி நுடங்கு தெருவில்

சொரிசுரை கவரும் நெய்வழி புராலிற்
பாண்டில் விளக்குப் பரூஉச்சுட ரழல
நன்னுதல் விறலிய ராடுந்
தொன்னகர் வரைப்பினவ னுரையா னாவே.''

(பதிற்றுப்பத்து. செய்—47)

இதில், செங்குட்டுவன் கொடையும் வென்றியும் பரணர் புகழ்தலால் இவ் வொழுகு வண்ணச் செந்துறைப் பாவகை ஏற்புடைத்தாயிற்று.

இனி, வாழ்த்துப்பாடாண் வகைக்கு வண்ணச் செந்துறை வருமாறு :-

''பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி
ஒண்ணுதல் விறலியர்க் காரம் பூட்டிக்
கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ
ஆண்டுநீர்ப் பெற்ற தார மீண்டிவர்
கொள்ளாப் பாடற் கெளிதினி னீயும்
கல்லா வாய்மைய னிவனெனத் தத்தங்
கைவ லிளையர் நேர்கை நிரைப்ப
வணங்கிய சாயல் வணங்கா வாண்மை
முனைசுடு கனையெரி யெரித்தலிற் பெரிதும்
இதழ்கவி னழிந்த மாலையொடு சாந்துபுலர்
பல்பொறி மார்ப! நின் பெயர்வா ழியரோ,
நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டும்
மலிபுனல் நிகழ்தருந் தீநீர் விழவில்
பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை
மேவரு சுற்றமோ டுண் டினிது நுகருந்
தீம்புன லாய மாடுங்
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே.''

(பதிற்றுப்பத்து பெ. 48)

செங்குட்டுவன் பரணர் பாடிய இப்பாட்டில் ''பெருந்துறை மணலினும் பலவே, நின்பெயர் வாழியர்'' என வருதலால், இது வாழ்த்துப்பாடாண்; அதனாலிதற்கு ஒழுகு வண்ணச் செந்துறைப் பாவகை ஏற்புடையதாயிற்று.

இனி, இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருந்தாப் புத்துரைக் குறிப்பைச் சிறிதா ராய்வோம். ''வண்ணப் பகுதி'' என்னும் தமிழியற்றொடருக்குரிய செம்பொருளை யிகழ்ந்து

விலக்கி, ''வண்ணம்'' எனுந் தமிழ்ச்சொல்லை ''வருணம்'' என்னும் வடசொல்லின் சிதைவாகக் கொண்டனர். கொண்டு, ''வண்ணப்பகுதி வரைவின்று'' என்பதற்கு, ''வருணங்களின் கூறுபாடு நிகழ்ந்தன நீக்கும் நிலைமையின்று'' என்று பொருள் கூறினார்.

''வண்ணமும் தொடையும் பொரீஇ யெண்ணா' என்பவாகலானும், ஐவகை நிறத்தினையும் வண்ணமென்பவாகலானும் வண்ணமென்பது இயற்சொல், வருணமென்பது வடமொழித் திரிபு''—என்றவரே தெளிந்து கூறினர்; எனினும் சூத்திரத்தில் அத்தமிழ்ச் சொல்லுக்குரிய பொருளை விட்டுத் தாம் கருதிய ஆரிய மரபைப் புகுத்தி மரபு பிறழப் புத்துரை கூறுவர். இஃதவர் மனப்பாங்கிருந்தவாறு. பட்டாங்கே இயலடைவில் நிரல் நிரையே சொற்கிடந்தவாறு. கண்ணழிப்பின், சூத்திரச் செம் பொருள் தெளிதலெளிது. இதை விலக்கிச், சுண்ணம் மொழி மாற்று முதலிய அரிய மாட்டேற்று மத்துக்களால் கலக்கி, எவ் வாற்றானும் ஒவ்வாப் புதுப் பொருள் காணத் துணியு மிவரியல் பிற்கிது நல்ல சான்று. சொற்றொடர் சுட்டும் செம்பொருளை இவரே குறிக்கின்றார். அதைக் கொள்ளாமைக்கிவர் இரண் டேதுக்கள் கூறுகிறார்.

(1) ''இதிற் குறித்த பாடாண் பகுதிகள் ''செந்துறை மார்க்கத்து எண்ணப்பகுதியாகிய பாடல்பற்றி வரும்'' என்பது ...கூறின் அவை ஈண்டுக்கூறல் மயங்கக் கூறலாம்.

(2) அன்றியும், ஏனை அறுவகைத் திணைக்கும் இங்ஙனங் கூறாது இத்திணைக்கே உரித்தாகக் கூறுதற்கோர் காரண மின்மையானும் அங்ஙனங் கூறாரென்க.''

இவற்றுள் முதலது இடம்பற்றியது. செய்யுளியற்குரிய பாட்டுவகை புறத்திணை யியலிற் கூறுதல் பொருந்தாதென்பதே, சொற்பொருளை விட்டொழிக்க விரும்புதற்கிவர் கூறும் காரணம். இந்நூற்பா சுட்டும் பாடாண் பகுதிகள் 'செந்துறை மார்க்க வண்ணப்பகுதியாகிய பாடல்பற்றி வரு'மென்பதே நேரிய பொருளென்றுடன்படுகிறரர். ஆனாலும், செய்யுளியற்குரிய பாவகை கூறுதலால், அச் சொற்பொருளைக் கொள்ளலாகா தென விலக்குகிறார். இஃதிவர் பொருந்தாப் புத்துரைக்குப் போதாதென்பதும், புறத்திணையியலில் சில பாடாண் பகுதி களுக்குச் சிறந்துரிய பாவகை சுட்டுவது இயலமைவுடைத் தென் பதும், தொல்காப்பியர் மரபுமுறை மறவார்க்கெளிதில் தெளி வாகும். அகப்புறத்திணைகளுக்குப் பொதுவான பாவகைகள்

செய்யுளியலில் விளக்குவதால், திணைதோறும் அவ்வதற்குப் பாவகைக் கூறல் மிகையாகும். அதனால் தொல்காப்பியர் பிற புறத்திணைகளுக்குப் பாவகை தனித்தனி கூறிற்றிலர். எனில், செந்துறைப் பாடல் பிற திணைகளுக்குப் பயிலாமல், பாடாணிலும் யாண்டும் பயிலாமல், ''பரவலும்—புகழ்ச்சியும்—முன்னோர் குறிப்புமான'' பகுதிகளுக்கு மட்டுமே பொருந்துமாதலின், அப் பொருத்தம் இவ்வியற் பாடாண் பகுதியொடு சேர்த்துக் கூறப் பட்டது. இவ்வாறு, ஏற்ற சில பிறவிடத்தும் பொதுவின்றிச் சிறப்பாகத் தனியுரிமையுடைய பாவகைகளைச் செய்யுளியலிற் கூறாமல் ஆங்காங்கே சுட்டுவது இந்நூலாரியல்பாகும்; அகத் திணைகளுக்குக் ''கலியும் பரிபாடலும் உரிய'' என்றகத்திணை யியலிறுதியிலும், அதுவே போல உவம வகையான உள்ளுறை யுவமத்தை உவமவியலில் கூறாமல், பெருந்திணை ஒழியப் பிற அகத்திணைகளுக்குச் சிறப்புரிமை கொள்ளுவதால் அகத்திணை யியலினும் அவ்வாறே உவமத் தொடர்புடைய இறைச்சி முதலிய சில உள்ளுறைகளைப் பொருளியலிலும் விரித்து விளக்குதலறிக. எனவே, தன்னளவில் தவறற்றதாய், எளிதிற் பொருள் தெளி யப்படுவதாகும் நேரிய சொற்பொருளை, இதிற் குறித்த பாடாண் வகைக்குரிய பாவகையைச் செய்யுளியிலயற் கூறாமல் இங்குத் தொடர்பு கருதிப் பாடாண் பகுதியொடு இவ்வியலிற் கூறியதால் மட்டும், மயக்கந் தருமென விலக்குமாறில்லை. எவ்வாறாயினும் பண்டைத் தமிழ்த்திணை விளக்கும் பகுதியில், யாதும் பொருத்த மற்ற ஆரியரின் சாதிபேத ஏத வேறுபாடுகளைப் புகுத்தும் நச்சினார்க்கினியர் முயற்சி வியப்பொடு வெறுப்பை விளைப்ப தாகும். ''எல்லா உயிர்க்கும் பிறப்பொக்கும்' எனும் தமிழ் மரபொடு முற்று முரணுவதும் பிறப்பால் என்றுமாறாத உயர்வு தாழ்வுடையதுமான ஆரிய வருண முறைகளைப் பழைய தமிழர் புறவொழுக்கம் கூறுமிடத்துப் புகுத்த முயன்றிடர்ப்படுவதினும், பிறதிணைகளுக்கும் பாடாணில் பிற பகுதிகளுக்கும் பயிலாத செந்துறை வண்ணப்பாடல் இதிற்குறித்த சில பாடாண் பகுதி களுக்கு விலக்கில்லை என்பதைப் புறனடையாக இந் நூலாரிங்குத் தெளிக்குமுண்மை தேர்வதே பெரிதும் நயமும் பொருத்தமும் பயனுமுடைத்து. (27)

**சிவலிங்கனார்**

இச்சூத்திரமும் பாடாண் பகுதி எட்டனுள் மேலும் ஒன்று கூறுகின்றது.

(இ-ள்) உலகவழக்கு இயலுமிடத்து அதன்வகையிற் பொருந்துமாறு நிறுத்திப் பரவலும் புகழ்ச்சியும் பொருளாகக்

கருதிப் பாடும் பக்கத்தும் முன்னோர் கூறிய குறிப்பு மொழிகளைக் கொண்டு பாடும் பக்கத்தும் ஆகிய இருபக்கமாகச் செந்துறை வண்ணம் என்னும் செய்யுட் பகுதி நீக்கும் நிலைமையின்று என்றவாறு.

பரவலும் புகழ்ச்சியும் முன்னோர் கூறிய குறிப்பும் செந்துறை வண்ணம் என்னும் செய்யுளிற் பாடப்படும் என்பது கருத்து. நச்சினார்க்கினியர் உரையினைப் பாரதியார் மறுப்பது சிறப்புடையதாம்.

**81. காமப் பகுதி கடவுளும் வரையார்**
**ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்.**

(23)

ஆ. மொ. : இல.

**83. The love aspect is not forbidden from God as it is with Others—Say the poets.**

பி. இ. நூ

பு. வெ. கா. 9.

கடவுள் பக்கத்தும் ஏனோர் பக்கத்தும்
மடவரல் மகளிர் மகிழ்ந்த பக்கமும்

இல. வி. புறம். 18

படிமிசை இயங்காப் பணிமொழி மகளிர்
கடவுளை நயந்த கடவுள் பக்கமும்
பூதலத் தரிவையர் பொருவில் வானவரைக்
காதலித்துரைத்த கடவுள் பக்கமும்.

## இளம்பூரணர்

81. காமப் பகுதி...... என்மனார் புலவர்.

இது, கடவுள் மாட்டு வருவதோர் பாடாண்பக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) காமப்பகுதி கடவுளும் வரையார்—காமப்பகுதி கடவுள் மாட்டும் வரையார், ஏனோர் பாங்கினும் (வரையார்) என்மனார் புலவர்—ஏனோர் மாட்டும் வரையார் என்பர் புலவர்.

என்றது, கடவுள் மாட்டுத் தெய்வப் பெண்டிர் நயந்த பக்கமும், மானிடப் பெண்டிர் நயந்த பக்கமும் பாடப்பெறும் என்றவாறு.

### உதாரணம்

''நல்கினும் நாமிசையாள் நோம்என்னும் சேவடிமேல்
ஒல்கினும் உச்சியாள் நோம்என்னும்—மல்கிருள்
ஆடல் அயர்ந்தாற்கு அரிதால் உமையாளை
ஊடல் உணர்த்துவதோர் ஆறு.''[1]

(வெண்பா. பாடாண்-48)

இது, தெய்வப்பெண்டிர் நயந்த பக்கம்.

''அரிகொண்ட கண்சிவப்ப அல்லினென் ஆகம்
புரிகொண்ட நூல்வடுவாப் புல்லி—வரிவண்டு
பண் நலங்கூட் டுண்ணும் பனிமலர்ப் பாசூர் என்
உண்ணலங் கூட்டுண்டா னூர்.''[2]

(வெண்பா. பாடாண்-49)

இது மானிடப்பெண்டிர் நயந்த பக்கம்

(23)

## நச்சினார்க்கினியர்

83. காமப்பகுதி.........புலவர்.

இது முற்கூறிய கடவுட்கும் மக்கட்கும் எய்தியதன் மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

---

1. ஆடலை விரும்பிய சிவபெருமானுக்கு உமையவள் கொண்ட ஊடலைத் தீர்க்க எண்ணி எனக்கு இரங்குக என வேண்டின் உடனே உமையவள் அப்படிச் சொன்னால் நும் நாவில் இருக்கும் சொல் மடந்தை வருந்துவாள் என்று மறுப்பாள்; நின் சேவடியில் வீழ்வேன் எனச் சொல்லின் அதற்கும் உம்முடைய தலையில் இருக்கும் கங்கை வருந்துவாள் என்று மறுப்பாள்; எனவே உமையவளின் ஊடல் தீர்க்கும் வழி சிவபெருமானுக்கு இல்லை.

2. செவ்வரி பரந்த என் கண் சிவக்கும்படி இரவில் கனவிலே தன் முப்புரி நூல் அழுத்தி வடுப்படும்படி என்னைப் புல்லி என் உள்ளக் காதலை விடாமல் உண்ட இறைவன் இருக்கும் ஊர் எது எனின், வண்டு பண்ணிசைக்கும் மலர் சூழ்ந்த திருப்பாசூர் என்பதாகும்.

இதன்பொருள் :- காமப்பகுதி—முன்னர்ப் 'புரைதீர் காம' (81) மென்றதனுட் பக்குநின்ற புணர்ச்சி வேட்கை, கடவுள் பாங்கினும் வரையார்—கட்புலனாகிய கடவுளிடத்தும் நீக்கார், ஏனோர் பாங்கினும் வரையார் என்மனார் புலவர்—மக்களிடத்தும் நீக்காரென்று கூறுவர் புலவர் என்றவாறு.

பகுதி, ஆகுபெயர்.[1] அது கடவுண் மாட்டுக் கடவுட் பெண்டிர் நயப்பனவும், அவர் மாட்டு மானிடப் பெண்டிர் நயப்பனவும், கடவுண் மானிடப் பெண்டிரை நயப்பனவும் பிறவுமாம்.

இன்னும் பகுதி' யென்றதனானே எழுதிணைக்குரிய காமமும் 'காமஞ்சாலா விளமையோள் வயிற்' (50) காமமுமன்றி இது வேறோர் காமமென்று[2] கொள்க.

(உ-ம்) ''நல்கெனி னாமிசையா ணோமென்னுஞ் சேவடிமே
லொல்கெனி னுச்சியா ணோமென்னு—மல்கிரு
ளாட லமர்ந்தாற் கரிதா லுமையாளை
யூட லுணர்த்துவதோ ராறு.''[3]
(பு-வெ-பாடாண்-48)

''பல்லேற்ற பரிகலத்துப் பலியேற்றன் மேலிட்டு
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப வருதிரால்
வல்லேற்ற முலைமகளிர் மனமேற்ப நீரேறுங்
கொல்லேற்றுக் கறுகிடினுங் கொள்ளுமோ
கொள்ளாதோ.[4]

---

1. காமப்பகுதி—புரைதீர் காமப்பகுதி - பகுதி - ஒரு கூறு- அது புணர்ச்சி வேட்கைக்கு ஆயிற்று. ஆகுபெயர்.

2. வேறோர் காமம்—அகன் ஐந்திணைக் காமமும் கைக்கிளைக் காமமும் இன்றி வீடு பேறாகிய காமம்பற்றி வருதலின் வேறோர் காமம்.

3. இது கடவுள் மாட்டுக் கடவுட் பெண்டிர் நயந்தது.

4. பல்லைக்கொண்ட தலையாகிய உண்கலத்தில் பலியேற்றலை வேண்டி சூதாடு கருவி போலும் முலையுடைய மகளிரின் மனம் ஏற்க வருதிர்; மகளிர் மனம் நீர் ஏற்க நீர் ஏறி வரும் கொல்லும் ஆனேற்றுக்கு அறுகம்புல் இடினும் அது கொள்ளுமோ கொள்ளாதோ? கூறுமின். இது கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்தது.

''குடுமிப் பருவத்தே கோதை புனைந்தே
யிடுமுத்தம் பூத னிருப்பப்—படுமுத்தம்
புன்னை யரும்பும் புகாஅர்ப் புறம்பணையார்க்
கென்ன முறைய ளிவள்.''[5]

என வரும்.

''களியானைத் தென்னன் கனவின்வந் தென்னை
யளியா னளிப்பானே போன்றான்—றெளியாதே
செங்காந்தண் மெல்விரலாற் சேக்கை தடவந்தே
னென்காண்பே னென்னலால் யான்.''[6]

(முத்தொள்-63)

''அணியாய செம்பழுக்காய் வெள்ளிலையோ டேந்திப்
பணியாயே யெம்பெருமா னென்று—கணியார் வாய்க்
கோணலங் கேட்பதூஉங் கொண்கர் பெருமானார்
தோணலஞ் சேர்தற் பொருட்டு.''[7]

எனவரும்.

''அடிபுனை தொடுகழன் மையணற் காளைக்கென்
றொடிகழித் திடுதல்யான் யாயஞ் சுவலே
யடுதோண் முயங்க லவைநா ணுவலே
யென்போற் பெருவிதுப் புறுக வென்று
மொருபாற் படாஅ தாகி

---

5. குடுமி வைத்த பருவத்தில் மாலை புனைந்து முத்த மாலையிடும் பூதன் (தேவன்) இவளுக்காகக் காத்திருக்க முத்துபோல் புன்னையரும்பும் புகார் நகரத்துப் பண்ணை யுடையவர்க்கு இவள் என்ன முறையுடையளாவாள். -இது பூதன் எனும் கடவுள் மானிடப் பெண்ணை நயந்த தாகக் கூறியது.

6. தென்னன் கனவில் வந்து அளிப்பான் போன்றான்; கனவெனத் தெளியாமல் கைவிரலால் படுக்கையைத் தடவினேன்; விழித்தால் என்னைக் கண்டதல்லாமல் வேறு எதனைக் காண்பேன்?

7. சோதிடரிடம், 'உண்மையைச் சொல்வாயாக பெரு மானே' என்று பாக்குடன் வெற்றிலை கொண்டு வைத்துக் கேட்பதெல்லாம் கொண்கர் தலைவனின் தோள் நலத்தை இவள் சேர்தற் பொருட்டேயாம்.

யிருபாற் பட்டவிம் மைய லூரே.''[8]

(புறம்-83)

இது பெருங்கோழி நாய்கன் மகள் ஒருத்தி ஒத்த அன்பினாற் காமமுறாதவழியுங் குணச் சிறப்பின்றித் தானே காமமுற்றுக் கூறியது, இதனானடக்குக.

இன்னும் 'ஏனோர் பாங்கினும்' என்பதனானே கிளவித் தலைவனல்லாத பாட்டுடைத் தலைவனைக் கிளவித் தலைவனாகக் கூறுவனவுங் கொள்க:

(உ-ம்) ''கார்முற்றி யிணரூழ்த்த கமழ்தோட்ட மலர் வேய்ந்து
சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலந்
தார்முற்றி யதுபோலந் தகைபூத்த வையைதன்
னீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னேராதார்
போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்[9]

(கலி)

இது குறிப்பினாற் பாட்டுடைத் தலைவனைக் கிளவித் தலைவனாகக் கூறியது.

''மீளிவேற் றானையர் புகுதந்தார்
நீளுயர் கூட னெடுங்கொடி யெழவே.''

(கலி-31)

என்பதும் அது.

இவ்வாறு வருவதெல்லாம் இதனான் அமைக்க.

(28)

---

8. கழலும் தாடியும் உடைய களையின் காரணமாக என் தொடிகள் தோள் மெலியக் கழலுவதால் தாய்க்குத் தெரிந்துவிடுமோ என அஞ்சுவேன்; அவன் தோளைச் சென்று தழுவலாமோ எனில் ஊர்ப்பெரியவர்க்கு அஞ்சுவேன். அதனால் இவ்வூரும் என்னைப்போல ஒரு கூற்றில் படாது வருந்துவதாக—தலைவி கூற்று!

9. மலர்வேய்ந்து புலவர் வாய்ச் சிறப்பெய்தி தரையில் காலாட்படை பெருகியது போல வையை நீர் பெருக் கெடுத்து மதிலைப் பொரும் (மோதும்) பகையன்றி வேறு பகைவரால் போர் முற்றுகையிடுதலை அறியாத மதில் சூழ்ந்த நீர்வளமுள்ள ஊரன். இதில், வையை பொரும் மதில் என்றதால் மதுரையையும் அதனை யுடைய பாண்டியனையும் குறிப்பினாற் கொள்ள வைத்து அவனே அகப்பொருட் கிளவித் தலைவனாகவும் கொள்ளுமாறு அமைந்தது.

**சோமு. இளவரசு**

சூத்திரம் : 28.

''காமப் பகுதி.........புலவர்.''

கருத்து :- இது, ''புரைதீர் காமம் புல்லிய பாடாண் பகுதி ஒரோவிடத்துக் கடவுளர்க்கும் விலக்கில்லை'' என்று கூறு கிறது.

பொருள் :- காமப்பகுதி—பாடாண் வகையுள் புரைதீர் காமம் புல்லிய பகுதி; கடவுளும்—(மக்களே யன்றிக்) கடவுளரும்; ஏனோர் பாங்கினும்—(தம்முள்ளும்) பிறரோடும்; வரையார்—கடியமாட்டார்; என்மனார் புலவர்— என்று கூறுவர் புறநூற் புலவர்.

குறிப்பு:- இதில், உம்மையிரண்டும் சிறப்புக் குறிப்பாம். மக்கட் கன்றி, கடவுளர்க்கும் தூய காதற்பகுதி பாடாணாதற் குரித்து; காதலியல்கருதா மேதகு கடவுளரும் இருதலையும் தாமாயும் ஒருதலை மனிதரோடும் காதல் கூரும் நற்காமப் பகுதி யும் பாடாண் வகையாதலுண்டு என்பது குறிப்பு. புரைதீர் காமப் பாடாண் மக்களோடு தேவரும் சேர்வதுண்டு என்பது இந்நூற்பாக் கருத்து. தூய காதல் பாடாணாதற்குரிய தென்பது, மேல் ''அமரர் கண் முடியும்'' என்ற சூத்திரத்தில் 'புரைதீர் காமம் புல்லிய வகையினும்' என்றதனால் விளக்கப்பட்டது. காதல் பெரும்பாலும் இருமருங்கும் மக்கட் டலைவரிடை நிகழ்வ தியல்பு. ஒரோவழி, ஒரு கடவுள் பிற கடவுளோடும் அன்றிக் கடவுளல்லாப் பிற மனிதரோடும் காதல் கொள்வதும், அது குற்றமற்றதாயின் ஏற்புழிப் பாடாண் பகுதியாவதும் செய்யு ளில் கடிதலில்லை என்றிதில் கூறப்படுகிறது. மேற்பாடாணியல் விளக்கத்தில் புரையுடைக் காமமே கடியப்பட்டுக் கடவுளர் தூய காதல் விலக்காமையாலிது வேண்டாமெனின், திணையெல்லாம் மக்களொழுக்கம் பற்றியவாதலின் பாடாண் திணை கடவுளர் தூயகாதல் பற்றி வருமோ எனும் ஐயமகற்ற இது வேண்டு மென்க. பொதுவாய்ப் பொருளெல்லாம் மக்களின் அகமும் புறமுமாய ஒழுக்கங்களைப் பற்றியனவாகும் புறத்திணை ஏழனுள் இறுதியான பாடாணும், மற்றைய போலவே மக்கட்டலைவர் மேற்றாய், ஒன்று ''அமர்கொள் மரபின்'' அறுபுறத்திணையினடி யாய் வரும். அன்றி அகவகையில் புரைதீர் காமம் புல்லிவரும் இவ்விருவகையுள், ''மறனுடை மரபிற் பாடாணாறும்'' மக்கண் மேற்றாய்ச் செய்யுளில் வழங்கும். ''புரைதீர் காமம் புல்லிய

பாடாணும்'' மானிடத் தலைமக்கள் மாட்டு வருதலே பெரு வழக்காம். சிறுவரவிற்றாக. காதல் கண்ணிய பாடாண் கடவுளரிடையும் மக்களொடு கடவுள் காதல் கொள்ளுமிடத்தும் வருதலும் புலனெறி வழக்கில் விலக்கில்லை எனும் பழமரபு கூறப்பட்டது.

கடவுள் கடவுளொடு காதல்கொண்ட புரைதீர் காமப் பாடாணுக்குச் செய்யுள் வருமாறு:-

''........................................
கண்ணொடு கண்ணிணைக் கௌவி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்.''

''பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித்
தொருவரை யொருவர்தம் உள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும்
இருவரு மாறிப்புக் கிதய மெய்தினார்.''

''மருங்கிலா நங்கையும் வசையி லையனும்
ஒருங்கிய இரண்டுடற் குயிரொன் றாயினார்,
கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ.''

(கம்பர். இராமாவதாரம்-மிதிலைக்காட்சி-
செய்யுள். 35, 37, 38)

இப் பாட்டுக்களில், திருமாலும் இலக்குமியும் பாற்கடலை விட்டுப் பிரிந்துலகில் வந்துகூடிக் காதலால் கலந்த தூய காமப் பாடாண் பகுதி பீடுபெறுதலறிக.

இனி, கடவுள் மானிடர் மருங்கு காதலித்த பாடாண் பகுதி, முருகவேள் குறவள்ளியை மணந்த கதையாலறிக.

''..............ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே.''

(முருகாற்றுப்படை, வரி-100-102)

(28)

## சிவலிங்கனார்

இச்சூத்திரப் பாடாண் பகுதி எட்டனுள் மேலும் இரண்டு கூறுகின்றது.

(இ-ள்) காமம் பொருளாக வைத்துப் பாடும் வகை கடவுளர் பக்கமும் மானிடர் பக்கமும் என இரண்டு வகைகளும் நீக்கார்

என்று கூறுவர் புலவர் என்றவாறு. கடவுள் மாட்டுக் கடவுட் பெண்டிர் நயத்தலும் கடவுளர் மானிடப் பெண்டிர் நயத்தலுடன் கடவுளர் மானிடப் பெண்டிரை நயத்தலும் எனக் கடவுளர் காமப் பகுதி இரண்டாம். இவற்றுக்குப் பழைய உதாரணங்கள் இறந்தன.

முருகன் தெய்வயானையை விரும்பியேற்றது கடவுள் மாட்டுக் கடவுள் நயந்தது. அவன் வள்ளியை வேட்டது கடவுள் மானிடப் பெண்டிரை நயந்தது. ஆண்டாள் திருமாலை நயந்தது மானிடப் பெண்டிர் கடவுளை நயந்தது.

**82. குழவி மருங்கினும் கிழவ தாகும்.**

**(24)**

ஆ. மொ. : இல.

84. **It belongs to child also.**

பி. இ. நூ.

பு. வெ. மா 9.

மாதர் மகிழ்ந்த குழவியும்.

இல. வி. புற. 19.

இழையணி மங்கையர் ஈறில் காமம்
குழவி மருங்கின் கூறிய பகுதியும்

## இளம்பூரணர்

82. குழவி மருங்கினும்......தாகும்.

இது குழவிப் பருவத்தும் காமப்பகுதி பாடப்பெறும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) குழவி மருங்கினும் கிழவது ஆகும்-குழவிப் பருவத்தும் காமப்பகுதி கூறல் பெறும் (அவர் விளையாட்டு மகளிரொடு பொருந்தியக் கண்)

**உதாரணம்**

''வரிப்பந்து கொண்டொளித்தாள் வாள்வேந்தன் மைந்தா
அரிக்கண்ணி அஞ்சி அலற—எரிக்கதிர்வேல்
செங்கோலன் நுங்கோச் சினக்களிற்றின் மேல்வரினும்

எங்கோலம் தீண்டல் இனிது.''*

(வெண்பா. பாடாண்-50)

(24)

## நச்சினார்க்கினியர்

84. குழவி.........தாகும்.

இது முன்னிற் சூத்திரத்திற் பக்குநின்ற காமத்திற்கன்றிப் 'புரைதீர் காம' (81)த்திற்குப் புறனடை கூறுகின்றது.

இதன் பொருள்:- குழவி மருங்கினும் கிழவதாகும்—குழவிப் பருவத்துங் காமப்பகுதி உரியதாகும் என்றவாறு.

'மருங்கு' என்றதனான் மக்கட் குழவியாகிய ஒருமருங்கே கொள்க; தெய்வக்குழவி யின்மையின். இதனை மேலவற்றோ டொன்றாது வேறு கூறினார், தந்தையரிடத்தன்றி[1] ஒரு திங்களிற் குழவியைப் பற்றிக் கடவுள் காக்க என்று கூறுதலானும், பாராட்டுமிடத்துச் செங்கீரையுந் தாலுஞ் சப்பாணியும் முத்தமும் வரவுரைத்தலும், அம்புலியுஞ் சிற்றிலுஞ் சிறுதேருஞ் சிறுபறையு மெனப் பெயரிட்டு வழங்குதலானுமென்பது.

இப்பகுதிகளெல்லாம்[2] 'வழக்கொடு சிவணிய' (86) என்னுஞ் சூத்திரத்தாற் பெறுதும். இப்பருவத்துக்கு உயர்ந்த வெல்லை மூவகை வருணத்தாரும் இருபிறப்பாளராகின்ற பருவமாம். வேளாளர்க்கும் மூவகையோர்க்குரிய பருவமே கொள்க. குழவிப் பருவங் கழிந்தோர் அது வேண்டியக்காலும் அக்குழவிப் பருவமே கருதிப் பாடுகவென்றற்குக் 'கிழவதாகு' மென்றார். இதற்குப் பரிசில் வேட்கை அக்குழவிக்கணன்றி அவன் தமர்க்கண்ணுமா மென்றுணர்க.[3]

---

* வாள் வேந்தன் மகனே! செவ்வரிபரந்த கண்ணுடைய இவள் அஞ்சி அலறும்படிக் கட்டிப் புனைந்த பந்தைக் கொண்டு ஒளித்தாய்; இனி செங்கோலனாகிய நும் அரசன் ஏற்ற யானைமீது நீ ஏறித் தோன்றி வந்தாலும் எம் அழகைத் தொடாதே பந்துகொண்டொளித்தாய் என்றதனால் குழந்தைப் பருவம் கொள்க

1. தந்தையரிடத்துக் குழந்தையைக் காக்க எனக் கூறுதல் இல்லாமல்.

2. காப்பு செங்கீரை முதலிய பகுதிகள் எல்லாம்.

3. குழந்தையிடம் பரிசில் வேண்டுதல் மட்டுமன்றிக் குழந்தையின் சுற்றத்தாரிடத்தும் வேண்டுதலாம்.

(உ-ம்) ''அன்னா யிவனொருவ னந்தரத்தா னானென்றான்
முன்ன மொருகான் மொழியினான்—பின்னுங்
கலிகெழு கூடலிற் கண்ணீடி வந்து
புலியாய்ப் பொருவான் புகும்.''[4]

அந்தரத்தானா னென்றான் அம்புலிவேறாயும் ஒருகாலத்தே விளையாட்டு நிகழ்த்துமென. இது மதுரையிற் பிட்டு வாணிச்சி மகற்கு மங்கலக் குறிப்பாற் சான்றோர் கூறியது.[5]

(29)

## சோம. இளவரசு

சூத்திரம் : 29

''குழவி..............தாகும்''

கருத்து :- இது, புரைதீர் காமம் புல்லிய வகைத்தாய பாடாண் திணைப்பகுதி மிக்கிளஞ் சிறார் மாட்டும் சார்த்திப் பாடப்பெறுமென்று கூறுகிறது.

பொருள் : குழவி மருங்கினும்—காமஞ்சாலாச் சிறாரிடத்தும்; கிழவதாகும்—புரைதீர் காமம் புல்லிய பாடாண் புலனெறி வழக்கிற்குரியதாகும்.

குறிப்பு : உம்மை சிறப்புக் குறிப்பது. காதற் செவ்வி கருத வொண்ணாப் பேதைப் பருவச் சிறார் மாட்டும் நற்காமப் பாடாண் திணை புலனெறி வழக்காற்றில் உரிமை கொள்ளும் என்பது கருத்து. காமவுணர்வு குழவிக்கின்றெனினும், அக்குழவி மாட்டுத் தூய காதல் கொள்வாரன்புப் பெற்றி பற்றிய பாடாண் அக்குழவியர்மேல் சார்த்தி வருவதே இதிற் கூறப்படுவது. காமப் பருவமுடையார் சிறாரைக் காதலிக்குங் கைக்கிளைப் பாடாண் புரைதீர்

4. அன்னாய்! முன் ஒரு தடவை இவன், நான் வானில் உள்ள திங்களஞ் செல்வன் ஆவேன் என்றான். பின்னும் கூடலில் நீண்டு வந்து புலிபோலப் பொருவதற்குப் புகுவான். இப்பாடல் காப்பு முதலிய பத்து பருவங்களுள் ஒன்றிலும் சேரவில்லை. குழந்தையைப் பற்றியதாக மட்டும் கொள்ளலாம். அப்படியாயின் இளம்பூரணர் கருத்துக்கே இது உதாரணமாம். (அம்புலி—திங்கள். இவனும் புலியாய் பொரும்.)

5. இப்பாடல் விவரம் தெரியவாராமையின் இவ்விளக்கம் பொருத்துதற்கேற்றதாய் இல்லை.

காமம் புல்லிய பாடாணா யடங்கும் பெற்றி மேலே கூறினார்; அத்தூய காதலால் குழவியர்பாற் சாரும் பாடாண் பகுதியை இங்குக் கூறினார்; அதனாலிது கூறியது கூறலாகாது. இதற்குச் செய்யுள் வருமாறு :-

''பொன்திகழ்தன் மார்பென் புறந்தோயச் சாய்ந்
தென்கண்
தன்காந்த ளாற்பொத்தித் தான்சிரிக்கும்—முன்வந்தென்
கன்னத்தை முத்திக் கழுத்தைக்கை யாற்றழுவும்
என்னத்தன் என்வாழ் வினி.''

இது காமஞ்சான்ற பெண்ணியலாள் அஃதுணரா ஆண் மகவை யன்புசெய்து பாராட்டும் பாடாணாகும்.

இனி, காமஞ் சாலா இளமையோள்வயின் காளைப் பருவத் தலைவன் தூய காதல் பாடாணாதற்குச் செய்யுள் :-

''வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்தோள்
பேரெழில் மலருண்கட் பிணையெழின் மானோக்கிற்
காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதற்
கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையு துசுப்பினாய்!
நேர்சிலம் பரியார்ப்ப நிரைதொடிக்கை வீசினை,
ஆருயிர் வெளவிக்கொண் டறிந்தீயா திறப்பாய்கேள்
உளனாவென் னுயிரையுண் டுயவுநோய் கைம்மிக
இளமையா லுணராதாய்! நின்தவ றில்லானும்,
களைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்!
...........................................................
ஒறுப்பின்யா னொறுப்பது நுமரையான் மற்றிந்நோய்
பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் பொலங்
குழாய்!
மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி
நிறுக்குவன் போல்வல்யான், நீபடு பழியே.''

—கலி-58

இதில், காமஞ்சாலாச் சிறுமிபாற் புரைதீர் காதல் கூர்ந்த தலைவன் அவள் இளமையும் உயிர் வெளவும் எழிலும் பாராட்டு தலால், இது காதற் பாடாணாயிற்று.

இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருள் பொருந்தாது. பிள்ளைத்தமிழ் போன்ற பிற்காலப் பிரபந்தப் பகுதிகளைக் குறிப் பதிச் சூத்திரம் என்பவரவர். அது செய்யுளியலிலன்றி ஈண்டுக்

கூறற்பாற்றன்மையானும், அத்தகைப் பிரபந்த வகைகள் தொல்காப்பியர் காலத்தின்மையானும், அது கருத்தன்மை வெளிப்படை. இளம்பூரணரவ்வாறு கொள்ளாமையறிக.

(29)

## சிவலிங்கனார்

இச்சூத்திரமும் பாடாண் பகுதி எட்டனுள் ஒன்று கூறுகின்றது.

(இ-ள்) குழந்தையிடத்தும் பாடாண் பாடல் உரிமையுடையதாகும் என்றவாறு.

காமப் பகுதிக்கு அடுத்து இச்சூத்திரம் கூறப்படுதலின் குழந்தையாவது தெய்வக் குழந்தையும் மக்கட் குழந்தையும் கொள்ளப்படும். அக்குழந்தைகள் பால் காமம் (அன்பு) கொண்டு பாடப்படுவதும் பாடாண் திணைப்பாற்படும் என்பதாம். பிற்காலத்துப் பாடப்பட்ட பிள்ளைத்தமிழ் நூல்கள், குழந்தைகளையன்றி இறைவனையும் மக்களுள் அரசர் முதலியவரையும் குழந்தையாகக் கொண்டு பாடப்பட்டனவாம்.

83. ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப
வழக்கொடு சிவணிய வகைமை யான.

(25)

ஆ. மொ.: இல.

85. It is said that it is entitled to appear with the village also.

86. The above said themes must conform to the usage of literature and people.

பி. இ. நூ.

பு. வெ. மா. 9

ஊரின் கண்ணே தோன்றிய காமப்பகுதி.

## இளம்பூரணர்

83. ஊரொடு தோற்றமும்......யானை.

இதுவும் அது.

(இ-ள்) ஊரொடு தோற்றமும் உரித்து என மொழிப-ஊரின் கண் காமப்பகுதி நிகழ்த்தலும் உரித்து என்று சொல்வர் புலவர்,

வழக்கொடு சிவணிய வகைமையான - அது நிகழுங்காலத்து வழக்கொடு பொருந்தி நடக்கும் வகைமையின் கண்.

'ஊரொடு தோற்றம்' என்பது பேதை முதலாகப் பேரிளம் பெண் ஈறாக வருவது,[1] 'வழக்கு' என்பது சொல்லுதற்கு ஏற்ற நிலைமை. 'வகை' என்பது அவரவர் பருவத்திற்கு ஏற்கக் கூறும் வகைச் செய்யுள்.[2] உதாரணம் வந்தவழிக் கண்டு கொள்க.

(25)

## நச்சினார்க்கினியர்

85. ஊரொடு......மொழிப.

இது புரைதீர் காமத்திற்கன்றிப் பக்குநின்ற காமத்திற்குப் புறனடை கூறுகின்றது.

இதன் பொருள் :- பக்குநின்ற காமம் ஊரிற் பொது மகளிரொடு கூடிவந்த விளக்கமும் பாடாண்டிணைக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

'தோற்றமு' மென்றது அக்காமந் தேவரிடத்தும் மக்களிடத்தும் விளங்கும் விளக்கத்தை. அது பின்னுள்ளோர் ஏழு பருவமாகப் பகுத்துக் கலிவெண்பாட்டாகச் செய்கின்ற உலாச்செய்யுளாம்.

இச்சூத்திரத்திற்குத் தலைவர் பிறந்த ஊரும் அவர் பிறப்புமென்று பொருள் கூறின் மரபியற்கண்ணே 'ஊரும் பெயரும்' (629) என்னுஞ் சூத்திரத்து ஊர் பெறுதலானும், முன்னர் 'வண்ணப்பகுதி' (82) என்பதனாற் பிறப்புப் பெறுதலானும் இது கூறியது கூறலாமென்றுணர்க.

(30)

## நச்சினார்க்கினியர்

86. வழக்கொடு......யான.

இஃது 'அமரர் கண் முடியும்' (81) என்னுஞ் சூத்திர முதலியவற்றுக்கெல்லாம் புறனடை.

---

1. ஊரின் கண் தோன்றுதல்—ஊரில் பேதை முதலாக உள்ள ஏழு பருவத்தினரும் தோன்றுதல்.
2. அவரவர் பருவத்துக்கேற்பக் கூறும் செய்யுள் வகைகள் இளம்பூரணர் காலம்வரை இருந்ததுபோலும். அவர்க்கே உதாரணம் கிடைக்கப் பெறவில்லை.

இதன் பொருள் :- கடவுள் வாழ்த்தும் அறுமுறை வாழ்த்தும் முதலாக ஊரொடு தோற்ற மீறாகக் கிடந்தன வெல்லாஞ் சான்றோர் செய்த புலநெறி வழக்கோடே பொருந்திவந்த பகுதிக் கண்ணேயான பொருள்களாம் என்றவாறு.

எனவே, புலநெறி வழக்கின் வேறுபடச் செய்யற்க என்பது கருத்து.

கடவுள் வாழ்த்துப் பாடுங்கால், முன்னுள்ளோர் பாடிய வாறன்றி முப்பத்து மூவருட் சிலரை விதந்து வாங்கிப் பாடப் பெறாது.

இனி அறுமுறை வாழ்த்துப் பாடுங்கால், முன்னுள்ளோர் கூறியவாறன்றி ஆவிற்கினமாகிய எருமை முதலியனவும் வாழ்த்தப்படா.

இனிப் புரைதீர் காமம் புல்லிய வகையும், ஒருவன் றொழுங் குல தெய்வத்தை நோக்கியன்றி வரைவின்றிக் கூறப்படாது.

இனிச் செந்துறைப் பாடாண்பாட்டு, முன்னுள்ளோர் கூறிய வாறன்றி இறப்ப இழித்தும் இறப்ப உயர்த்தும் கூறப்படாது.

இனிக் காமப்பகுதிக் கடவுளரைக் கூறுங்காலும் பெண்டெய் வத்தோடு இயல்புடையாரைக் கூறினன்றி எண்வகை வசுக்கள் போல்வாரையும் புத்தர் சமணர் முதலியோரையும் கூறப் படாது.

இனி மக்களுள் ஒருவனைத் தெய்வப் பெண்பால் காதலித் தமை கூறுங்காலும் மக்கட் பெண்பாற்குக் காதல் கூறுங்காலும் முன்னோர் கூறியவாறன்றிக் கூறப்படாது.

இனிக் குழவிப் பருவத்துக் காமங் கூறுங்காலும் முன்னர்க் காப்பும் பின்னர் ஏனையவுமாக முன்னுள்ளோர் கூறியவாறன்றிக் கூறப்படாது.

இனி ஊரொடு தோற்றமும் பரத்தையர்க்கன்றிக் குல மகளிர்க்குக் கூறப்படாது.

இன்னுஞ் 'சிவணிய வகைமை' என்றதனானே முற்கூறிய வற்றோடே நாடும் ஊரும் மலையும் யாறும் படையுங் கொடியுங் குடையும் முரசும் நடைநவில் புரவியும் களிறும் தேரும் தாரும் பிறவும் வருவனவெல்லாங் கொள்க.

(உ-ம்) "முற்பற்றி னாரை முறைசெய்யிற் றானென்னைக்
கைப்பற்றக் கண்டேன் கனவினு—ளிப்பெற்றித்

தன்னைத் தனக்கே முறைப்படி னென்செய்யும்
பொன்னன் புன்னாட்டார் கோ.''[1]

''ஏரியு மேற்றத்தி னாலும் பிறர்நாட்டு
வாரி சுரக்கும் வளனெல்லாந்—தேரி
னரிதாளின் கீழுகூஉ மந்நெல்லே சாலுங்
கரிகாலன் காவிரிசூழ் நாடு.''[2]

(பொருநராறு)

இவை நாடும் யாறும் அடுத்து வந்தன.

''மலிதேரான் கச்சியு மாகடலுந் தம்மு
ளொலியும் பெருமையு மொக்கு—மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ தெல்லாம் படும்.''[3]

இஃது ஊர் அடுத்து வந்தது.

''மிதியற் செருப்பிற் பூழியர் கோவே
குவியற் கண்ணி மழவர் மெய்ம்மறை
பல்பயந் தழீஇய பயங்கெழு நெடுந்தோட்டு
நீரறன் மருங்குவழிப் படாப் பாகுடிப்
பார்வற் கொக்கின் பரிவேட் பஞ்சாச்
சீருடைத் தேஎத்த முனைகெட விலங்கிய
நேருயர் நெடுவரை யயிரைப் பொருந.''[4]

(பதிற்று-21)

---

1. புனல் நாட்டார் கோவாகிய பொன்னன் முன்னர்த் தன்னாற் பற்றப்பட்டவர்க்கு முறை (தண்டனை) செய்வானாயின் அவனை யான் கனவில் என் கைப் பற்றக் கண்டேனே இந்நிலையில் தனக்குத்தானே நீதி வழங்குவதாயின் என்ன நீதி வழங்கும்!
2. பிறவேந்தர் நாட்டில் ஏரியாலும் கடலாலும் பிற ஏற்ற மான விளைவுகளாலும் சுரக்கும் பெருவளங்கள் யாவும் கரிகாற் சோழனது காவிரியாறு சூழ்ந்த நாட்டின் வயல் களில் அரிதாளின் கீழ் உதிர்ந்து கிடக்கும் நெல் மணி களுக்கே சமமாக அமையும்.
3. காஞ்சியும் கடலும் ஒலியாலும் பெருமையாலும் ஒக்கும். ஆனால் காஞ்சியில் உள்ள பொருள் யாவும் கடலில் தோன்றா. கடலில் தோன்றுவன யாவும் காஞ்சியில் தோன்றும்.
4. மிதி என்னும் செருப்பு அல்லாத செருப்பு மலையுடைய பூழிய நாட்டவர் கோவே! வீரர் கவசமானவனே! பல பயன் பொருந்திய உச்சியையுடையதும் நீர்வழிப் போகாது கொக்கின் பார்வைக்கு அஞ்சாது பகைவர் போர்புரிய முடியாது குறுக்கிட்டுக் கிடந்த அயிரை என்னும் (மீனல்லாத) மலையையுடைய வீரனே!

இது மலையடுத்தது.

> ''ஆவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
> சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்.''[5]
>
> (புறம்-14)

இது படையடுத்தது.

> ''பூங்க ணெடுமுடிப் பூவைப்பூ மேனியான்
> பாம்புண் பறவைக் கொடிபோல—வோங்குக
> பல்யானை மன்னர் பணியப் பனிமலர்த்தார்க்
> கொல்யானை மன்னன் கொடி.''[6]
>
> (பு.வெ. பாடாண்-39)

இது கொடியடுத்தது.

> ''வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின்
> மாலை வெண்குடை யொக்குமா லெனவே.''
>
> (புறம்-60)

இது குடையடுத்தது.

> ''முரசு முழங்குதானை மூவருங் கூடி
> யரசவை யிருந்த தோற்றம் போல.''
>
> (பொருந-54-5)

இது முரசடுத்தது.

> ''சாலியரி சூட்டான் மடையடைக்கு நீர்நாடன்
> மாலு மழைத்தடக்கை மாவளவன்-காலியன்மா
> மன்னர் முடியுதைத்து மார்பகத்துப் பூணுழக்கிப்
> பொன்னுறைகற் போன்ற குளம்பு.''[7]

---

5. ''அம்பறாத் தூணியுடைய முதுகையுடையவனாய்த் தேர்மேல் இருந்து வில்லின் நாண் வடுவையுண்டாக்க அம்புகளை எய்து.''

6. மன்னன் கொடி பூவைப் பூமேனியான் (திருமால்) கருடக்கொடி போல் ஓங்குக.

7. சாலி நெல்லின் அரிசூட்டால் நீர்மடையடைக்கும் சோழ நாடனாகிய மாவளவனது குதிரை வேற்று மன்னரது முடியை உதைத்து அவர் மார்பு அணியை உழக்கியதால் அவற்றின் பொன்னிறம் படிந்து பொன்னுறைக்கும் கல் போலாயிற்று அதன் குளம்பு.

இது புரவியடுத்தது

''அயிற்கதவம் பாய்ந்துழக்கி யாற்றல்சால் மன்ன
ரெயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டாற் பனிக்கடலுட்
பாய்தோய்ந்த நாவாய்போற் றோன்றுமே
யெங்கோமான்
காய்சினவேற் கிள்ளி களிறு.''[8]
(முத்தொள்ளாயிரம்-யானைமறம்-17)

இது களிறடுத்தது.

''நீயே, யலங்குளைப் பரீஇயிவுளிப்
பொலந்தேர்மிசைப் பொலிவு தோன்றி
மாக்கட னிவந்தெழுதருஞ்
செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ.''
(புறம்-4)

இது தேரடுத்தது.

''மள்ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப.''
(புறம்-10)

இது தாரடுத்தது.

இவற்றுட் சிலவற்றை வரைந்துகொண்டு சின்னப்பூ[9] வென்று பெயரிட்டு இக்காலத்தார் கூறுமாறுணர்க.

(31)

## சோம. இளவரசு

சூத்திரம்: 30.

''ஊரொடு தோற்ற......வகைமை யான.''

கருத்து:- இது, பாடாண் திணையில் தலைமக்கள் ஊரும் உயர்குடிப்பிறப்பும் பாராட்டற்குரியன என விளக்குகிறது.

---

8. கிள்ளியின் களிறானது மன்னரது கதவைப் பாய்ந்து குலைத்து, எயில் கதவைக் கோட்டால் கோத்தெடுத்துக் கடலில் பாய்விரித்த கப்பல் போல் தோன்றும்.
9. சின்னப்பூ: அரசனின் நாடு ஊர்மலை முதலிய பத்து உறுப்புகளுள் சிலவற்றை நேரிசை வெண்பாவால் 100, 90, 70, 50, 30 பாடல்களாற் பாடப்படுவது.

பொருள்:- ஊரொடு தோற்றமும்— தலைமக்களின் ஊர்ச் சிறப்பும் உயர்குடிப்புறப்பும்; உரித்தெனமொழிப— பாடாண் திணையில் பாராட்டுக்குரிய எனக் கூறுவர் புறநூற்புலவர்; வழக் கொடு சிவணிய வகைமையான— அப்பாராட்டு புலனெறி வழக் கொடு பொருந்தும் பகுதிகளில்.

குறிப்பு:- ''ஒடு'' இரண்டில் முன்னது எண் குறிக்கும். பின்னது மூன்றாம் வேற்றுமையுருபு.

அதில், அடி இரண்டும் ஒரு சூத்திரமாயமைதல் பொருளடை வாற்றெளிவாகும். காலத்தால் முந்திய இளம்பூரணரும் அவ் வாறே கொள்ளுதலால், அதுவே பழைய பாடமாவது தேற்றம். இவற்றைப் பிரித்திருவேறு நூற்பாக்களாக்கிப் பொருந்தாப் புதுப் பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். தனித்துத் தன்னளவில் பின்னடி முடிந்த பொருளுதவாமை வெளிப்படை. புறத்திணை அல்லது பாடாண் வகை யனைத்திற்கும் பொதுவான புறனடை கூறுதல் கருத்தாயின், அவ்வகையனைத்துங் கூறிய பின் னிறுதி யிற் புறனடை கூறல் முறையாகும்; இன்னும் இதன் பின்னும் பாடாண் வகை கூறுவதால் ஈண்டிது பொதுப்புறனடை யாகாது.

அன்றியும் முதலடிக்கு இவர் கூறும் புதுப்பொருள் தமிழறமும் பழமரபும் அழியவரு மிழுக்காகும். ''ஊரிற் பொது மகளிரொடு கூடிவந்த விளக்கமும் பாடாண் திணைக்குரித்து'' எனக் கூசாது கூறுகிறார். பரத்தை ஒருத்தியே யன்றிப் பலரொடும் வாழ்வா ரிருக்கலாம். அன்னாரும் அவ்வாழ்வை நாணாமல் ஊரறியக்காட்டி அதைப் பாராட்டும் உயரொழுக்கமாகக் கருதும் பேதைமைக் காளாகார். அவ்வளவு நாணற்ற கீழ்மக்கள் ஊராயின், அவர் கயமையைப் பாடாண் திணைக்குரித்தெனப் புலவர் தலைவரான தொல்காப்பியர் கொள்ளார். அக்கயவர் வாழ்வு ''வரைவிலா மாணிழையார் மென்தோள் அளருழும் புரையிலாப் பூரியராம் திருநீக்கப்பட்டார் தொடர்பாக'' வெறுக்கப்படுவதே தமிழற மரபாயிருக்க, அதைப் புலவர் புகழ்ந்துபாடும் பீடுசான்ற பாடாண் திணைப் பகுதியாக நச்சினார்க்கினியர் கூறத்துணிந்தது வியப் பாகும்; அத்துணிவு அவர் மதித்த ஒரு சில பிற்காலப் போலிப் புலவர் செய்யுட்போக்கையும், அவர் காலக் கயவர் சிலர் வாழ்க்கை யையும் நோக்கியவர் கொண்டார் போலும். சொற்றொடர் சுட்டும் செம்பொருளை விலக்குதற்கு அவர் கூறும் ஏதுக்கள் போதாமையும் வெளிப்படை. அதையுமாராய்வோம்.

''இச்சூத்திரத்திற்குத் 'தலைவர் பிறந்த ஊரும் அவர் பிறப்பும்' என்று பொருள் கூறின், (1) முன்னர் 'வண்ணப் பகுதி'

என்பதனால் பிறப்புப் பெறுதலானும் (2) மரபியற் கண்ணே 'ஊரும் பெயரும்' என்னும் சூத்திரத்து ஊர் பெறுதலானும், இது கூறியது கூறலாமென்றுணர்க.'' இவ் விரண்டேதுக்களும் பொருளற்றன.

(1) முதலில் ''வண்ணப் பகுதி'' என்பது செந்துறைப் பாட்டின் இன்னோசை வண்ண வகையைச் சுட்டுவதன்றி ஒருவர் பிறந்த வருணவகை குறியாமை ''வழங்கியல் மருங்கியன்'' எனு மேற் சூத்திரக் குறிப்புரையில் விளக்கப்பட்டது. ஆண்டது பாடாண் தலைமக்களின் குலப்பிறப்பைச் சுட்டாமை ஒருதலை. அன்றியும், 'வருணம்' பொதுவாக ஆரியநூற் சாதியாவதன்றி, ஒருவரின் உயர்குடிப் பிறப்பாகாது. பாடாணாதற்குத் தலைமக்களின் உயர்குடிப் பிறப்பே உரித்தாமன்றி, வாளா வருண வகை சுட்டல் போதாது. பிறப்பளவில் சிறப்புச் சொல்லி இறுமாக்கும் வருண வகை பழைய தமிழ்மரபுமன்று. ''ஆன்ற குடிப் பிறப்பே வேந்தவாம் பண்பாகத்'' தமிழறநூல் கூறும். ஆதலின், இதிற் பொலிவு சுட்டும் தோற்றச் சொல், பீடுடைய தலைமக்கள் பிறந்த குடிப்பெருமையைக் குறிப்பதல்லால், வேதங்கூறும் சாதியைச் சுட்டாது.

(2) இனி, ''ஊரும் பெயரும்'' எனும் மரபியற் சூத்திரம் நுதலும் பொருளும் இடஇயையும் வேறு; அச்சூத்திரமே இடைச் செருகல் என்பாருமுளர். இன்னும், பின் மரபியற் சூத்திரம் ஊர் குறிப்பதால் ஈண்டைக்கேற்ற ஊர் கொள்ளலாகாதெனின், ஆண்டுப் பெயரும் மரபியற் சூத்திரம் சுட்டுவதால் இங்கிப் பகுதியில் பெயர் குறிப்பதும் பிழையாதல் வேண்டும். அதற்கு மாறாகப் பாடாண் தலைமக்களின் பெயர் கூறப்பெறுமென்பது இதையடுத்து ''மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே'' எனக் கூறப்படுகிறது. ஆகவே, பாடாண் தலைவரின் ஊரும் உயர்குடிப் பிறப்பும் பெயருமே அத்திணைப் பகுதியில் கூறுதல் மரபென்பதே இதுவும் இதையடுத்த பின் சூத்திரமும் விளக்கும் பொருளாதல் தேற்றமாகும். தலைமக்கள் அகத்திணைப் பகுதியில் ''சுட்டி யொருவர் பெயர் கொளப்பெறார்'' என விலக்கியதால், புறத்தில் புரைதீர் காமம் புல்லிய பாடாண் பகுதியில் அவர் ஊரும் குடிப் பிறப்பும் பெயரும் சுட்டுதல் விலக்கின்றென்பதை ஈண்டைக்கேற்ப இப்புறத்திணை யியலில் இயையக் கூறினர் இந்நூலார்.

இதற்கிளம்பூரணர் உரையும் சிறவாது. ''ஊரொடு தோற்றம்' என்பது, பேதை முதலாகப் பேரிளம் பெண்ணீறாக வருவது'' என்றவர் கூறினர். மலைகலங்கினு நிறை நிலை

கலங்காத் தமிழ் மகளிரெல்லாம் ஓரே திலனுலாவில் உயிரினும் சிறந்த தம் நாணினுஞ் சிறந்த கற்பிழந்து காமவெறி கொள்ள வைத்துப் பழிபிறங்கும் பிற்காலப் பிரபந்தங்களை அமைப்பதற்கு இப்பொருள் கொண்டார் போலும். நிறையுடைப் பெண்டிர் பிறர் நெஞ்சு புகார், அதற்கு மாறாகத் தந்நெஞ்சிற் பிறரைப் புகுத்துவர் பெண்டிரெனும் புலனெறியைத் தொல்காப்பியர் நூலுட் காண முயல்வது ''சுடருள் இருள் காண்ப'' தாகும்.

ஊர் குறித்தல் உரித்தாகும் பாடாண் பாட்டு வருமாறு;

''அணியிழையார்க் காரணங் காகிமற் றந்நோய்
தணிமருந்துந் தாமேயா மென்ப—மணிமிடைபூண்
இம்மென் முழவி னெயிற்பட்டின நாடன்
செம்மல் சிலைபொருத தோள்.''

(சிறுபாணுரையீற்றுப் பழைய பாட்டு)

''கூடற் பெருமானைக் கூடலார் கோமானைக்
கூடப் பெறுவேனேற் கூடலென்று—கூடல்
இழைப்பாள்போற் காட்டி யிழையா திருக்கும்
பிழைப்பிற் பிழைபாக் கறிந்து.''

(முத்தொள்ளாயிரம்-73)

இனித் தோற்றம் அதாவது குடிப்பிறப்பினுயர்வுரித்தாகும் பாடாண் பாட்டு:-

''பிணிகிடந் தார்க்கும் பிறந்தநாட் போல
அணியிழை யஞ்ச வருமால்—மணியானை
மாறன் வழுதி மணவா மருண் மாலைச்
சீறியோர் வாடை சினந்து.''

(முத்தொள்ளாயிரம்-95)

''வளையவாய் நீண்டதோள் வாட்கணாய் அன்னை
இளையளாய் மூத்திலள் கொல்லோ—தளையவிழ்தார்
மண்கொண்ட தானை மறங்கனல்வேல் மாறனைக்
கண் கொண்டு நோக்கலென் பாள்.''

(முத்தொள்ளாயிரம்-77)

இன்னும்,

''வழுவிலெம் வீதியுள் மாறன் வருங்காற்
றொழுதேனைத் தோணலமுங் கொண்டான்—
இமிழ்திரைக்

> கார்க்கடற் கொற்கையார் காவலனுந் தானேயால்
> யார்க்கிடுகோ பூச லினி.''
>
> (முத்தொள்ளாயிரம்-54)

எனவரும் காமப்பாடாண் வெண்பாவில், ''கொற்கை'' என்றூரும், ''மாறன்'' என்றுயர் குடிப்பிறப்பாந் தோற்றமும் ஒருங்குவருதலும் காண்க.

(30)

## சிவலிங்கனார்

ஊரொடு......யானை

இச்சூத்திரம் உலாவருதலும் பாடாண் பகுதியிற் சேரும் எனக் கூறுகின்றது.

(இ-ள்) ஊரில் தோன்றுதல் பற்றிப் பாடுதலும் பாடாண் திணைக்கு உரியதாகும் என்பர் என்றவாறு.

ஊரில் தோன்றுதலாவது உலாவருதல். இது அரசர்க்கும் கடவுளர்க்கும் உரியதாகும். இதற்குப் பழைய உதாரணம் இறந்தது. அரசர் உலாவாக முத்தொள்ளாயிரமும் கடவுளர் உலாவாகத் திருக்கயிலாய ஞானவுலா முதலியனவும் பிற்காலத்து எழுந்தனவாம். காமப்பகுதி அதிகாரத்தான் உலாவிலும் காமப் பகுதி கொள்ளப்படும் என்க. அது பேதை முதலிய பருவத்தார் காமுற்றதாகக் கூறுவது.

இளம்பூரணர், பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் எழுவகைப் பருவ மாதரும் ஊரில் தோன்றுதல் ஊரொடு தோற்றமாம் என்றார். அவர் கருத்துப்படி இன்று காணப்படும் உலா நூல்களை மட்டும் குறியாமல் தனித்தனிப் பருவ மகளிர் காமம் பற்றித் தனித்தனிச் செய்யுள்களில் பாடப்படுவனவும் உலாச் செய்யுள் எனப்பட்டன என்பதும் ஒவ்வொரு பருவத்துக்கும் தனித்தனிச் செய்யுள் வகை உண்டு என்பதும் பெறப்படும்.

**84. மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே.**

(26)

ஆ. மொ. : இல.

**87. They placed the way to be followed from the names of fame.**

## இளம்பூரணர்

84. மெய்ப்பெயர்.........வழியே

இதுவும், பாடாண்பாட்டிற்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே- மேற் சொல்லப்பட்டனவும் இனிக் கூறுகின்றனவும் ஒருவற்குக் காரண மாகி மெய்ப் பெயராகி வரும் பொதுப்பெயரான் அன்றி இயற் பெயரின் பக்கத்து வைத்தனர் நெறிப்பட.*

(26)

## நச்சினார்க்கினியர்

87. மெய்ப்பெயர்......வழியே.

இது சுட்டி ஒருவர் பெயர் கொள்ளும் பாடாண்டிணைக்குரிய மெய்ப்பெயர்களிடமாகவும் அகத்திணை நிகழுமென்கின்றது.

இதன் பொருள் :- மெய்ப்பெயர் மருங்கின்-புறத்திணைக் குரிய மெய்ப்பெயர்களின் மருங்கே, வழி வைத்தனர்—புறத்திணை தோன்றுதற்கு வழியாகிய அகத்திணையை வைத்தார் முதனூலா சிரியர்கள் என்றவாறு.

என்றது எனக்கும் அதுவே கருத்தென்பதாம். வழியென்பது, ஆகுபெயர்.[1] மெய்ப்பெயராவன:-புறத்திணைக்குரிய பாட்டுடைத் தலைவர் பெயரும் நாடும் ஊரும் முதலியனவாம்.

இதன் கருத்துச் 'சுட்டியொருவர்ப் பெயர் கொளப் பெறாஅர்' (54) என அகத்திணையியலுட் கூறினமையிற் கிளவித் தலைவன் பெயரை மெய்ப்பெயராகக் கொள்ளாது ஏனைப் புறத் திணையாற் கொண்ட மெய்ப்பெயரிடம் பற்றி அகத்திணைப் பொருணிகழவும் பெறுமென்பதாம்.

---

* பாடாண் பாடல்களில் வரும் பெயர்கள் திணை நிலைப் பெயர்களாகிய பொதுப் பெயர்களால் அன்றி ஒருவர்க்கே யுரிய இயற்பெயரால் பாடப்படும் என்பது கருத்து.

1. வழி என்பது வழியாகிய அகத்திணைக்கு ஆயிற்று- ஆகு பெயர்.

உதாரணம் :- 'அரிபெய் சிலம்பின்' என்னும் (6) அகப் பாட்டினுள் தித்தனெனப் பாட்டுடைத் தலைவன் பெயரும், பிண்ட நெல்லினென நாடும், உறந்தையென ஊரும், காவிரி யாடினையென யாறுங் கூறிப் பின்னர் அகப்பொருள் நிகழ்ந்த வாறுங் கொள்க.

'மருங்கு' என்றதனாற் பாட்டுடைத்தலைவன் பெயர் கூறிப் பின்னர் நாடு முதலியன கூறன் மரபென்று கொள்க. அதுவும் அச்செய்யுளாற் பெற்றாம்.

''நிலம்பூத்த மரமிசை நிமிர்பாலுங் குயிலெள்ள
நலம்பூத்த நிறஞ்சாய நம்மையோ மறந்தைக்க
கலம்பூத்த வணியவர் காரிகை மகிழ்செய்யப்
புலம்பூத்துப் புகழ்பாணாக் கூடலுமுள்ளார் கொல்.''[2]
(கலி-27)

இதனுட் கூடலிடத்துத் தலைவியென்பது கூறினார்.

''கன்மிசை மயிலாலக் கறங்கியூ ரலர்தூற்றத்
தொன்னல நனிசாய நம்மையோ மறந்தைக்க
வொன்னாதார்க் கடந்தடூஉ முடிவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும்
விரும்பார்கொல்.''[3]
(கலி-27)

இதனுள் வென்வேலான் குன்றென மலை கூறினார்.

''திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த வென்னலம் வாடுவ தருளுவார்
நசைகொண்டு தந்நீழல் சேர்ந்தாரைத் தாங்கித்தம்
மிசைபரந் துலகேத்த வேதினாட் டுறைபவர்.''[4]
(கலி-26)

---

2. நிலத்தில் தோன்றி வளர்ந்த மரத்தின் மேலுள்ள குயில் இகழும்படி அழகுமிக்க நிறம் கெடுமாறு நம்மை அவர் மறக்க; ஆனால் அணிகலம் அணிந்த மகளிர் மகிழ்ச் சியையூட்டப் பலவிடமும் மகிழப் புகழ் குறையாத மதுரை யில் உள்ள தம் மனைவியையும் நினைந்து வாராரோ?
3. மலைமிசை மயில் ஆட ஊர் நம்மையலர் தூற்ற அதனால் நம் பழைய அழகு கெட நம்மை வேண்டுமானால் அவர் மறக்க; பகைவரைக் கொன்ற முருகனது பரங்குன்றில் தாம் விளையாடுவதையும் மறந்தாரோ?
4. விரும்பித் தன் நிழலை அடைந்தவரைக் காத்துப் புகழ்ப் பரக்க அயல் நாட்டில் உறைபவராகிய தலைவர், யானி ருக்கும் திருமருத முன்றுறைக்கண் வந்து என் நலம் வாடுவதை நீக்கியருளுவர்.

இதனுள் ஆறு கூறினார்.

'புனவளர் பூங்கொடி' என்னும் (92) மருதக்கலியும் அது.

''கரியமலர் நெடுங்கட் காரிகைமுன் கடற்றெய்வங் காட்டிக் காட்டி
யரியசூள் பொய்த்தா ரறனிலரென் றேழையம்யாங் கறிகோ மைய
விரிகதிர் வெண்மதியு மீன்கணமு மாமென்றே விளங்கும் வெள்ளைப்
புரிவளையு முத்துங் கண்டாம் பல் பொதி யவிழ்க்கும் புகாரே யெம்மூர்.''

இது முதலிய மூன்றும் (சிலப்-கானல்-7) புகாரிற்றலைவி யெனக் கூறியவாறு காண்க.

இன்னுஞ் சான்றோர் செய்யுட்கள் இங்ஙனம் வருவனவெல் லாம் இதனால் அமைக்க. இக்கருத்தினாற் செய்த சான்றோர் தமக்கும் பாடாண்டலைவர்கண் நிகழ்ந்த ஒருதலைக்காமமேபற்றி அகத்திணைச் செய்யுள் செய்தாரேனும் 'தம், மிசைபரந் துலகேத்த வேதினாட் டுறைபவர்' (கலி-26) என்று இவை பாடாண்டிணையெனப் பெயர் பெறாவென்றற்கு இது கூறி னார்.[5]

(32)

**சோம. இளவரசு**

சூத்திரம் :- 81.

''மெய்ப்பெயர்...........வழியே''

கருத்து :- இது, புரைதீர்காமப் பாடாண் பகுதியிற் றலை மக்கள் பெயருங் கூறப்பெறு மரபுண்மை சுட்டுகிறது.

---

5. சான்றோர் அகத்திணைச் செய்யுளில் தம் தலைவர்பால் நிகழ்ந்த ஒருதலை அன்பு காரணமாக அவரை வைத்துச் செய்தாரேனும் அதாவது ''தம் புகழானது பரவி அத னால் உலகம் தம்மை ஏத்துமாறு அயல் தேயத்து உறைபவராயிருந்தாலும்'' என்பது போலத் தம் தலை வரைக் குறிப்பிட்டாலும் அச்செய்யுள் பாடாண் திணை எனும் பெயர் பெறாது என்பதற்காகவே இச்சூத்திரம் கூறினார்.

பொருள் :- மெய்ப்பெயர்—தலை மக்களின் உண்மைப் பெயரை; மருக்கில் வழியே வைத்தனர்—பாடாண் பகுதியில் நெறியாக அமைத்துக் கூறினர் புறநூற்புலவர்.

குறிப்பு ;- மருங்கு-பக்கம்; இங்கது பாடாண் பக்கம் குறிக்கும். அகத்திணைக்கு விலக்கப்பட்ட இயற்பெயர் காதற் பாடாண் புறத்திணையில் வருதல் புலனெறியாதலின், 'வழியே வைத்தனர்' என விளக்கப்பட்டது. ஈற்றேகாரம் அசை; "புற நூற் புலவர்" எனுமெழுவாய் அவாய் நிலையாற் கொள்ளப் பட்டது.

மெய்ப்பெயர் குறித்தற் குரித்தாம் பாடாண் பாட்டு :-

"நெடுவரைச் சந்தன நெஞ்சங் குளிர்ப்பப்
படுமடும் பாம்பேர் மருங்குல் — இடுகொடி
ஓடிய மார்ப னுயர் நல் லியக்கோடான்
சூடிய கண்ணி சுடும்."

(சிறுபாணுரையீற்றுப் பழையபாட்டு) (31)

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் "அமரர் கண் முடியும்" என்பது முதலாக மேற் சூத்திரங்காறும் கூறப்பட்ட பாடாண் பகுதிகள் யாவும் தலைவன் பெயர் சுட்டிக் கூறப்படும் என்கின்றது.

(இ-ள்) தலைமக்களின் இயற்பெயர்களைப் பாடாண் திணை வழியில் வைத்துக் கூறினர் புலவர் என்றவாறு.

அதாவது அமரர்கண் முடியும் அறு வகைப் பாடாண் முதல் ஊரொடு தோற்றப் பாடாண் வரை கூறியவற்றில் அகத்திணைப் பொருள் பொதிந்திருப்பதால் புறப் பாடாண் என்பது தோன்ற இயற்பெயர்களைச் சுட்டிப் பாடுதல் வேண்டும் என்பதாம்.

85. கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே.

(27)

ஆ. மொ. : இல.

88. The theme of 'Kodinilai', 'Kanthali' and 'Valli' these three being free of fault, occur with prayer to god as thought by poets

பி. இ. நூ.

பு. வெ. மா. 9

அமரர்கண் முடியும் அறுவகை யாகிய
கொடிநிலை கந்தழி வள்ளி குணஞ்சால்
புலவரை அவர்வயின் புகழ்ந்தாற்றுப் படுத்தல்

வீர-106

புகழ்ச்சி பரவல் குறிப்புக் கொடிநிலை கந்தழியே
இகழ்ச்சி மலிவள்ளி என்றிவை ஆறும் நெறிமுறையே
நிகழ்ச்சி மலைதரு பாடாண்பகுதி......

இல. வி. புற. 19

மூவர் கொடியுளும் ஒன்றொடு பொரீஇ
மேவர வுரைத்த வியன்கொடி நிலையும்
சோவினை யழித்த துளவவணி மாயோன்
மேவரு விறலினை வியந்தகந் தழியும்
எறிசுடர் வேலற் கிளகிய வுள்ளத்து
அரிமலர்க் கண்ணியர் ஆடிய வள்ளியும்......

## இளம்பூரணர்

85. கொடிநிலை கந்தழி......வருமே

இது, சார்ந்து வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வடு நீங்கு சிறப்பின் கொடிநிலை கந்தழி வள்ளி என்ற முதலன மூன்றும் — குற்றம் தீர்ந்த சிறப்பினையுடைய கொடிநிலை முதலாகச் சொல்லப்பட்ட முற்பட்ட மூன்றும். கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வரும்—பாட்டுடைத் தலை மகனைச் சார்த்தி வருங்காலத்துக் கடவுள் வாழ்த்தொடு பொருந்தி வரும்.

உதாரணம்

''பூங்கண் நெடுமுடிப் பூவைப்பூ மேனியான்
பாம்புண் பறவைக் கொடிபோல — ஓங்குக
பல்யானை மன்னர் பணியப் பனிமலர்த்தார்க்
கொல்யானை மன்னன் கொடி.''[1]

(வெண்பா - பாடாண்-39)

இது கொடிநிலை.

1. கொல்யானை மன்னன் கொடி பூவைப்பூ மேனியான் பாம்பு உண் பறவை (கருட)க் கொடிபோல ஓங்குக.

> ''அன்றெறிந் தானும் இவனால் அரண்வலித்து
> இன்றிவன் மாறாய் எதிர்வார்யார் — கன்றும்
> அடையார் மணிப்பூண் அடையாதார் மார்பின்
> சுடராழி நின்றெறியச் சோ.''[2]
>
> (வெண்பா - உழிஞை-7)

இது கந்தழி.[3]

வள்ளியிற் சார்த்து வருமாறு வந்தவழிக் கண்டு கொள்க. ''வந்தது கொண்டு வாராத துணர்த்தல்'' (தொல். மரபி-110) என்பதனால் புலவராற்றுப்படை முதலாகிய மூன்றும் சார்த்தி[4] வருமெனவும் கொள்க.

முருகாற்றுப் படையுள்,

> ''மாடவலி மறுகிற் கூடற் குடவயின்
> இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
> முள்தாள் தாமரைத் துஞ்சி.''
>
> (திருமுருகு. 71-73)

என்றவழி, ஒரு முகத்தாற் பாண்டியனையும் இதனுட் சார்த்தியவாறு காண்க.[5]

இனிப் பரவற்குச் சார்ந்து வருமாறு :- ''கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன்'' என்னுங் கலிப்பாட்டினுள்,

> ''அடுதிறல் ஒருவநிற் பரவுதும் எங்கோன்
> தொடுகழற் கொடும்பூண் பகட்டெழின் மார்பின்
> கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
> புயல்உறழ் தடக்கைப் போர்வேல் அச்சுதன்

---

2. அடையாதார் மார்பில் சுடரொடு கூடிய சக்கரம் நின்று எரிப்பச் சோ என்னும் அரணை அக்காலத்து அழித்தவனும் இவ்வேந்தனேயாவான்; ஆதலின் இன்று இவனுக்குப் பகையாய் எதிர்வார் யார்?

3. கந்துஅழி — அரண் அழித்தல்.

4. இயற்பெயரொடு சார்த்தி

5. கூடல் கூறலின் அதற்குரிய பாண்டியனைச் சார்த்தியதாகக் கொண்டார் இவர். இது பொருந்தாது. பாண்டியன் பாட்டுடைத் தலைவன் அல்லன்.

ஒன்று முதுகடல் உலகம் முழுவதும்
ஒன்றுபுரி திகிரி உருட்டுவோன் எனவே.''[6]

(யாப்-விரு-83-மேற்கோள்)

என்பதனுட் பாட்டுடைத் தலைமகனைச் சார்த்தியவாறு காண்க. பிறவும் அன்ன.

(27)

## நச்சினார்க்கினியர்

88. கொடிநிலை.........வருமே,

இது தேவரும் மக்களுமெனப் பகுத்த முறைமையானே அப்பகுதி யிரண்டுங் கூறி இன்னும் அத்தேவரைப் போல் ஒருவழிப் பிறக்கும் பிறப்பில்லாத தெய்வங்களும் பாடாண்டிணைக்கு உரியரென்கின்றது.

இதன் பொருள் :- கொடிநிலை — கீழ்த்திசைக்கண்ணே நிலைபெற்றுத் தோன்றும் வெஞ்சுடர் மண்டிலம், கந்தழி—ஒரு பற்றுக்கோடின்றி அருவாகித் தானேநிற்குந் தத்துவங் கடந்த பொருள், வள்ளி — தண்கதிர் மண்டிலம், என்ற வடு நீங்கு சிறப்பின் முதலன மூன்றும் — என்று சொல்லப்பட்ட குற்றந் தீர்ந்த சிறப்பினையுடைய முற் கூறப்பட்ட மூன்று தெய்வமும், கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே — முற் கூறிய அமரரோடே கருது மாற்றால் தோன்றும் என்றவாறு,

''பொய்தீ ருலக மெடுத்த கொடிமிசை
மையறு மண்டிலம் வேட்டனள் வையம்
புரவுக்கு முள்ளத்தே னென்னை யிரவுக்கு
மின்னா விடும்பை செய் தாள்.''[1]

(கலி—141)

---

6. பகைவரை அடும் திறலுடைய ஒருவனாகிய இறைவனே! கழலும் பூணும் மார்பும் கயல் வில்லுடன் கூடிய புலியும் தடக்கையும் வேலும் உடைய அச்சுதனாகிய அரசன் உலகம் முழுவதும் திகிரி உருட்டுவோனாக என வேண்டி நின்னைப் பரவுதும்.

1. உலகைக் காக்க ஊக்கமுடைய உள்ளத்தே னாகிய என்னைத் தன் பொருட்டுத் தோழியிடம் இரக்குமாறு ஊக்கிக் கொடிய துன்பத்தைச் செய்தவள் கீழ்த்திசையில் எழும் ஞாயிறு மண்டலத்தை விரும்புவது போன்ற தன்மையுடைய ளானாள்.

என்றவழிக் கீழ்த்திசைக்கண்ணே தோன்றும் மண்டில மென்றாற் போலக் கொடிநிலை யென்பதூஉம் அப்பொருள் தந்ததோர் ஆகுபெயர்.[2]

இனி எப்புறமும் நீடுசென்று[3] எறித்தலின்[3] அந்நீண்ட நிலைமை பற்றிக் கொடிநிலை யென்பாருமுளர்.[4]

> "குலவுமென் முலையள் கொடிக்கூந் தலளே."[5]
>
> (குறுந்—132)

என்றாற்போல. வள்ளியென்பதுவுங் கொடியை; என்னை? பன்மீன் தொடுத்த உடுத் தொடையைக் கொடியெனப் படுதலின் அத்தொடையினை இடைவிடா துடைத்தாதலின் அதனை அப் பெயராற் கூறினார்; 'முத்துக்கொடியெனவும் மேகவள்ளி யெனவுங்' கூறுமதுபோல.[6] கந்தழி அவ்விரண்டற்கும் பொது வாய் நிற்றலின் இடையே வைத்தார்.

இனி அமரரென்னும் ஆண்பாற் சொல்லுள் அடங்காத பெண் பாற் றெய்வமும் வள்ளியென்னுங் கடவுள் வாழ்த்தினுட் படுவன வாயின; பாடாணெனப் படாவாயினு மென்பது; என்னை? ஞாயிறு நெருப்பின்றன்மையும் ஆண்டன்மையும் உடைமை யானும், திங்கள் நீரின்றன்மையும் பெண்டன்மையும் உடைமை

---

2. கொடிநிலை — கீழ்த்திசையில் நிலைத்தல்-இது நிலைக் கும் ஞாயிற்றுக்காகியது. ஆகு பெயர்.

3. கொடி போல் நீண்டு சென்று.

   நீண்ட கூந்தலள்.

4. ஞாயிற்றைக் கொடிநிலை என்பாரும் உளர்.

5. கொடிக் கூந்தலள்—நீண்ட கூந்தலள்.

6. உடுத் தொடையைக் கொடி என்பர். அதனையுடைய திங்களும் கொடியெனப்படும். கொடியை வள்ளி என் பதும் உணர்த்தும். முத்துமாலை முத்துக்கொடி எனவும் மேகலை மாலை மேகவள்ளி எனவும் வழங்குவதுபோல உடுத் தொடை உடுக் கொடி எனவும் உடுவள்ளி எனவும் வழங்கப்படும். அதனால் வள்ளியுடைய திங்கள் வள்ளி எனப்பட்டது.

னானுமென்பது[7]. அல்லதூஉம், வெண்கதிர் அமிர்தந் தேவர்க்கு வழங்கலானும் வள்ளி யென்பதூஉமாம் என்பது.[8]

(உ-ம்) ''மேகத்தான் வெற்பா னிமையான் விழுப்பனியா
னாகத்தா னீமறைய நாட்கதிரே —யோகத்தாற்
காணாதார் நின்னை யலையாமை கட்டுரைப்பர்
நாணாத கண்ணெனக்கு நல்கு.''[9]

இது கொடி நிலை வாழ்த்து.

''சார்பினாற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ்
சார்பென நின் றெஞ்ஞான்று மின்பந் தகைத்தரோ
வாய்மொழியான் மெய்யான் மனத்தா னறிவிறந்த
தூய்மைதா மைதீர் சுடர்.''[10]

இது கந்தழி வாழ்த்து,

''பிறைகாணுங் காலைத்தன் பேருருவ மெல்லாங்
குறைகாணா தியாங்கண்டு கொண்டு — மறைகாணா

---

7. பாடாண் திணை பெண்பாற் குரியதன்று. அமரர் என்பது ஆண்பாற் றெய்வத்தை உணர்த்துவது. அதனால் பெண்பாற் றெய்வப்பாடல் வள்ளியுள் அடங்கும். ஞாயிறு வெம்மையது ஆண்பாலுள் அடங்கும். திங்கள் தண்ணியது பெண்பாலுள் அடங்கும்.

8. வள்ளி (கொடி) உடையது வள்ளி எனத் திங்களுக்குப் பெயராயிற்று எனக் கொள்வதேயன்றி அமிர்தத்தைத் தேவர்க்கு வழங்கும் வள்ளன்மையாலும் வள்ளி எனப் பெயராயிற்று என்பதும் ஆம்.

9. நாட் கதிரே! நின்னை யோக நெறியாற் காணாத மற்றையோர் நீ மேகத்தாலும் மலையாலும் கண் இமை மூடியதாலும் மிக்க பனியாலும் இராகுவாலும் மறையவே நின் அசையாத் தன்மையைப் பலவாறாகக் கதை கட்டி யுரைப்பர்; அதனால் எனக்கு நின்னைக் காணும் போது தாழ்வில்லாத கண்களைத் தருவாயாக.

10. மொழியாலும் உடம்பாலும் மனத்தாலும்அறிதற்கில்லாத தூய குற்றம் நீங்கிய சுடர்மயமான பொருளானது தான் ஒன்றைச் சார்ந்து தோன்றாது அருவமாய் எப்பொருட்கும் தான் சார்பாய் இருந்து எப்போதும் இன்பமயமாய் நிற்கும் தன்மையதாகும்.

தேய்ந்து வளர்ந்து பிறந்திறந்து செல்லுமென்
றாய்ந்தது நன்மாயை யாம்.''[11]

இது வள்ளி வாழ்த்து.

''தனிக்கணிற் பாகமுந் தானாளு மாமை
பனிக்கண்ணி சாவு படுத்துப் — பனிக்கணந்
தாமுறையா நிற்குமத் தண்மதிக்குத் தாயிலளென்
றியாமுரையா நிற்கு மிடத்து.''[12]

இது வள்ளிபாற்பட்ட பெண்பாற் கடவுள் வாழ்த்து.

(33)

## சோம. இளவரசு

**சூத்திரம். 32**

''கொடிநிலை காந்தள்......வருமே.''

கருத்து :- இது திணைகள் மக்கள் ஒழுக்கங்குறித்தே வருமாயினும், பாடாண்வகையி லொருசில தலைமக்கள் பாராட்டுடன் கடவுட் பராவலும் தழுவிவரு மரபு கூறுகிறது.

பொருள் :- கொடிநிலை, காந்தள், வள்ளி என்ற — கொடிநிலை காந்தள் வள்ளி என்னும் பெயருடைய; வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும் — போர்த்துவக்கமாம் வசையற்ற வெட்சியின் ''மறக்கடைக் கூட்டிய'' சிறப்பு வகை மூன்றை முதலாகக் கொண்டு வரும் பாடாண் பகுதி மூன்றும்; கடவுள் வாழ்த்தொடு கண்ணியவரும் — கடவுட் பரவுதலுடன் பொருந்திவரும்.

---

11. பிறையைக் காணும் போதெல்லாம் திங்களின் முழுவடிவெல்லாம் குறை காணாமல் யாம் கண்டு கொண்டேம். அதனால் வேதம் அதனைக் காணாது அது தேய்ந்து வளர்ந்து பிறந்து இறந்து செல்லும் என்று திங்களைப் பற்றி ஆய்ந்து கூறியது நல்ல பொய்யேயாம்.

12. மாமையொடு பனித்துளி (நீர்த்துளி) யும் உடைய கண்ணுடையளாகிய தலைவியைச் சாவுபடச்செய்து பனிக் கூட்டம் உறைந்து காணும் தண்ணிய மதியைத் தாய்க் குணம் இல்லாதவள் என்று யாம் உரைக்கும்போதே இறைவனின் தனிக் கண்களில் பாகமாகத் தான் இருந்து எவரையும் ஆளும். — இது திங்களையே பெண்ணாகக் கொண்டு கூறியது.

குறிப்பு.- ஈற்றேகாரம் அசை. பொதுவாகப் பாராட்டு நுதலும் பாடாணின் சிறப்பு வகை மூன்று. கடவுள் வாழ்த்தைத் தழுவி வருதல் குறிக்கக் கடவுள் வாழ்த்துக்கு ''ஒடு''க் கொடுத் துரைக்கப்பட்டது. போரைத் தொடங்குந் திணை வெட்சி; அதன் பொதுவகை ஆகோள்; சிறப்பு வகைகளுள் பாடாணாய்க் கடவுள் வாழ்த்துக் கண்ணுவன இதிற் குறித்த மூன்றுமேயாதலின் முற்றும்மை கூட்டப்பட்டது. இதிற் குறித்த மூன்றும் தம்மளவில் வெட்சி வகைகள். அவற்றை முதலாகக் கொண்டு வரும் பாடாண் பகுதி மூன்றே கடவுள் வாழ்த்தொடு வருமெனற்கு, ''முதலன மூன்றும்'' என்று கூறப்பட்டது. ''அகர முதல எழுத்தெல்லாம்'' என்றது போல, கடவுள் கண்ணிய பாடாண் வகை இதிற்குறித்த ''மூன்று முதலன'' எனக் கொள்க. ''முதலன'' ஈண்டுக் குறிப்பு வினை; ''முதலாகவுடையன'' என விரியும்.

இனி, கொடிநிலை முதலிய மூன்றையு ''முதலன'' என்றது, அவை ''அமர்கொள் மரபுத்திணை ஏழில் முதலாய வெட்சியில் போர்த்தொடக்க முதலில் நடைபெறுவன வாதலின்'' என்பாரு முளர்.

வெட்சி வகையாய் இதிற்குறித்த 'கொடிநிலை' முதலிய மூன்றும், அடுத்த சூத்திரம் வஞ்சிவகைக் 'கொற்ற வள்ளை' ஒன்றும், இங்கு முறையே அவ்வத் திணையடியாய்ப் பிறக்கும் பாடாண் வகையையே குறிக்கும் என்பதை இளம்பூரணர் நச்சினார்க்கினிய ரிருவரும் கூறுகின்றனர். ஆனால், இதன் முதலடியில், ''கொடிநிலை கந்தழி வள்ளி'' என்றிருவரும் பாடம் கொண்டு, கந்தழிக்கு வெவ்வேறு பொருள் கூறுவர். ''கந்தழி'' என்றொன்றை எத்திணைக்கும் துறையாகத் தொல் காப்பியர் கூறிலர்; யாண்டுமதை அவர் விளக்கவுமில்லை. பழைய சான்றோர் செய்யுட்களிலும் இப்பெயருடைய புறத்துறை எதுவும் பயிலாமையானும், இனைத்தென விளக்காததெதனையும் வாளா பெயரளவில் சுட்டி மயங்க வைப்பது தொல்காப்பிய ரியல்பன்றாதலானும், இதில் ''கந்தழி'' என்ற பாடம் பொருந் தாமை வெளிப்படை, அன்றியும், இதில் கடவுள் கண்ணிய பாடாணாய் முடியுமெனக் குறித்த மூன்றும் 'மறனுடை மரபிற்' போர் துவக்கும் புறவொழுக்காம் ஒரே தன்மையவென விளங்க ''முதலன மூன்றும்'' என்றொரு நிரலில் சுட்டப்படுதலானும் அவற்றுள் கொடிநிலையும் வள்ளியும் போர்த்துவக்கத்தில் நிகழும் வெட்சி வகைகளாய் முன் விளக்கப்பட்டன வாதலானும், அவற் றுடன் பொருந்த ஒருங்கு சுட்டப்படும் மற்றொன்று மலை

போலவே (இங்கு விளக்காமல்) முன் விளக்கப்பட்ட ''போர்த் துவக்க வெட்சி வகையாதல்' வேண்டுமாதலானும், இவ்வியலில் முன் வெட்சித்துறைகளுள் முதலில் முருகக் கடவுள் வாழ்த்துடன் போர் துவக்குவதாய் விளக்கப்பட்டது ''காந்தளா'' தலானும், அதை யிங்குச் சுட்டாது விட்டுக் கடவுள் வாழ்த்தொடு வரும் வெட்சிப் பாடாண் வகை 'முதலான மூன்றும்' என முற்றும்மை கொடுத்து முடித்தது குன்றக்கூறலெனும் குற்றமாமாதலானும் கடவுள் வாழ்த்தொடு பாடாணாய் முடியும் வெட்சியல்லாப் பிறவஞ்சி வகையை இதன்பின் வேறு சூத்திரத்திற் கூறுத லாலிங்கு சுட்டிய மூன்றும் வெட்சிவகையாதலே முறையாதலா னும், அத்தகைய வெட்சி வகை காந்தள் என்றன்றிக் கந்தழி யென முன் சுட்டப் பெறாமையானும், இதிற் கந்தழியிடத்தில் காந்தளே நிற்றற்கு அமைவுடைய பாடமாதல் வேண்டும்; நாளடைவில் பொருட் பொருத்தங் கருதாமல் ஏடு பெ ர்த் தெழுதும் பரிசால் அது சிதைந்து ''கந்தழி''யாகி, பிறகதன் பொருத்தமாராயா துரைகாரர் தத்தமக்குத் தோற்றியவாறு பொருளுரைக்க அப்பாடமே நிலைத்தது போலும். இயற் பொருத்தம் தேராமல் கண்டாங்குக் கந்தழிப் பாடம் கொண்ட வுரைகாரரும், அவருரையால் மயங்கிய பிறரும் அதன் பொருளும் பொருத்தமும் தெளிந்து துணியமுடியாமல் தம்முள் மாறுபட்டு மறுகுவதொன்றே அப்பாடத் தியைபின்மையைத் தெளிப்ப தாகும். இதை நச்சினார்க்கினியர் பாடாண் பரிசழித்து அருவான கடவுளாக்குவர்; அது பாடாண் புறத்துறையாகாமையை ஆன்றோர் பழைய செய்யுட்களில் ஆட்சியின்மை வலியுறுத்தும். இளம்பூரணர் கந்தழி யியல்பை விளக்காமல், ''அன்றெறிந் தானு'' மெனும் வெண்பாமாலைப் பாட்டைக் காட்டியமைவர். அப்பாட்டு உழிஞை வகையாதலொன்றே, வெட்சி வகை குறிக்குமிங்கது பொருந்தாமை துணியப் போதிய சான்றாம்.

இனி, (1) 'கொடிநிலை' வெட்சிப் பாடாணாய்க் கடவுள் வாழ்த்தொடு வருதற்குச் செய்யுள் வருமாறு :-

1. ''புள்ளும் வழிப்படரப் புல்லார் நிரைகருதிப்
போகுங் காலைக்
கொள்ளுங் கொடியெடுத்துக் கொற்றவையுங்
கொடுமரமுன் செல்லும் போலும்.''
(சிலப்பதிகாரம்—வேட்டுவவரி)

இதில், நிரைகருதிப் போதல் வெட்சியாதலும், அதற்குக் கொடியெடுத்து முன் செல்லுதல் ''கொடிநிலை'' யாதலும் காண்க.

(2) மாற்றார் நிரைகருதி மாறன் படைமறவர்
கூற்றிற் கொதித்தெழுந்தார் கோமான்சீர்-போற்றிக்
கயலுயர்த்திக் கொற்றவையைக் கைதொழுதார்
தங்கோன்
வியனுலகை வென்றாள்க வென்று.''

இதில், வெட்சிப் பாடாண் கடவுள் வாழ்த்தொடு மாறன் கயற் ''கொடிநிலை'' தழுவி வருதலறிக.

(ii) ''வெண்போழ் காந்தள் பாடாணாதற்குச் செய்யுள்:-

''வெண்போழ் கடம்பொடு சூடி யின்சீர்
ஐதமை பாணி யிரீஇக் கைபெயராச்
செல்வன் பெரும்பெய ரேத்தி வேலன்
வெறியயர் வியன்களம்.''

(அகம்-98)

இதில், வெட்சி வகைக் காந்தளில் முருகக் கடவுள் வாழ்த்து வருதலறிக. இன்னும்,

''கடம்பெறிந்து சூர்தடிந்த செவ்வேளின் கைவேல்
மடம்பெரியள் சிற்றிடைச்சி வள்ளி—தடவிழிவேற்
கஞ்சமகிழ் வோனைவெறி யாடி யயர்வோமால்
பஞ்சவன்கோல் பாராள்க வென்று''

எனும் வெண்பாவில் முருகக் கடவுள் வாழ்த்தோடு வெட்சி வகைக் காந்தள்-பாண்டியரின் பாடாணாய் வருதல் காண்க.

(iii) இனி, முருகனைப் பெண்டிர் பாடிப்பரவும் வெட்சி வகை வள்ளி பாடாணாதற்குச் செய்யுள்:-

''அமரகத்துத் தன்னை மறந்தாடி யாங்குத்
தமரகத்துத் தன்மறந் தாடுங்—குமரன்முன்
கார்க்காடு நாறுங் கண்ணிழைத்துக் காரிகையார்
ஏர்க்காடுங் காளை யிவன்.''

(நச்-உரைமேற்கோள்)

இதில், பெண்டிர் முருகனைப் பாடும் வள்ளி எனும் வெட்சித் துறை வருதலறிக. இனி, வள்ளி பாடாணாய் வருமாறு:-

''பெருங்கட் சிறுகுறத்தி பின்மறுகும் சேயோன்
அருங்குன்றம் பாடுதுநா மன்று-கருங்கடல்மேல்
வேல்விடுத்த வேப்பந்தார் மாறன் தமிழ்வேந்தன்
கோள்வளர வாழ்த்தெடுத்துக் கொண்டு.''

இது, மகளிர் முருகனைப் பாடிப் பாண்டியனைப் புகழ்ந்து பரவுதலால், வள்ளிப் பாடாணாதலறிக.

(32)

**சிவலிங்கனார்**

இச்சூத்திரம் பாடாண்பகுதி எட்டனுள் (20) கடவுள் வாழ்த்துப் பகுதியில் அடங்கும் மூன்று கூறுகின்றது.

(இ-ள்) குற்றத்தின் நீங்குதற்குரிய சிறப்பினையுடைய போர் தொடங்கு முன் நிகழ்த்தப் பெறுவனவாகிய கொடிநிலை கந்தழி வள்ளி என்ற மூன்றும் கடவுள் வாழ்த்துப் பகுதியொடு கருதவரும் என்றவாறு.

போர்மேற் செல்லுமுன் வீரர்களும் வேந்தரும் தம் கொடியினை உயர்த்தி அதற்கு வணக்கம் செய்வது கொடிநிலை எனப்படும். அக்கொடியின்கீழ் நின்று அரசன் வெற்றிபெறப் போர்புரியும் கொள்கையாகிய பற்று ஒன்று தவிர மற்றைப் பற்றுகளை அழித்துக்கொள்வது கந்தழி எனப்படும். வீரர் வெற்றியினை வேந்தர்க்குத் தருவோம் என்பதும், வெற்றி தரும் வீரர்க்கு வேந்தன் பரிசளிப்பதும் சிறப்பிப்பதும் ஆகிய செயல்கள் வள்ளி எனப்படும். இவை மூன்றும் அரசனுக்கும் வீரர்க்கும் வரலாம் வடு (தோல்வி) நீங்குதற்குரிய சிறப்பினையுடைமையாலும் போர் மேற் செல்லுதற்குமுன்னர் நிகழ்வன ஆதலினாலும் வடு நீங்கு சிறப்பின் முதலன மூன்று எனப்பட்டன. தெய்வத்தை முன் னிறுத்திக் கூறப்படுதலின் கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருவனவாயின.

கொடிநிலை—கொடியின் கீழ் நிற்றல். நின்று சூளுறவு கொண்டு தெய்வமாக வாழ்த்துவதாயிற்று. கந்து-பற்றுக்கோடு. பற்றுக்கோடழிதலாவது வீரர் தம்முளத்துள்ள பற்றுகளை நீக்குதல். வள்ளி என்பது வள்ளல் தன்மை.

இம்மூன்றும் போர்த் தொடக்கத்தில் நிகழ்வன என்றாலும் போர் முடிவு பெறும் வரையிலும் உள்ளத்தே நிகழ்வன ஆதலின் இவையே வெற்றிக்குரிய முதற்காரணங்களாகும். எனவே முதலன என்பதற்கு முதற்காரணங்கள் எனினும் ஆம்.

இம்மூன்றின் வழிபாட்டின் நிலையையே பிற்காலச் சமய வாதிகள் தம்கோயிலின் முன்னிடத்தில் கொடிமரம், பலிபீடம், சைவராயின் நந்தி வைணவராயின் கருடன் என அமைத்துக் கொண்டனர். அடியவன் கொடி மரத்தின் கீழ்நின்று வீடுபெறும் எண்ணத்தை உறுதிப்படுத்திக் கொள்வதும் அதற்காகப் பற்று

களைப் பலிபீடத்தில் விடுவதும் இறையருள் பெற்றுத்தரும் நந்தி அல்லது கருடனை வள்ளலாக நினைந்து வணங்குவதும் செய்தல் வேண்டும் எனச் சமயவாதிகள் கொண்டனர்.

இம்மூன்றும் பற்றி மற்றையோர் கூறுவனவற்றைக் காண்போம்.

கொடிநிலை கொடியைப் புகழ்வது. கந்தழி—அரண் அழிப்புப் பற்றியது. வள்ளி—வள்ளிக் கூத்து பற்றியது. இவை கடவுளரொடு சார்த்தி வழங்கப்படின் கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வரும் என்பர் இளம்பூரணர். அங்ஙனமாயின் பிறதுறைகளையும் கடவுளரொடு சார்த்தி வழங்கின் அவைகளும் கடவுள் வாழ்த்தொடு கண்ணியவரும் எனவாகும். அவை கூறப்படவில்லை.

கொடிநிலை என்பது கீழ்த்திசையில் தோன்றும் ஞாயிறு பற்றியது. கந்தழி என்பது பற்றுக்கோடற்ற தத்துவங் கடந்த பொருள். வள்ளி என்பது திங்கள் பற்றியது என்பர் நச்சினார்க்கினியர். கந்தழி தத்துவங்கடந்த பொருளாயின் அப்பொருள் பற்றிய பாடல் கடவுள் வாழ்த்துப் பாடல் ஆமேயன்றிக் கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருவதாகாது.

பாரதியார், மறங்கடைக்கூட்டிய துடிநிலை (4) என்பதை மறங்கடைக்கூட்டிய கொடிநிலை எனக்கொண்டு வெட்சித் துறைகள் கூறிய சூத்திரத்தில் (5) வெறியாட்டு வள்ளி என வருவனவற்றையும் சேர்த்து மூன்று எனக்கொண்டு அவையே முதலன மூன்று எனப்பட்டன என்பர். வெட்சிப்படலத்தில் முதலிற் கூறப்பட்டன என்பதற்கு ஏற்பத் துடிநிலை என்பதைக் கொடிநிலை எனத் திருத்திய அவர், இச்சூத்திரத்தும் கந்தழி என்பதைக் காந்தள் எனத் திருத்தினர். ஏன் எனின் கந்தழி வெட்சியிலோ வேறிடங்களிலோ கூறப்படவில்லை. தம் போக்குக்கு ஏற்பப் பாடம் திருத்தியது ஏற்புடைத்தன்று.

திருவள்ளுவரின் வான்சிறப்பு நீத்தார்பெருமை அறன் வலியுறுத்தல் என்னும் மூன்றும் கடவுள் வாழ்த்தையடுத்து வைக்கப்பட்டமை கண்டு அதற்கேற்பக் கொடிநிலை என்பது கீழ்த்திசையில் தோன்றும் மேகம் எனவும் கந்தழி என்பது நீத்தார் பெருமையுணர்த்துவது எனவும் வள்ளி என்பது வள்ளல் தன்மை பற்றிய அறம் உணர்த்துவது எனவும் கூறுவர் சிலர். கீழ்த்திசைக்கண் நிலைபெறுவது மேகம் என்பது உறுதிப்படாது. மேற்கும் மேகம் எழும். மற்றையவும் ஆய்வுக்குரியன.

சிலம்பில் வரும் ஞாயிறு போற்றல் திங்களைப் போற்றல் மாமழை போற்றல் ஆகியவற்றையே அம்மூன்றும் முறையே

குறிக்கும் என்பாரும் உண்டு. முதலன மூன்று என்றற்கு இவற்றுக்கு யாதோர் இயைபும் இல்லை என்பது நினைக்கத் தக்கது.

86. கொற்ற வள்ளை ஓரிடத் தான

(28)

ஆ. மொ. : இல.

89. The song of victory which is included in 'Vanji' finds a place (in the theme of 'Padan')

## இளம்பூரணர்

86. கொற்ற வள்ளை.........தான.

இதுவும், பாடாண்திணைக்கு உரியதோர் பொருள் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) கொற்ற வள்ளை ஓர் இடத்து ஆன — கொற்ற வள்ளையும் ஓர் இடத்துப் பாடாண்பாட்டாம்.

என்றது, துறைகூறுதல் கருத்தாயின் வஞ்சியாம்; புகழ்தல் கருத்தாயின் பாடாண்திணையாம் என்றவாறு.

உதாரணம்

''வல்லா ராயினும் வல்லுந ராயினும்
புகழ்தலுற் றோர்க்கு மாயோன் அன்ன
உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற
நின் ஒன்று கூறுவது உடையோன் என்னெனின்
நீயே, பிறர்நாடு கொள்ளுங் காலை அவர்நாட்டு
இறங்குக்கதிர்க் கழனிநின் இளைஞருங் கவர்க
நனந்தலைப் பேரூர் எரியும் நக்க
மின்னுநிமிர்ந் தன்னநின் ஒளிறிலங்கு நெடுவேல்
ஒன்னார்ச் செகுப்பினுஞ் செகுக்க என்னதூஉம்
கடிமரந் தடித லோம்பு நின்
நெடுநல் யானைக்குக் கந்தாற் றாவே.''[1]

(புறம்—57)

(28)

---

1. மாயோன் அன்ன புகழ்சால்மாற! நினக்கொன்று கூறுவன். என்னெனின், நீ பிறர்நாடு கொள்ளுங்காலை அவர் நாட்டு வயலை நின் வீரர் கவரினும் கவர்க; ஊர்

**நச்சினார்க்கினியர்**

89. கொற்ற வள்ளை.........தான.

இஃது எய்தாதது எய்துவித்தது. தேவர்க்கும் உரியவாம் ஒருசார் அப்பாடாண்டிணைக் கொற்றவள்ளை யென்றலின்.

இதன்பொருள் :- கொற்றவள்ளை — அதிகாரத்தாற் கைக் கிளைக்குப் புறனாய் வெட்சிமுதல் வஞ்சி யீறாகிய பாடாண் கொற்றவள்ளை, ஓரிடத்தான — மேற்கூறி நின்ற தேவர் பகுதிக் கண்ணதன்றி அவரின் வேறாகிய மக்கட் பகுதிக்கண்ணது என்றவாறு.

எனவே, உழிஞை முதலிய பாடாண்கொற்ற வள்ளை தற்றிளைஞருங் கூளிச்சுற்றமும் ஒன்றனை நச்சிப் புகழ்ந்து வாளாதே கூறுதலும், ஈண்டுக் கூறுகின்ற கொற்ற வள்ளை புலவன் ஒன்றனை நச்சி வெட்சி முதலிய ஏழனானும் புகழ்ந் துரைத்தலுமாயிற்றாதலிற் 'படையியங்கரவம்' (58) முதலாக வஞ்சியிற் 'குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளை' யீறாகக் கிடந்த பொருட் பகுதியெல்லாம் பாடாண்டிணையாகப் பாடுங்கால் மக்கட்கேயுரிய என்பதூஉம், உழிஞை முதலியவற்றைப் பாடாண் டிணையாகப் பாடுங்கால் அவை மக்கட்குந் தேவர்க்கும் ஒப்ப உரியவென்பதூஉங் கூறுதலாயிற்று. என்னை? அரசியலாற் போர்குறித்து நிரைகோடலும் மீட்டலும் மேற்செல்லும் வஞ்சியுந் தேவர்க் கேலாமையாயினும், அவுணரான் முற்றப்பட்ட துறக்கத் தினை அகத்துழிஞை யரணாக்கி மனுவழித் தோன்றிய முசுகுந்த

---

எரி கொளுவினும் கொளுவுக; நின் வேல் ஒன்னாரை அழிப்பினும் அழிக்க; ஆனால் எப்படியும் பகைவரது காவல் மரத்தை மட்டும் வெட்டுதலை விடுக, ஏன் எனின் அம்மரம் நின் களிறு கட்டிவைக்கும் கந்து மரமாக ஆகா. இப்பாடல் மாறனைப் புகழ்வதாகக் கொள்ளின் பாடாண் திணையாம். மாறன் புகழ் கிளத்தலோடு பகைவர் கடிமரம் தடிதலுக்கு இரங்குதலையும் கருதின் வஞ்சிக் கொற்ற வள்ளையாம்.

வஞ்சித் துறைக் கொற்ற வள்ளைக்கு இளம்பூரணர் தோற்ற கொற்றவன் அளிக்கும் நிறை எனப் பொருள் கூறியிருத்தலின் துறை கூறுதல் கருத்தாயின் வஞ்சியாம் என்றல் பொருத்தம் இன்று. இங்கு இவர் இப்படி எழுதிய தற்குக் காரணம் ''மன்னவன் புகழ் கிளந்து ஒன்னார் நாடு அழிவு இரங்கின்று'' என வஞ்சிக் கொற்ற வள்ளைக்கு ஐயனாரிதனார் கூறியதை உளம் கொண் டதே யாம்.

னோடு இந்திரன் காத்தாற் போல்வனவும் பிறவுத் தேவர்க்குக் கூறுதலான் அவரும் மதின் முற்றிய வழிப் போர் தோன்றுதலும் ஆண்டு வென்றி யெய்துதலும் உடையராதலிற் பாடாண் பொருட்கும் உரியாரென நேர்பட்டது.

இச்சூத்திரம் மக்கட் கெய்திய பொருண்மையை மீட்டுங்கூறி நியமித்ததாம்; ஆகவே, வெட்சிமுதல் வஞ்சியிற் கொற்றவள்ளை ஈறாய பொருண்மை, உழிஞை முதற் பாடாண்டிணைக்குரிய ராகி இடைபுகுந்த தேவர்க்காகாவென விதிவகையான் விலக்கிய தாம். எனவே, தேவர்க்கு உழிஞை முதலிய கொற்றவள்ளை ஆமென்பதூஉங் கூறினாராயிற்று.

கொடிநிலை முதலிய மூன்றற்கு மன்றிக் கடவுளெனப் பட்டாரை அதிகாரங்கொண்ட அளவே யாமென்றுணர்க.

(உ-ம்) ''மாவாடிய புல னாஞ்சிலாடா
கடா அஞ்சென்னிய கடுங்கண்யானை
யினம் பரந்தபுலம் வளம்பரப்பறியா
நின்படைஞர், சேர்ந்த மன்றங் கழுதை போகி
நீ, யுடன்றோர் மன்னெயி றோட்டி வையா
கடுங்கா லொற்றலிற் சுடர்சிறந் துருத்துப்
பசும்பிசி ரொள்ளழ லாடிய மருங்கி
னாண்டலை வழங்குங் கானுணங்கு கடுநெறி
முனையகன் பெரும்பா ழாக மன்னிய
வுருமுறழ் பிரங்கு முரசிற் பெருமலை
வரையிழி யருவியி னொளிறுகொடி நுடங்கக்
கடும்பரிக் கதழ்சிற ககைப்ப நீ
நெடுந்தே ரோட்டிய பிற ரகன்றலை நாடே.''[1]
(பதிற்று —25)

---

1. பல்யானை செல்கெழு குட்டுவனைப் பாலைக் கவுதம னார் பாடியது.—நீ இடிபோல் முழங்கும் முரசத்தோடு மலையில் அருவியிழிவது போல் கொடிகள் அசைய குதிரையாகிய புள் விரைவாகிய சிறகை அசைப்ப நெடிய தேரை ஓட்டிய பகைவர் நாடுகள், நின் குதிரைகள் பொருத வயல்கள் கலப்பைகளால் உழா வாயின; யானைகள் பொருத வயல்கள் வளம் பரப்புதலை அறியா வாயின. நின் படைஞர் சென்ற ஊர் மன்றங்கள் கழுதை பூட்டப்பட்டுப் பாழாயின; நின் பகைவர் பெரிய மதில்கள் தோட்டி முதலிய காவல் வைக்கப்படாவாயின; காற்று வீசலால் அழல் பற்றிய இடங்களில் காட்டுக் கோழி திரியக்கூடிய காடுகள் தீய்ந்து போன வழிகளும் ஆறலைப்போர் வாழ்கின்ற இடமும் ஆயின.

இது புலவன் பொருணச்சிக் கூறலிற் பாடாண்கொற்ற வள்ளை; 'வல்லா ராயினும் வல்லுந ராயினும்', 'காலனுங் காலம்' என்னும் (57,41) புறப்பாட்டுக்களும் அது.

(34)

**சோம. இளவரசு**

சூத்திரம் :- 33

''கொற்ற வள்ளை.........தான''

கருத்து :- கடவுள் வாழ்த்துக் கண்ணிய பாடாணாகும் வெட்சிவகை மூன்றை மேற் சூத்திரம் குறித்தது. இது, வஞ்சி வகைக் கொற்ற வள்ளையும் ஒரோ வழிக் கடவுள் வாழ்த்தொடு பாடாணாமெனக் கூறுகிறது.

பொருள் :- வெளிப்படை.

குறிப்பு :- முன் சூத்திரம் சுட்டும் வெட்சி வகை மூன்றும் பாடாணாங்கால் எப்போதும் கடவுள் கண்ணியே வரும். அவை போலாது வஞ்சி வகைக் கொற்றவள்ளை பாடாணாங்கால் ஒரோ விடத்து மட்டும் கடவுள் வாழ்த்தைத் தழுவி வரும். எனவே, ''வள்ளை'' கடவுள் வாழ்த்தின்றி மக்கள் சீர்த்தி மட்டுஞ் சுட்டிப் பாடாணாய் வரும் பெற்றிய தென்பது பெறப்படும். திணை வேறுபாட்டோடு இத்தன்மை வேறுபாடுடைமையாலும் வள்ளை மற்ற வெட்சி வகை மூன்று போலப் போர்க்கு முன் னிகழாமல் தொடங்கியபின் நிகழ்வதாலு மவற்றோடு சேர்க்காமல் பிரித்திதனைத் தனி வேறு நூற்பாவில் விளக்க நேர்ந்தது.

''களிறு கடைஇய தாட்
கழலுரீஇய திருந்தடிக்
கணை பொருது கவிவண்கை யாற்
கண்ணொளிர் வரூஉங் கவின்சா பத்து
மாமறுத்த மலர்மார்பிற்
றோல் பெயரிய எறுழ்முன்பின்
எல்லையு மிரவு மெண்ணாய், பகைவர்
ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்
கொள்ளை மேவலை யாகலின், நல்ல
இல்ல வாகுப, இயல்தேர் வளவ!
தண்புனல் பரந்த பூசன்மண் மறுத்து

மீனிற் செறுக்கும் யாணர்ப்
பயன்றிகழ் வைப்பிற் பிறரகன்றலை நாடே.''

(புறம்-7)

இது வஞ்சிவகைக் கொற்றவள்ளை; கரிகாற்சோழன் போர்ச் செலவின் புகழும் அவன் பகைவர் நாடழிவின் பரிவுங் கூறுதலாற் கடவுள் கண்ணா வஞ்சிப்பாடாணாயிற்று. இனிக் கொற்றவள்ளை, கடவுள் கண்ணிய பாடாணாதற்குச் செய்யுள்:-

''நேரார் நிலமழிய நீள்மதிலூர் தாமெரியப்
போர்மேல் வழுதிபடை போவதற்கு—கார்குறுதும்
நெற்றி விழியோனை நேர்ந்தவன்றாள் பாடுநாம்
கொற்றந் தரவுலக்கை கொண்டு.''

இதில், கண்ணுதற் கடவுளை வாழ்த்திப் போர்மேற் செல்லும் பாண்டியன் தமிழ்ப் படையைப் பாராட்டி நெற்குறும் பெண்டிர் பாடுதலாலிது வள்ளைப் பாடாணாதலறிக.

(33)

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் கொற்றவள்ளையும் ஒரு வகையில் கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வரும் என்கின்றது.

(இ-ள்) கொற்றவள்ளையும் ஓரிடத்துக் கடவுள் வாழ்த்தொடு கண்ணியவரும் என்றவாறு.

கொற்றவள்ளையும் என்பதன் உம்மை தொக்கது. ஓரிடமாவது கடவுளொடு சார்த்தி வரும் இடம். கடவுளொடு சார்த்தாது வரும் வள்ளைப்பாடல் வஞ்சிக் கொற்றவள்ளை எனப்படும்.

உதாரணம் 'நேரார் நிலமழிய'' என்னும் பாடல்.

**87. கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்
அடுத்தூர்ந் தேத்திய இயல்மொழி வாழ்த்தும்
சேய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குரைத்த கடைநிலை யானும்
கண்படை கண்ணிய கண்படை நிலையும்
கபிலை கணணிய வேள்வி நிலையும்
வேலை நோக்கிய[1] விளக்கு நிலையும்
வாயுறை வாழ்த்தும் செவியறி வுறூஉவும்**

1. வேலின் நோக்கிய — நச். பாடம்.

ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும்
கைக்கிளை வகையோடு உளப்படத் தொகைஇத்
தொக்க நான்கும் உளவென மொழிப.

(29)

ஆ. மொ. இல:

90. The theme of praising the giver (donor) and despising the uncharitable, the theme of 'iyanmoli valththu' where the bard riding near him praises the lord; the theme of 'Kadainilai' where the bard, being tried of his long travel tells the guard of the gate his arrival to be informed to the lord; the theme of 'Kanpadainilai' where the lord is advised to go to sleep; the theme of 'Velvinilai' where the gift of the cow is expressed; the theme of 'Vilakku nilai' where the lamp is being desired to burn brightly as straight as a spear; and the theme of giving advice to the king in the form of 'Vayural' 'Seviyarivuruu' 'Puranilai' and 'Kaikkilai' these all including the last four belong to the 'padan'.

பி.இ.நூ

பு வெ மா-9

பரிசில் துறையே இயன்மொழி வாழ்த்தே
கண்படை நிலையே...
மங்கல நிலையே விளக்கு நிலையே
கபிலை கண்ணிய புண்ணிய நிலையே
வேள்வி நிலையே......
நிகழ்ந்த காமப் பகுதியுள் தோன்றிய
கைக்கிளை வகையும்......
வாயுறை வாழ்த்தே செவியறி வுறூஉ

இல. வி. புற 21

கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்

இல. வி. புற-20

செய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குரைத்த கடைநிலை யானும்
..................

நெடுந்தேர்த் தானை நீறுபட நடக்கும்
கடுந்தேர் மன்னவன் கண்படை நிலையும்
.................
துளக்கமில் அரசன் வெற்றி காட்டும்
விளக்குநிலை விளம்பிய விளக்கு நிலையும்
அடரவிர் பைம்பூண் அரசன் தன்னைச்
சுடரொடு பொரூஉம் அத்துறைப் பகுதியும்
உவகையொடு வேந்தன் ஒலிமறை யவர்க்குக்
கபிலை தந்த கபிலை நிலையும்
அந்தமில் புகழான் அமரர் கவி முகப்ப
வெந்தீ வேட்ட வேள்வி நிலையும்
..................
மொழியும்எம் கடுஞ்சொல் முறையுளி நிற்பின்
வழிபயன் படூஉம்எனும் வாயுறை வாழ்த்தும்
புரையோர் நாப்பண் அவிதல் கடன்எனப்
பெரியோர் பேணிய செவியறி வுறூஉவும்
.................
வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தும்
..................
மருமலர்க் கோதை மடவரல் தலைவனை
விரிமலர்த் தாமம் விழைந்த கைக்கிளையும்

## இளம்பூரணர்

87. கொடுப்போர் ஏத்திக்...... மொழிப.

இது பாடாண் திணைக்குத் துறையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) 'கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தல்' முதலாக 'வேலை நோக்கிய விளக்கு நிலை' ஈறாகச் சொல்லப் பட்டனவும்; 'வாயுறை வாழ்த்து' முதலாகக் 'கைக்கிளை' உளப் பட்ட நால்வகையும் பாடாண் திணைக்குத் துறையாம் என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல் என்றது, கொடுப் போர் ஏத்தல் எனவும், கொடார்ப் பழித்தல் எனவும் கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல் எனவும் மூவகைப்படும்.

இதனாற் பெற்றது ஈவோரைப் புகழ்தலும், ஈயாதோரைப் பழித்தலும், ஈவோரைப் புகழ்ந்து ஈயாதோரைப் பழித்தலும் என்றவாறு.

கொடுப்போர் ஏத்தல் வருமாறு :

''தடவுநிலைப் பலவின் நாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாம்சில
அரிசி வேண்டினேம் ஆகத் தான்பிற
வரிசை அறிதலில் தன்னுந் தூக்கி
இருங்கூறு வளைஇய குன்றத்து அன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே அன்னதோர்
தேற்றா ஈகையும் உளதுகொல்
போற்றார் அம்ம பெரியோர்தங் கடனே.''[1]

(புறம் — 140)

''பாரி பாரி யென்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டீண்டு உலகுபுரப் பதுவே.''[2]

(புறம்—107)

கொடார்ப் பழித்தல் வருமாறு:

''ஒல்லுவது ஒல்லும் என்றலும் யாவர்க்கும்
ஒல்லாது இல்லென மறுத்தலும் இரண்டும்
ஆள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே
ஒல்லாது ஒல்லும் என்றலும் ஒல்லுவது

---

1. செந்நாப் புலவீர்! நாஞ்சில் மலை வீரனாகிய நாஞ்சில் வள்ளுவன் மடமையோன் ஆவான். ஏன்எனின், விறலியர் தோட்டத்திற் பறித்த கீரை உணவுக்குக் கொள்ளவேண்டிக் கொஞ்சம் அரிசி வேண்டினேம்; அவனோ பிறர் நிலைமை அறிதலால் தன் தகுதியையும் அறிந்து குன்றம் அன்ன களிறு எமக்குக் கொடுத்தான். அப்படிப்பட்டதான இவ்வளவு தான் கொடுத்தல் வேண்டும் என்று தெரியாத ஈகைக் குணமும் உண்டோ. பெரியோராய் இருப்போர் தம் கடப்பாட்டைக் கைவிட மாட்டார் என்பது அவன் செயல் மூலம் தெரியவருகிறது. —நாஞ்சில் வள்ளுவனை ஔவையார் பாடியது.

2. செந்நாப் புலவர்! பாரி பாரி என்று ஒருவனையே புகழ்வர். மாரியும் இவ்வுலகைப் புரப்பது உண்டு; பாரி ஒருவன் மட்டும் இல்லை.

இல்லென மறுத்தலும் இரண்டும் வல்லே
இரப்போர் வாட்டல் அன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயில் அத்தை
அனைத்தா கியர்இனி இதுவே எனைத்தும்
சேய்த்துக் காணாது கண்டனம் அதனான்
நோயில ராகநின் புதல்வர் யானும்
வெயிலென முனியேன் பனியென மடியேன்
கல்குயின் றன்னஎன் நல்கூர் வளிமறை
நாணலது இல்லாக் கற்பின் வாள்நுதல்
மெல்லியற் குறுமகள் உள்ளிச்
செல்வல் அத்தை சிறக்கநின் நாளே.''[3]

(புறம்—196)

கொடுப்போர் ஏத்திக் கொடார்ப்பழித்தல் வருமாறு:

''களங்கனி அன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவற் பாணர் உய்த்தெனக்
களறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
ஈகை அரிய இழையணி மகளிரொடு
சாயின் றென்ப ஆஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை அடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி

---

3. ஒருவனுக்குத் தன்னால் கொடுக்கக் கூடியதைக் கூடும் எனக்கொடுத்தலும் கூடாததை இல்லை என மறுத்தலும் அவன் முயற்சியிடத்து உறவுப் பகுதியாம். கொடுக்க இயலாததை இயலும் என்றலும் இயல்வதை இல்லை என மறுத்தலும் ஆகிய இரண்டும் இரப்பவரை வாட்டுதலாம்; அன்றியும் புகழ் குறைபடும் வழியுமாகும். நீ எமக்கு மறுத்தது நின் புகழ் குறைபடும் வாயில் ஆகுக. இதுவரை யாம் நெடுநாள் காணாத ஒன்றை நின்பால் கண்டேம்; நின் மக்கள் நோயின்றி வாழ்வாராக. யானும் வெயிலெனப் பாராது பனியெனத் தங்காது என் மனைவியை நினைந்து செல்வேன். நின் ஆயுள் வளர்க. —இது இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனை ஆவூர் மூலங்கிழார் பாடியது.

உரைசால் ஓங்குபுகழ் ஒரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே.''[4]

(புறம்—127)

இதனுள் ஏத்தப்பட்டவன் ஆய், பழிக்கப்பட்டவர் செல்வர்.

அடுத்து ஊர்ந்து ஏத்திய இயல்மொழி வாழ்த்தும்—வென்றியும் குணனும் அடுத்துப் பரந்து ஏத்திய இயல் மொழி வாழ்த்தும்.

அஃது, இயல் மொழி எனவும், வாழ்த்து எனவும், இயல் மொழி வாழ்த்து எனவும் மூவகைப்படும்.

## உதாரணம்

''ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும எமக்கே மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
இன்னாய் பெருமநின் ஒன்னா தோர்க்கே.''[5]

(புறம்—94)

இஃது இயல் மொழி.

''ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்

---

4. தன் நாடெல்லாம் பாணர்க்குக் கொடுத்து விட்டதனால் களிறு இல்லாதவனாகிய புல்லிய அடிமரம் உடைய வெளியிடத்துக் காட்டு மயில் கூட்டத்துடன் தங்கக் கொடுத்தற்கரிய தாலியை மட்டும் அணிந்த மகளிரொடு பொலி விழந்துளது ஆய் அண்டிரனின் அரண்மனை. சுவைக்க இனிதான சோற்றைப் பிறர்க்கு ஈதல் இல்லாமல் தாமே தம் வயிற்றுக்கு இட்டுப் புகழை நீங்கிய முரசுடைச் செல்வராகிய வேந்தரது அரண்மனை போல் ஆகாது அது.—ஆய் அண்டிரனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

5. பெரும! நீ ஊர்ச்சிறுவர்களுக்குத் தன் வெள்ளிக் கோட்டைக் கழுவ நீர்த்துறையில் படியும் யானை இனியதாவது போல எமக்கு நீ இனியை, நின் ஒன்னார்க்கு மதம்கொண்ட யானைபோல் கொடியையாவாய்—அதியமானை ஔவையார் பாடியது.

வழுவாய் மருங்கிற் கழுவாயும் உளவென
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ
காலை அந்தியும் மாலை அந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பாற்பெய் புன்கம் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு
இரத்தி நீடிய அகன்தலை மன்றத்துக்
கரப்பில் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ்சோறு ஆர்ந்த பாணர்க்கு
அகலாச் செல்வம் முழுவதுஞ் செய்தோன்
என்கோன் வளவன் வாழ்க என்றுநின்
பீடுகெழு நோன்தாள் பாடேன் ஆயின்
படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்
யானோ தஞ்சம் பெருமஇவ் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயின்
இமயத்து ஈண்டி இன்குரல் பயிற்றிக்
கொண்டல் மாமழை பொழிந்த
நுண்பல் துளியினும் வாழிய பலவே.''[6]

(புறம்—34)

இது வாழ்த்து.

---

6. ஆயிழை கணவ! ஆன்முலை அறுத்தோர்க்கும் மகளிர் கருச்சிதைத்தோர்க்கும் இருமுது குரவர்க்குத் தவறிழைத்த கொடுமையோர்க்கும் அவர் தம் குற்றத் துக்குப் பிழைக்கலாம் கழுவாய் உண்டு. ஆனால் ஒருவன் செய்த நன்றி கொன்றோர்க்கு உய்தியில்லை என அறநூல் பாடியது. காலையும் மாலையும் ஊர் மன்றத் திலிருந்து வரகுச் சோற்றினைத் தேனோடு கலந்து முயற்கறியொடு இனிய மொழிகளைச் சொல்லிச் சுற்றமொடு உண்ட பாணர்க்கு அகாலச் செல்வம் அளித்த எம் தலைவன் வளவன் வாழ்வானாக என்று நினது பெருமை மிக்க முயற்சியை யான் பாடேனாயின் காலை யில் கதிர்ச்செல்வன் தோன்ற மாட்டான். யான் எளிய னாவேன். இவ்வுலகத்தில் சான்றோர் நல்லது செய்த துண்டாயின் அதன் பயனாக மழைத்துளிகளிலும் பல்லாண்டு வாழ்வாயாக.—குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் பாடியது.

''ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரிளர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே.''7

(புறம்—9)

இஃது இயல் மொழி வாழ்த்து.

''பார்ப்பார்க்கு அல்லது பணிபறி யலையே
பணியா உள்ளமொடு அணிவரக் கெழீஇ
நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே
வணங்குசிலை பொருதநின் மணங்கமழ் அகலம்
மகளிர்க்கு அல்லது மலர்ப்பறி யலையே
நிலந்திறம் பெயருங் காலை ஆயினும்
கிளந்த சொல்நீ பொய்ப்பறி யலையே
சிறியிலை உழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டு மிகைபடத் தண்டமிழ் செறித்துக்
குன்றுநிலை தளர்க்கும் உருமிற் சீறி
ஒருமுற் றிருவர் ஒட்டிய ஒள்வாள்
செருமிகு தானை வெல்போ ரோயே
ஆடுபெற்று அழிந்த மள்ளர் மாறி

---

7. ஆக்களே, பார்ப்பன, மாக்களேபெண்டிரே, பிணியாளரே, புதல்வர்ப் பெறாதோரே நீவிர் யாவரும் நுமக்கேற்ற புகலிடம் சேர்வீராக. யாம் படையெடுத்து வருவேம் என்று அறப்போர் வழியை விரும்பும் கொள்கையுடைய வீரத்தையுடைய, களிற்றுமேல் கொடி நிழலைச் செய்யும் எம் தலைவனும் பொன்னைப் பாணர்க்குக் கொடுத்த முந்நீர் விழவுடைய நெடியோனும் ஆகிய குடுமியானவன் பஃறுளியாற்று மணலினும் பல்லாண்டு வாழ்வானாக.—பல்யாகசாலை முது குடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

நீகண் டனையேம் என்றனர் நீயும்
நும்நுகம் கொண்டினும் வென்றோய் அதனால்
செல்வக் கோவே சேரலர் மருக
கால்திரை எடுத்த முழங்குகுரல் வேலி
நனந்தலை உலகஞ் செய்தநன் றுண்டெனின்
அடையடுப் பறியா அருவி யாம்பல்
ஆயிர வெள்ள ஊழி
வாழி யாத வாழிய பலவே.''[8]

(பதிற்றுப்—63)

என்பதும் அது. பிறவும் அன்ன.

சேய் வரல் வருத்தம் வீட வாயில் காவலர்க்கு உரைத்த கடை நிலையும்—சேய்மைக்கண்ணின்று வருகின்ற வருத்தம் தீர வாயில் காவலர்க்கு உரைத்த வாயில் நிலையும்.

உதாரணம்

''வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து
வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க்கு அடையா வாயி லோயே
கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி
தன்அறி யலன்கொல் என்னறி யலன்கொல்

---

8. சேரர் வழிவந்தோய், செல்வக்கடுங்கோ வாழியாதனே! பார்ப்பாரை யன்றிப் பிறரைப் பணியாய், நட்டோர்க்கல் லது பிறர்க்குக் கண்ணோடி அஞ்சாய்; நின் மார்பு நின் மகளிர்க்கல்லது விரியாது; உலகு பெயரினும் சொன்ன சொல் தவறாய்; உழிஞை சூடித் திறைப்பொருள் மிகுதி யாகக் கொள்ளத் தமிழ் வீரரைச் செலுத்திச்சீற்றத்துடன் ஒரே முற்றுகையில் இரு வேந்தரை வென்ற போருடை யாய், நின் வீரரால் அடப் பெற்றுத் தோற்ற பகைவீரர் நின்னைச் சரண் புகுந்து நீ விரும்பியதையே யாமும் விரும்பிச் செய்வேம் என்று கூறினர்; நீயும் வலிகொண்டு இன்னும் போரில் வென்றாய். இத்தகை யியல்புடையை ஆதலால் உலகில் நல்லோர் செய்யும் அறம் நிலை பெறுவதுண்டெனில் ஆம்பலும் வெள்ளமும் என்னும் எண்ணுள்ள ஊழிக்காலம் வாழ்க.

(இலை தழைப்பதும் மலரும் இன்மையான ஆம்பல் என்றது எண்ணினை—வெளிப்படை)

அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென
வறுந்தலை உலகமும் அன்றே அதனாற்
காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை
மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செல்லினும் அத்திசைச் சோறே.''[9]

(புறம்-206)

கண்படை கண்ணிய கண்படை நிலையும்—இறைவன் கண்படை நிலையைக் குறித்த கண்படை நிலையும்.

என்றது, அரசன் இனிது துயின்றது கூறல் என்றவாறாம்.

உதாரணம்

''மேலோர் இறைஅமருள் மின்னார் சினஞ்சொரியும்
வேலான் விறன்முனை வென்றடக்கிக்—கோலாம்
கொடிய உலகில் குறுகாமை எங்கோன்
கடியத் துயிலேற்ற கண்''[10]

(வெண்பா. பாடாண்-8)

---

9. வள்ளல்களின் செவிகளில் நன்மொழிகளை விதைத்து நினைத்தது முடிக்கும் உரனுடையுள்ளம் கொண்ட வள்ளல்கள் தரும் பரிசிற் பொருளுக்காக வருந்தும் பரிசிலர்க்கு அடையாத வாயில் காப்போனே! அதியமான் நெடுமானஞ்சி (எனக்குப் பரிசில் நீட்டித்தான்) தன் பெருமையும் என் நிலையும் அறியான்போலும். இவ்வுலகம் அறிவும் புகழும் மாய வறியதாகியதும் இல்லை. அதனால் எம் கலன்களைத் தூக்கிக்கொண்டோம். கலனுள்ளவைகளைச் சுருக்கிக்கொண்டோம். மரத் தச்சனின் சிறுவர் கோடரியுடன் காட்டிடத்துச் சென்றால் அவர்க்கு மரம் கிடைப்பது எத்தகை எளியதோ அத்தகை எளிமையில் யாங்கள் எத்திசைச் சென்றாலும் அத்திசைக் கண் சோறு பெறுவோம். இது அதியமான் பரிசில் நீட்டித்தபோது ஔவையார் பாடியது.

10. எங்கோன் அமருள் சினம் செருக்கிப் போர் முனையை வேலால் வென்று அடக்கித் தீயவை தன் உலகில் குறுகாதபடி ஓட்டியதால் அவன் கண்கள் துயில் கொண்டன.

கபிலை கண்ணிய கேள்வி நிலையும்—கபிலையைக் குறித்த வேள்வி நிலையும்.

**உதாரணம்**

''பருக்காழும் செம்பொன்னும் பார்ப்பார் முகப்பக்
குருக்கண் கபிலை கொடுத்தான்—செருக்கோடு
இடிமுரசத் தானை இகலிரிய எங்கோன்
கடிமுரசம் காலைச்செய் வித்து.''[11]

(வெண்பா. பாடாண்-14)

வேலை நோக்கிய விளக்கு நிலையும்—வேலினைக் குறித்த விளக்கு நிலையும். நோக்குதலாவது, விளக்கு ஏதுவாக[12] வேலின் வெற்றியைக் காட்டுதல்.

**உதாரணம்**

''வளிதுரந்தக் கண்ணும் வலந்திரியாப் பொங்கி
ஒளிசிறந்தாங்கு ஓங்கி வரலால்—அளிசிறந்து
நன்னெறியே காட்டும் நலந்தெரி கோலாற்கு
வென்னெறியே காட்டும் விளக்கு.''[13]

(வெண்பா. பாடாண்-12)

வாயுறை வாழ்த்தும்—வெஞ்சொல்லைப் பிரித்தலின்றிப்[14] பிற் பயக்குமென்று வேம்பும் கடுவும்போல ஓம்படைக் கிளவியாலே மெய்யுறக் கூறுதலும்.

---

11. எம்மரசன் காலையில் காவல் முரசம் முழங்க மணியும் பொன்னும் அந்தணர் கொள்ளப் பசுக்களையும் தானம் பண்ணினான்.

12. விளக்கு ஏதுவாக—விளக்கெரியும் விளக்கத்தின் காரண மாக.

13. விளக்கானது காற்றடிக்கவும் வலமாகச் சுழன்று ஒளி சிறந்து ஓங்கி எரிதலால் அளி மிகுந்து நல்ல நெறியே யாவர்க்கும் காட்டும் வேந்தனுக்கு வெல்லும் வழியே காட்டும்.

14. பிரித்தல்—நீக்குதல்.

**வாயுறை வாழ்த்தின் இலக்கணம்**

"வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்பும் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குதல்[15] இன்றி வழிநனி பயக்குமென்று
ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே."

(தொல்-செய்யுள். 108)

"காய்நெல் அறுத்துக் கவளங் கொளினே
மாநிறைவு இல்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு ஆயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால் பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமுங் கெடுமே."[16]

(புறம்-184)

---

15. தாங்குதல் இன்றி—தடை செய்தலின்றி. எனவே பாடலில் வேம்பும் கடுவும் போலும் வெறுப்பான சொற்கள் பெய்யப் பெறும் என்க.

16. மா அளவிற்கும் குறைந்த வயலில் விளைந்த நெல்லை அறுத்துக் கவளமாகக் கொடுக்க உண்ணுமாயின் யானைக்கு அந்நெல் பல நாளுக்கு வரும். அதைவிட்டு யானை தானே தனித்து வயலிற் சென்று உண்ணப் புகின் நூறு வயலாயினும் அவற்றில் விளைந்த நெல்லானது யானையின் வாயில் புகுவதைக் காட்டிலும் யானைக் காலால் மிதிப்புண்டு அழிவதே மிகுதியாகும். அதுபோல அரசன் அறிவுடையனாய் வரி கொள்ளும் முறையறிந்து கொள்ளின் அவன் நாடு வளம் பெரிதாகும். அதை விடுத்து வரி கொள்ளும் முறையறியாத அதிகாரிகளுடன் அன்பு கெடக் கொள்ளும் உணவை விரும்புவானாயின் அவனும் உண்ணமாட்டான் அவன் உலகமும் கெடும்.— பாண்டியன் அறிவுடை நம்பியைப் பிசிராந்தையார் பாடியது.

செவியறிவுறுவும்—உயர்ந்தோர் மாட்டு அவிந்து ஒழுகுதல் வேண்டும் எனச் செவியறிவுறுத்துக் கூறுதலும்.

செவியுறையின் இலக்கணம்

''செவியுறை தானே
பொங்குதல்[17] இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடனெனச் செவியுறுத் தற்றே''
(தொல்.செய்யு-110)

உதாரணம்

''அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதாய் என்றிவர்க்குத் தார்வேந்தே—முந்தை
வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டல் முறை.''[18]
(வெண்பா. பாடாண்-33)

ஆவயின் வருஉம் புறநிலை வாழ்த்தும்—மன்னன் இடத்ததாகி வரும் புறநிலை வாழ்த்தும். அது.

''வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே''
(தொல். செய்யு-106)

என்பதனால், இனிது வாழ்மின் என்னும் பொருள் மேல் வரும்.

உதாரணம்

''தென்றல் இடைபோழ்ந்து தேனார் நறுமுல்லை
முன்றில் முகைவிரியும் முத்தநீர்த் தண்கோளூர்க்
குன்றமர்ந்த கொல்ஏற்றான் நிற்காப்ப என்றுந்
தீரா நண்பின் தேவர்
சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே.''[19]
(யா. விரு. 55-மேற்கோள்)

---

17. பொங்குதல்—செருக்கால் மிகுதல்.

18. தார்வேந்தே! அந்தணர்... தாய் என்றிவர்க்கு முன்னோர் சென்ற வழியே நின்று அடங்கி உலகத்துச் சான்றோர் மொழிகேட்டு நின்று ஆள்வது அரச முறையாகும்.

19. தென்றல் இடையே பிளந்துவர முல்லை முகைவிரியும் கொடுங்கோளூர்க் குன்றில் அமர்ந்த விடையேறியாம் சிவன் நின்னைப் புறம் இருந்து காப்ப நீங்கா அன்புடன் தேவர்தரும் சிறந்த செல்வமொடு பொலிவாக.

கைக்கிளை வகையொடு—ஆண்பாற் கூற்றுக் கைக்கிளையும் பெண்பாற் கூற்றுக் கைக்கிளையும்.

உதாரணம்

"துடியடித் தோற்செவித் தூங்குகை நால்வாய்ப்
பிடியேயான் நின்னை இரப்பல்—கடிகமழ்தார்ச்
சேலேக வண்ணனொடு சேரி புகுதலும் எம்
சாலேகம் சார நட"[20]

(முத்தொள்-50)

எனவும்,

"அணியாய செம்பழுக்காய் வெள்ளிலையோ டேந்திப்
பணியாயோ எம்பெருமான் என்று—கணியார்வாய்க்
கோள்நலங் கேட்பதூஉங் கொங்கர் பெருமானார்
தோள்நலஞ் சேர்தற் பொருட்டு"[21]

எனவும் வரும்.

உளப்பட தொகைஇ தொக்க நான்கும் உள என மொழிப-உளப்படத் தொகைஇத் தொக்க நான்கும் (முன்னையவும் இத்திணைக்கும்) உள என மொழிப.

(29)

## நச்சினார்க்கினியர்

90. கொடுப்போ............மொழிப.

இது முன்னிற் சூத்திரத்து அதிகாரப்பட்டு நின்ற மக்கட் பாடாண்டிணைக்குரிய துறை கூறுகின்றது.

இதன் பொருள்: கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்—பிறர்க்கு ஈவோரைப் பிறரி னுயர்த்துக் கூறிப் பிறர்க் கீயாதாரை இழித்துக் கூறலும்:

---

20. துடிபோலும் ஆடியும் கிடுகுபோலும் செவியும் தொங்கும் கையும் தொங்கும் வாயும் உடைய பெண் யானையே! உன்னை ஒன்று இரப்பேன்; எம் சேரியில் சாலேக வண்ணனொடு புகுவாயேல் எம்முடைய சன்னல் வழியே சார்ந்து நடப்பாயாக. — இது பெண்பாற் கைக்கிளை.

21. அழகிய பழுத்த பாக்கும் வெற்றிலையும் ஏந்திக் கொண்டுபோய் எம்பெருமானே (சோதிடரே!) நல்ல கோள் நிலையைக் கூறுவாயாக என்று கணியாரிடம் கோள்நிலை பற்றி யான் கேட்பதும் கொங்கர் மாதின் தோள்நலத்தைக் கூடும் பொருட்டாம். — இது ஆண் பாற்கைக்கிளை.

**சான்றோர்க்குப் பிறரை யிழித்துக் கூறற்கண் ணது தக்க தன்றேனும் நன்மக்கள் பயன்பட வாழ்தலுந் தீயோர் பயன் படாமல் வாழ்தலுங் கூறக்கேட்டு ஏனையோரும் பயன்பட வாழ்தலை விரும்புவரென்பது பயப்படக்கூறலின் இவர்க்கு இங்ஙனங் கூறுதல் தக்கதாயிற்று. இதனை ஏத்தலும் பழித்தலும் ஏத்திப் பழித்தலுமென மூவகையாகக் கொள்க.**

(உ-ம்) ''தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாஞ்சில
அரிசி வேண்டினே மாகத் தான்பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
யிருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே யன்னதோர்
தேற்றா வீகைய முளதுகொல்
போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே.''

(புறம்-140)

இது கொடுப்போர் ஏத்தியது.

''பாரி பாரி யென்றுபல வேத்தி
யொருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே.''

(புறம்-107)

என்பது மது.

''ஒல்லுவ தொல்லு மென்றலு மியாவர்க்கு
மொல்லா தில்லென மறுத்தலு மிரண்டு
மாள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே
யொல்லா தொல்வ தென்றலு மொல்லுவ
தில்லென மறுத்தலு மிரண்டும் வல்லே
யிரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயி லத்தை
யனைத்தா கியரினி யிதுவே யெனைத்துஞ்
சேய்த்துக் காணாது கண்டன மதனா
னோயில ராகநின் புதல்வர் யானும்
வெயிலென முனியேன் பனியென மடியேன்
கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை
நாணல தில்லாக் கற்பின் வாணுதல்

மெல்லியற் குறுமக ளுள்ளிச்
செல்வ லத்தை சிறக்கநின் னாளே.''

(புறம்-196)

''புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்.''

(குறள். புகழ்-7)

இவை கொடாஅர்ப் பழித்தல்.

''களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவற் பாண ருய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
வீகை யரிய விழையணி மகளிரொடு
சாயின் றென்ப வாஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
யுரைசா லோங்குபுக ழொரீஇய
முரசுகெழு செல்வர் நகர்போ லாதே.''

(புறம்-127)

இஃது ஆயைப் புகழ்ந்து ஏனைச் செல்வரைப் பழித்தது.

''மின்னுந் தமனியமும் வெற்றிரும்பு மொன்றாகிப்
பொன்னின் பெயர்படைத்தாற் போலாதே—கொன்னே
யொளிப்பாரு மக்களா யொல்லுவ தாங்கே
யளிப்பாரு மக்களா மாறு.''[1]

(பெரும் பொருள் விளக்கம்)

இதுவும் அது.

அடுத்து ஊர்ந்து ஏத்திய இயன்மொழி வாழ்த்தும்-தலைவ னெதிர்சென்று ஏறி அவன் செய்தியையும் அவன் குலத்தோர்

---

1. ஒளி மின்னும் பொன்னும் இரும்பும் பொன் என்றே சொல்லப்படுதல் போலப் பொருந்தாததாம்; தம்மிடம் உள்ளதை மறைப்பவரும் பிறர்க்குக் கொடுப்பவரும் மக்கள் ஆவது.

செய்தியையும் அவன் மேலே ஏற்றிப் புகழ்ந்த இயன்மொழி வாழ்த்தும்:

என்றது, இக்குடிப் பிறந்தோர்க்கெல்லாம் இக்குணங்கள் இயல்பென்றும், அவற்றை நீயும் இயல்பாக உடையையென்றும், அன்னோர்போல எமக்கு நீயும் இயல்பாக ஈயென்றும் உயர்ந்தோர் கூறி அவனை வாழ்த்துதலின் இயன்மொழி வாழ்த்தாயிற்று. இதனை உம்மைத் தொகையாக்கி இயன்மொழியும் வாழ்த்துமென இரண்டாக்கிக் கொள்க.

இஃது ஒருவர் செய்தியாகிய இயல்பு கூறலானும் வண்ணப் பகுதி[2]யின்மையானும் பரவலின் வேறாயிற்று.

(உ-ம்) ''மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
யொலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
யறியா தேறிய வென்னைத் தெறுவர
விருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
யதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறித
லதனொடு மமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே வியலிடங் கமழ
விவணிசை யுடையோர்க் கல்ல தவண
துயர்நிலை யுலகத் துறையு ளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசினீ யீங்கிது செயலே.''[3]

(புறம்—50)

---

2. சாதிப் பிரிவு

3. முரசமானது மயிற்பீலியை உழிஞைப்பூவொடு சூட்டிக் கழுவப்பட்டுவருவதற்கு முன்னர் முரசு கட்டிலில் பிறர் செல்லின் உயிர் இழப்பர் எனும் ஆணையை அறியாமல் அதில் ஏறிப் படுத்த என்னை நின் கூரிய வாள் வெட்டாமல் விடுத்த செயலே நீ தமிழ் முழுவதும் நன்கறிந்தவன் என்பதை யுணர்த்துவதற்கு அமையும். அதனுடன நில்லாமல் மெதுவாக வந்து குளிர வீசினாயே, இச்செயலுக்குக் காரணம் இவ்வுலகத்துப்

இவை போல்வன வெல்லாம் இயன்மொழி.

''மலையுறழ் யானை வான்றோய் வெல்கொடி
வரைமிசை யருவியின் வயின்வயி னுடங்கக்
கடல்போ றானைக் கடுங்குரன் முரசங்
காலுறு கடலிற் கடிய வுரற
வெறிந்து சிதைந்த வாள்
இலை தெரிந்த வேல்
பாய்ந்தாய்ந்த மா
வாய்ந்து தெரிந்த புகன்மறவரொடு
படுபிணம் பிறங்க நூறிப் பகைவர்
கெடுகுடி பழற்றிய கொற்ற வேந்தே
நின்போ, லசைவில் கொள்கைய ராகலி னசையா
தாண்டோர் மன்றவிம் மண்கெழு ஞால
நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணியப்
பயங்கெழு வெள்ளி யாநிய நிற்ப
விசும்புமெய் யகலப் பெயல்புர வெதிர
நால்வேறு நனந்தலை யோராங்கு நந்த
விலங்குகதிர்த் திகிரி முந்திசி னோரே.''[4]

(பதிற்று—69)

---

புகழுடையோர்க்கன்றி மறுமையுலக இன்பம் இல்லை என்னும் சொல்லை நன்றாகக் கேட்டதாகுமோ?—இது சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை யானவன் தன் முரசு கட்டிலில் அறியாது ஏறிய மோசி கீரனாரை வாள்கொண்டு வெட்டாது கவரிகொண்டு வீசியது கண்டு மோசிகீரனார் பாடியது.

4. யானை மீது உயர்த்திய கொடிகள் மலைமேல் ஒழுகும் அருவி போல அசைய முரசம் கடலொலி போல் ஒலிக்க வாள் வீரரும் வேல் வீரரும் குதிரை வீரரும் காலாட் படைஞரும் ஆகியவருடன் சென்று பிணம் மிக அழித்துப் பகைவர் நாட்டுக் குடிமக்களைப் புரந்த கொற்றவனே! நிலம் நல்ல விளையுளைத்தர வெயில் அளவுகடவாது தணிய வெள்ளியானது மழைக்குக் காரணமான மற்றைக் கோள்களுடன் நிற்ப, மழை உலகு புரக்கும் செயலில் நிற்க நான்கு திசை நிலங்களும் ஒன்று போல வளத் தால் பெருக அரசாணையைச் செலுத்திய நின் முன்னோர் நின்போல் அசையாத கொள்கையுடையரா தலின் இம்மண்ணுலகைக் கெடாதவாறு நன்கு ஆண்டனர்.

இது முன்னுள்ளோர்க்கும் இயல்பென்பது படக் கூறிய இயன்மொழி வாழ்த்து.

''முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவு
மரசுடன் பொருத வண்ண ணெடுவரைக்
கறங்குவெள் ளருவி கல்லலைத் தொழுகும்
பறம்பிற் கோமான் பாரியும் பிறங்குமிசைக்
கொல்லி யாண்ட வல்வி லோரியுங்
காரி யூர்ந்து பேரமர்க் கடந்த
மாரி யீகை மறப்போர் மலையனு
மூரா தேந்திய குதிரைக் கூர்வேற்
கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியு
மீர்ந்தண் சிலம்பி னிருடூங்கு நளிமுழை
யருந்திறற் கடவுள் காக்கு முயர்சிமைப்
பெருங்க னாடன் பேகனுந் திருந்து மொழி
மோசி பாடிய வாயு மார்வமுற்
றுள்ளி வருந ருலைவுநனி தீரத்
தள்ளா தீயுந் தகைசால் வண்மைக்
கொள்ளா ரோட்டிய நள்ளியு மெனவாங்
கெழுவர் மாய்ந்த பின்றை யளிவரப்
பாடி வருநரும் பிறருங் கூடி
யிரந்தோ ரற்றந் தீர்க்கென விரைந்திவ
ணுள்ளி வந்தனென் யானே விசும்புறக்
கழைவளர் சிலம்பின் வழையொடு நீடி
யாசினிக் கவினிய பலவி னார்வுற்று
முட்புற முதுகனி பெற்ற கடுவன்
றுய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரு
மதிரா யாணர் முதிரத்துக் கிழவ
விவண்விளங்கு சிறப்பி னியறேர்க் குமண
விசைமேந் தோன்றிய வண்மையொடு
பகைமேம் படுக நீ யேந்திய வேலே.''[5]

(புறம்—158)

---

5. பாரி, ஓரி, மலையமான், எழினி, பேகன், ஆய், நள்ளி எனும் எழுபெரு வள்ளல்களும் இறந்த பின்னர், முதிர மலையில் சுரபுன்னை ஆசினி மரங்களுடன் நீண்டு வளர்ந்த பலாமரத்தின் பழுத்த கனியைப் பெற்ற ஆண் குரங்கு தன் பெண் குரங்கைக் கையால் அழைக்கும்படி யான புதுவருவாயுடைய முதிர மலைக்குரியவனே! குமணனே! பரிசிலர் வறுமையைத் தீர்ப்பாய் என நின்னைப் பாடி வருபவரும் பிறரும் கூடி என்னைத்

இஃது இன்னோர் போல எமக்கு ஈயென்ற இயன் மொழி வாழ்த்து.

> ''இன்று செலினுந் தருமே சிறுவரை
> நின்று செலினுந் தருமே பின்னு
> முன்னே தந்தனெ னென்னாது துன்னி
> வைகலுஞ் செலினும் பொய்யல னாகி
> யாம் வேண்டி யாங்கெம் வறுங்கல நிறைப்போன்
> றான்வேண்டி யாங்குத் தன்னிறை யுவப்ப
> வருந்தொழின் முடியரோ திருந்துவேற் கொற்ற
> னினமலி கதச்சேக் களனொடு வேண்டினுங்
> களமலி நெல்லின் குப்பை வேண்டினு
> மருங்கலங் களிற்றொடு வேண்டினும் பெருந்தகை
> பிறர்க்கு மன்ன வறத்தகை யன்னே
> யன்ன னாகலி னெந்தை யுள்ளடி
> முள்ளு நோவ வுறாற்க தில்ல
> வீவோ ரரியவிவ் வுலகத்து
> வாழ்வோர் வாழ்பவன் றாள்வா ழியவே.''[6]
>
> (புறம்—171)

இது படர்க்கையாகிய இயன்மொழி வாழ்த்து.

---

தொடர்ந்துவர நின்னையுள்ளி வந்தேன். புகழ்மேம்படு தற்குக் காரணமான வள்ளல் தன்மையொடு நீ ஏந்திய வேல் பகைவரைவென்று மேம்படுவதாக.—குமணனைப் பெருஞ்சித்திரனார் பாடியது.

6. பிட்டங் கொற்றனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடியது.

பிட்டங்கொற்றனானவன் யான் இன்று சென்றாலும் தரும்; சில நாள் தங்கிப் பின் சென்றாலும் தரும். நாடோறும் சென்றாலும் முன் தந்தேனே என்றுகூறாமல் மகிழ்ந்து எம் கலங்கள் நிறையும்படித் தரும். தான் விரும் பியபடித் தன் அரசனுக்கு வென்றி தருவானாகுக: பசுக் களைத் தொழுவத்தோடுவேண்டினாலும், நெற்குவியலை வேண்டினாலும், பொற்கலங்களைக் களிற்றொடு வேண் டினாலும் எமக்கேயன்றிப் பிறர்க்கும் கொடுப்பவன்; கொடுப்போர் அரிய இவ்வுலகில் வாழும் இரவலர் வாழ் வாகவுள்ள அவனின் முயற்சி வாழ்க; அவன் காலில் சிறு முள்ளும் தைக்காததாகுக.

''இம்மைச் செய்தது மறுமைக் காமெனு
மறவிலை வணிக னாயலன் பிறருஞ்
சான்றோர் சென்ற நெறியென
வாங்குப் பட்டன் றவன்கைவண் மையே.''[7]

(புறம்—134)

இது பிறருஞ் சான்றோர் சென்ற நெறி யென்றமையின் அயலோரையும் அடுத்தூர்ந்தேத்தியது. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.

சேய்வரல் வருத்தம்வீட வாயில் காவலற்கு உரைத்த கடை நிலையானும்— சான்றோர் சேணிடை வருதலாற் பிறந்த வருத்தந்தீர வாயில் காக்கின்றவனுக்கு என் வரவினை இசை யெனக் கூறிக் கடைக்கணின்ற கடைநிலையும்:

இது வாயிலோனுக்குக் கூறிற்றேனும் அவ்வருத்தந் தீர்க்கும் பாடாண்டலைவனதே துறையென்பது பெற்றாம்.

இழிந்தோரெல்லாந் தத்தம் இயங்களை இயங்கிக் கடைக் கணிற்றல் 'பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்' (91) என்புழிக் கூறுதலின் இஃது உயர்ந்தோர்க்கே கூறியதாம்.

(உ-ம்) ''வேற்றுச் சுரத்தொடு வேந்தர்கண் வெம்மையு
மாற்றற்கு வந்தனேம் வாயிலோய் — வேற்றார்
திறைமயக்கு முற்றத்துச் சேணோங்கு கோயி
லிறைமகற்கெம் மாற்ற மிசை.''[8]

---

7. இப்பிறவியிற் செய்தது மறுமையிற் பயன்தரும் என்று அறம்செய்யும் அறத்தைவிற்கும் வணிகன்அல்லன் ஆய்; அவன் கொடைத்திறமானது பிற சான்றோர் (வள்ளல் கள்) சென்ற வழி என அதன்வழிச் செல்லும் அளவி லேயே அமைந்தது.

8. வாயிலோய்! வேற்றுநாட்டுச் சுரவழிகளோடு வேற்று வேந்தரின் கொடுமையையும் மாற்ற வேண்டி வந்தேம் என்பதை வேற்று வேந்தர் இடும் திறைப்பொருள்களை வரிசை என்பதின்றி ஒன்றன்மேல் ஒன்றாக மயங்கு மாறுள்ள முன்றிலுடைய மிக உயர்ந்த அரண்மனையரச னிடம் சென்று கூறுவாயாக.

"வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தா
முன்னியது முடிக்கு முரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே
கடுமான் றோன்ற னெடுமா னஞ்சி
தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொ
லறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை
மரங்கொஃ றச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
யெத்திசைச் செலினு மத்திசைச் சோறே."

(புறம்—206)

இது தலைவனை எதிர்ப்பட்டுக் கூறாது வாயிலோனை நோக்கிக் கூறலிற் பரிசில் கடாய தின்றாம்.

ஆன், அசை; ஏழனுருபாக்கி எல்லாவற்றிற்கும் விரித்தலு மொன்று.

கண்படை கண்ணிய கண்படை நிலையும்—அரசரும் அரசரைப் போல்வாரும் அவைக்கண் நெடிது வைகியவழி மருத்துவரும் அமைச்சரும் முதலியோர் அவர்க்குக் கண்டுயில் கோடலைக் கருதிக் கூறிய கண்படை நிலையும்;

கண்படை கண்ணிய என்றார், கண்படை முடிபொருளாக இடைநின்ற உண்டி முதலியனவும் அடக்குதற்கு.

(உ-ம்) "வாய்வாட் டானை வயங்குபுகழ்ச் சென்னி நின்
னோவா வீகையி னுயிர்ப்பிடம் பெறாஅர்
களிறுகவர் முயற்சியிற் பெரிது வருந்தினரே
யுலகங் காவலர் பலர்விழித் திருப்ப
வறிது துயில்கோடல் வேண்டுநின்
பரிசின் மாக்களுந் துயில்கமா சிறிது."[9]

---

9. சென்னியே! நின் ஒழியாத ஈகையால் மூச்சுவிட நேரம் இல்லாமல் நீ தரும் களிறுகளைக் கவரும் முயற்சியினால் மிக வருந்தினர் பரிசிலர்; நின்னை நினைந்து உலக அரசர் பலரும் விழித்திருப்ப நீ சிறிது துயில்க; பரிசிலரும் சிறிது துயில்வாராக.

**கபிலை கண்ணிய வேள்வி நிலையும்** — சேதாவினைக்[10] கொடுக்கக் கருதிய கொடைநிலை கூறுதலும்:

இது வரையா ஈகையன்றி இன்னலுற்றாற் கொடுக்கவென உயர்ந்தோர் கூறுநாட் காலையிலே கொடுப்பதாமாதலின் வேறு கூறினார். 'கண்ணிய' என்றதனாற் கன்னியர் முதலோரைக் கொடுத்தலுங் கொள்க.

> ''பொன்னிறைந்த பொற்கோட்டுப்
> பொற்குளம்பிற் கற்றாதந்
> தின்மகிழா னந்தணரை யின்புறுப்பச் — சென்னிதன்
> மாநிலமே யானுலகம் போன்றது வான்றுகள் போர்த்
> தானுலக மண்ணுலகா மன்று.'[11]

**வேலின் ஒக்கிய விளக்கு நிலையும்** — வேலும் வேற்றலையும் விளங்காதோங்கியவாறு போலக் கோலோடு விளக்கும் ஒன்று பட்டோங்குமாறு ஓங்குவித்த விளக்கு நிலையும:

இன், உவமப்பொருள்: இது கார்த்திகைத் திங்களிற் கார்த்திகை நாளின் ஏற்றிய விளக்குக் கீழுமேலும் வலமு மிடமுந் திரிபரந்து சுடர்ஓங்கிக் கொழுந்துவிட்டெழுந்ததென்று அறிவோராக்கங் கூறப்படுவதாம்.

(உ-ம்) ''மைமிசை யின்றி மணிவிளக்குப் போலோங்கிச்
> செம்மையி னின்றிலங்குந் தீபிகை — தென்முனையுள்
> வேலினுங் கோடாது வேந்தன் மனைவிளங்கக்
> கோலினுங் கோடா கொழுந்து.''[12]

வேலின் வெற்றியை நோக்கிநின்ற விளக்கு நிலையெனப் பொருள் கூறி,

---

10. சேதா=செம்மை+ஆ= செந்நிறப்பசு. அது கபிலை எனப்படும்,

11. சென்னியானவன், பொன் கொம்பும் பொன்குளம்பு மான கன்றுடன் கூடிய பசுக்களை மகிழ்வோடு அந்தணர்க்குக் கொடுத்ததால் அவன் உலகம் தேவ லோகம் போன்றது. கொடுக்குங்கால் எழும் துகள்கள் பரவி வானுலகும் மண்ணுலகமாம் இன்று.

12. மேலே புகையின்றி மணியாகிய விளக்குப் போல ஒளி விளங்கி நன்றாக ஒளிதரும் தீபமானது பகைப் புலத்தில் எறியும் வேல் வளையாதது போலவும் அரண்மனை விளங்க அரசன் செங்கோல் போலவும் வளையாது நின்று எரியும்.

''வளிதுரந்தக் கண்ணும் வலந்திரியாப் பொங்கி
யொளி சிறந்தாங் கோங்கி வரலா — லளிசிறந்து
நன்னெறியே காட்டு நலந்தெரி கோலாற்கு
வென்னெறியே காட்டும் விளக்கு.''

(பு.வெ.பாடாண்—12)

என்பது காட்டுவாரும் உளர். அவர் இதனை நிச்சம் இடு கின்ற விளக்கென்பர்,

வாயுறை வாழ்த்தும்—'வாயுறை வாழ்த்தே.........வேம்புங் கடுவும்' என்னும் (424) செய்யுளியற் சூத்திரப் பொருளை உரைக்க.

இதற்கு ஒரு தலைவன் வேண்டானாயினும் அவற்கு உறுதி பயத்தலைச் சான்றோர் வேண்டி வாய்மொழி மருங்கினான் அவனை வாழ்ச்சிப்படுத்தலின் இதுவுங் கைக்கிளைப்புறனாகிய பாடாணாயிற்று. செவியுறைக்கும் இஃதொக்கும்.

(உ-ம்) ''எருமை யன்ன கருங்கல் விடைதோ
றானிற் பரக்கும் யானைய முன்பிற்
கானக நாடனை நீயோ பெரும
நீயோ ராகலி னின்னொன்று மொழிவ
லருளு மன்பு நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்
குழவி கொள்பவரி னோம்புமதி
யளிதோ தானேயது பெறலருங் குரைத்தே.''[13]

(புறம்—5)

இதனுள் திரயங் கொள்வாரோ டொன்றாது காவலை யோம் பென வேம்புங் கடுவும் போல வெய்தாகக் கூறி அவற்கு உறுதி பயத்தலின் வாயுறை வாழ்த்தாயிற்று.

---

13. எருமை போலும் கற்பாறைகள் தோறும் ஆநிரைபோற் பரந்து செல்லும் யானைகளையும் வலியையும் உடைய கானக நாடன் நீயா? பெரும! நீ ஒருவனே சிறந்தவனாதலின் நினக்கு ஒன்று கூறுவன்; அருளும் அன்பும் பிற உயிர்களிடத்திற் காட்டாது நீக்கி நாகில் செல்பவரோடு சேராமல் உலகம் காத்தலைக் குழந்தை களைக் காத்தல் போல் கொள்க; உலகம் இரங்கத் தக்கது. அதைக் காத்தலும் பெறுதற்கரியதாம்.

''காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வல்லதும் பன்னாட் காகு
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கு
மறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்து
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானு முண்ணா னுலகமுங் கெடுமே''

என்னும் (184) புறப்பாட்டும் அது.

தம்தம் புது நூல் வழிகளாற் புறநானூற்றிற்குத் துறை கூறினாரேனும், அகத்தியமுந் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின் அவர் சூத்திரப் பொருளாகத் துறைகூற வேண்டுமென்றுணர்க. 'செவியுறைதானே' (426) என்னுஞ் சூத்திரப்பொருண்மை இவ்வுதாரணங்கட்கு இன்மை உணர்க.

செவியறிவுறூஉம்—இதற்குச் 'செவியுறைதானே' என்னும் செய்யுளியற் (426) சூத்திரப் பொருளை உரைக்க.

ஒருவுதலை ஒரூஉதலெனவும் ஒரூஉவெனவுங் கூறுமாறு போல உறுவும் உறூஉதலெனவும் உறூஉவெனவுங் கூறப்படும்.

(உ-ம்) ''அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதா யென்றிவர்க்குத் தார்வேந்தே—முந்தை
வழிநின்று பின்னை வயங்கு நீர் வேலி
மொழிநின்று கேட்டன் முறை.''

(பு.வெ.பாடாண்—33)

''வடாஅது, பனிபடு நெடுவரை வடக்குந் தெனாஅ
துருகெழு குமரியின் றெற்குங் குணாஅது
கரைபொரு தொடுகடற் குணக்குங் குடாஅது
தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்குங் கீழது
முப்புண ரடுக்கிய முறைமுதற் கட்டி
னீர்நிலை நிவப்பின் கீழு மேல
தானிலை யுலகத் தானு மானா
துருவும் புகழு மாகி விரிசீர்த்
தெரிகோன் ஞமன்ன் போல வொருதிறம்

பற்ற லியரோ நிற்றிறஞ் சிறக்க
செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்
கடற்படை குளிப்ப மண்டி யடர்ப்புகர்ச்
சிறுகண் யானை செவ்விதி னேவிப்
பாசவற் படப்பை யாரெயில் பலதந்
தவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம்
பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கிப்
பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
யிறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிவ ரேந்து கையெதிரே
வாடுக விறைவநின் கண்ணி யொன்னார்
நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே
செலிய ரத்தைநின் வெகுளி வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே
யாங்க, வென்றி யெல்லாம் வென்றகத் தடக்கிய
தண்டா வீகைத் தகைமாண் குடுமி
தண்கதிர் மதியம் போலவுந் தெறுசுட
மன்னிய பெருமநீ நிலமிசை யானே.''[14]

(புறம்-6)

---

14. பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரி கிழார் பாடியது. குறையாத ஈகையுடைய குடுமியே! பெரும! இமயமலைக்கு வடக்கும் குமரிக்குத் தெற்கும் கீழ்கடற்குக் கிழக்கும் மேல் கடற்கு மேற்கும் நிலவுலகுக்குக் கீழும் வானுலகுக்கு மேலும் பிறர்க்கு அச்சமும் நின் புகழும் பரவ நிறைகோல் போல் ஒரு பக்கம் சாயாது நடு நிற்பாயாக. பகைவர் நாட்டில் யானைகளை ஏவி எயில் வென்று கொண்டு அங்குக் கிடைத்த பொருள்களைப் பரிசிலர்க்கு முறையாகக் கொடுத்து, முனிவர் தொழும் முக்கட் செல்வனாகிய சிவனின் கோயிலை வலம் செயற்கு நின்குடை தாழ்வதாக. நான்மறை அந்தணர் நின்னை வாழ்த்த ஏந்திய கையெதிரே நின் தலை இறைஞ்சுக; பகை நாட்டில் நீ எரி கொளுத்தலால் உண்டாகும் புகையில் நின் மாலை வாடுக; நின் சினம் நின் மனைவியர் முகத்தெதிரே தணிவதாக; நீ மதியம் போலவும் ஞாயிறு போலவும் நிலமிசை மன்னுக.

இதனுள் இயல்பாகிய குணங்கூறி அவற்றோடு செவியுறை யுங் கூறினான், செவியுறைப் பொருள் சிறப்புடைத்தென்று அவன் கருதி வாழ்தல் வேண்டி.

ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும்—தெய்வ வழிபாடு உடைத்தாயினும் மக்கள் கண்ணதேயாகித் தோன்றும் பாட்டு டைத் தலைவன் முன்னிலையாகத் தெய்வம் படர்க்கையாக வாழ்த்தும் வாழ்த்து :

தெய்வஞ் சிறந்ததேனும் மக்கள் அதிகாரப்படுதலின் அவர் கண்ணதேயாதற்கு 'ஆவயின் வரூஉம்' என்றார். இதற்கு 'வழிபடு தெய்வம்' என்னும் செய்யுளியற் (422) சூத்திரப் பொருளை யுரைக்க.

இதுவுந் தலைவன் குறிப்பின்றித் தெய்வத்தால் அவனை வாழ்விக்கும் ஆற்றலுடையார் கண்ணதாகலிற் கைக்கிளைப் புறனாயிற்று.

(உ-ம்) ''கண்ணுதலோன் காப்பக் கடன்மேனி மால்காப்ப
வெண்ணிருதோ ளேந்திழையா டான்காப்ப—
பண்ணியனூற்
சென்னியர்க் களிக்குந் தெய்வநீ
மன்னுக நாளுமிம் மண்மிசை யானே.''[15]
(பெரும்பொருள் விளக்கம்—கடவுள் வாழ்த்து)

கைக்கிளை வகையோடு உளப்படத் தொகைஇ—மேற் காமப் பகுதியென்ற கைக்கிளையல்லாத கைக்கிளையின் பகுதியோடே வாயுறை வாழ்த்துஞ் செவியறிவுறூஉம் புறநிலை வாழ்த்துங்கூட நான்காகிய தொகை பெற்ற நான்கும்:

வாயுறை வாழ்த்து முதலிய மூன்றுந் தத்தம் இலக்கணத்திற் றிரிவுபடா, இக்கைக்கிளை திரிவு படுமென்றற்கு எண்ணும்மை யான் உடனோதாது உளப்படவென வேறுபடுத் தோதினார். அகத்திணை யியலுள் இருபாற்குங் கூறிய கைக்கிளையுங், ''காமஞ்சாலா இளமை யோள்வயிற்' (50) கைக்கிளையும், 'முன்னைய நான்கும்' (52) என்ற கைக்கிளையுங், 'காமப் பகுதி' (83) என்ற கைக்கிளையுங், களவியலுண் 'முன்னைய

15. பண்ணின் இயல்கூறும் நூல்வல்ல சென்னியர்க்கு அளிக்கும் தெய்வமாகிய நீ (?) கண்ணுதலோன் காப்பவும் மால் காப்பவும் பதினாறு தோளுடைய கொற்றவை காப்பவும் நாளும் மண்மிசை மன்னுவாயாக.

மூன்றும்' (105) என்ற கைக்கிளையும் போலாது எஞ்ஞான்றும் பெண்பாலார் கூறுதலின்றி இடைநின்ற சான்றோராயினும் பிறராயினுங் கூறுதற்கு உரித்தாய் முற்காலத்து ஒத்த அன்பினரா கிக் கடைநிலைக் காலத்து ஒருவன் ஒருத்தியைத் துறந்ததனால் துறந்த பெண்பாற் கைக்கிளையாதலின் திரிபுடைத்தாயிற்று. இது முதனிலைக் காலத்துத் தான் குறித்தது முடித்துப் பின்னர் அவளை வருத்தஞ் செய்து இன்பமின்றி யொழிதலான் ஒருதலைக் காமமாயிற்று.

(உ-ம்) ''அருளா யாகலோ கொடிதே யிருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக
நீனறு நெய்தலிற் பொலிந்த வுண்கண்
கலுழ்ந்துவா ரரிப்பனி பூணக நனைப்ப
வினைத லானா ளாக விளையோய்
கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென
யாந்தற் றொழுதனம் வினவக் காந்தண்
முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா
யாமவன் கிளைஞரே மல்லேங் கேளினி
யெம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வருஉ மென்ப வயங்குபுகழ்ப் பேக
னொல்லென வொலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே.[16]

(புறம்-144)

16. இருள் வரும் மாலைக் காலத்து எம் சிறிய யாழை மீட்டிச் செவ்வழிப் பண்ணில் நின் காட்டிடத்தைப் பாடினேம்; அது கேட்டுக் கண்ணீர் வார வருந்தினாள் நின் மனைவி. உடனே யாம் இளைய மகளே! எம்மை விரும் பும் பேகனுக்கு நீ உறவோ எனத் தொழுது வின வினேம்; அதற்கு அவள் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ''யாம் அவற்கு உறவு அல்லேம்; கேட்பீராக; எம்போலும் ஒருத்தியின் அழகை விரும்பி அப்பேகன் முல்லையை வேலியாகவுடைய நல்லூர்க்கு ஒலிக்கும் தேரொடு வரும் என்று சொல்வர்; அவ்வளவே'' என் றாள். நீ அவளுக்கு இரங்காது இங்கிருத்தல் கொடி தாகும். — இப்பாடல் மனைவி கண்ணகியைப் பிரிந்து நல்லூரில் ஒருத்தியை நயந்து சென்ற பேகனிடம் பரணர் கூறியது.

இது கண்ணகி காரணமாக வையாவிக்கோப் பெரும்பேக னைப் பரணர் பாடிய கைக்கிளை வகைப் பாடாண்பாட்டு.[17]

'கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென' வினவ, யாங் கிளையல்லேம் முல்லைவேலி நல்லூர் கண்ணே வருமென்று சொல்வாளெனக் கூறுதலின் அஃது ஏனைக் கைக்கிளைகளின் வேறாயிற்று.

'கன்முழை யருவி' யென்னும் (147) புறப்பாட்டும் அது.

தொக்க நான்கும் உள என மொழிப—அந்நான்கும் முற் கூறிய ஆறனோடே தொக்குப் பத்தாய்ப் பாடாண் பகுதிக் கண்ணே உளவாய் வருமென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

'தொக்க நான்கு' என்றதனான் இந்நான்கும் வெண்பாவும் ஆசிரியமுந் தொக்குநின்ற மருட்பாவானும் வருமென்பதூஉங் கொள்க. இவற்றை மேல்வருகின்றவற்றோடு உடன் கூறாரா யினார், அவை இழிந்தோர் கூறுங் கூற்றாகலின்.

(35)

## சோம. இளவரசு

சூத்திரம் .- 34

''கொடுப்போ......மொழிப''

கருத்து :- இது, முன் ''பாடாண் பகுதி-நாடுங்காலை நாலிரண்டுடைத்து'' எனச் சுட்டிய பாடாண் வகைப்பொருள் எட்டினியலும் பெயரும் கூறுகிறது.

பொருள் :- (1) கொடுப்போரேத்தி —கொடுக்கும் வள்ளல் களைப் புகழ்தலும்;

குறிப்பு :- இதில் ''ஏத்தி'' எனு மெச்சத்தை ஏத்தல் வினை எனப் பெயராக்கி வேறு பிரித்தெண்ணல் வேண்டும்; ''வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள் வினையோ டைந்துடன்

---

17. இப்பாடல் தலைவி வருத்தம் நீக்கத் தலைவன்பால் தூது சென்ற நிலையில் அகத்துக்குரியதாயினும் தலைவி யூடல் தீர்க்க வாயில் அமைவதே இலக்கணம் ஆதலினா லும் பேகன் என இயற்பெயர் வந்தமையானும் புறப் பாடல் ஆயிற்று. பேகன் நல்லூரகத்தில் ஒருத்தியை நயந்திருக்கப் புலவர் தலைவிபால் பேகன் செல்லுதலை விரும்புதலின் கைக்கிளை வகையாயிற்று.

மாண்ட தரசு'' எனுங் குறளில், ஐந்தெனும் எண் கருதிக் ''கற்றறிதலை''க் கற்றலும் அறிதலுமாகப் பிரித்தெண்ணியது போல, இதற்குச் செய்யுள்:-

''பாரி பாரி யென்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனு மல்லன்;
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே.''

(புறம்—107)

பொருள் : (2) கொடாஅர்ப் பழித்தலும்—பற்றுள்ளத்தால் ஈயாதிவறியாரை இகழ்தலும்;

குறிப்பு :- ஈயார் பழியும் ஈவோர் புகழாமாதலின் அதுவும் பாடாணாயிற்று. அதற்குச் செய்யுள் :-

''பண்டும் பண்டும் பாடுந ருவப்ப
விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅற்
கிழவன் சேட்புலம் படரி னிழை யணிந்து
புன்றலை மடப்பிடி பரிசி லாகப்
பெண்டிரும் தம்பதங் கொடுக்கும் வண்புகழ்க்
கண்டீ ரக்கோ னாகலி னன்று
முயங்க லான்றிசின் யானே, பொலந்தேர்
நன்னன் மருக னன்றியும் நீயே
முயங்கற் கொத்தனை மன்னே? வியங்குமொழிப்
பாடுநற் கடைத்த கதவின் ஆடுமழை
யணங்குசா லடுக்கம் பொழியுது
மணங்கமழ் மால்வரை வரைந்தன ரெமரே.!'

(புறம்—151)

இதில், ஈயாவிச்சிக்கோவை யிகழ்ந்து ஈயும் கண்டீரக் கோவைப் புகழ்வதறிக. ''இரவலர் புரவலை நீயுமல்லை'' என வெளிமானைப் பழித்த பெருஞ்சித்திரனார் புறப்பாட்டும் (162), ''ஒல்லுவதொல்லும்'' என்று நன்மாறனைப் பழித்த மூலங்கிழார் புறப்பாட்டும் (196) இவ்வகையின.

பொருள் : (3) அடுத்தூர்ந் தேத்திய இயன்மொழி வாழ்த்தும்—நெருங்கிப் பொருந்திப் புகழும் இயன்மொழி வாழ்த்தென்னும் துறையும்;

குறிப்பு :- உள்ள சால்புரைப்பது இயன்மொழி. பிற்காலத்திது மெய்க்கீர்த்தி எனப்பட்டது.

இதற்குச் செய்யுள் :-

அ. ''ஒன்று நன்குடைய பிறர்குன்றம் என்றும்
இரண்டு நன்குடைத்தே கொண்பெருங் கானம்;
நச்சிச் சென்ற விரவலர்ச் சுட்டித்
தொடுத்துணக் கிடப்பினுங் கிடக்கும், அஃதான்று
நிறையருந் தானை வேந்தரைத்
திறைகொண்டு பெயர்க்குஞ் செம்மலு முடைத்தே.''

(புறம்—156)

இன்னும், ''குறத்தி மாட்டிய'' எனும் கபிலர் புறப்பாட்டும் (108) பாரியை அவரடுத் தூர்ந்தேத்தியதாம்.

ஆ. ''இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறநிலை வாணிகன் ஆஅ யல்லன்;
பிறருஞ் சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன்றவன் கைவண் மையே.''

(புறம்—134)

என்பது மது.

பொருள் :- (4) சேய்வரல் வருத்தம் வீட வாயில் காவலர்க் குரைத்த கடைநிலை யானும்—நெடுந்தொலை வழி நடந்த வருத்தம் நீங்கப் புரவலர் தலைக் கடைக்காவலரிளம் இரவலர் கூறும் கடைநிலையும்;

குறிப்பு .- இதில், 'ஆன்''—அசை. இதற்குச் செய்யுள்:-

''வாயி லோயே! வாயி லோயே!
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கு முரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே!
கடுமான் றோன்றல் நெடுமா னஞ்சி
தன்னறி யலன்கொல்? என்னறி யலன்கொல்?
அறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே; அதனாற்
காவினெங் கலனே, சுருக்கினெங் கலப்பை,
மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே''

(புறம்—206)

பொருள் :- (5) கண்படை கண்ணிய கண்படை நிலையும்—இரவலன் உறக்கங் கருதிக் கூறும் ''கண்படை நிலை'' எனுந் துறையும்;

அதற்குச் செய்யுள் :-

''வாய்வாட் டானை வயங்குபுகழச் சென்னி! நின்
ஓவா வீகையி னுயிர்ப்பிடம் பெறாஅர்,
களிறுவர் முயற்சியிற் பெரிது வருந்தினரே;
உலகங் காவலர் பலர்விழித் திருப்ப
வறிது துயில்கோடல் வேண்டுநின்
பரிசில் மாக்களும் துயில்கமா சிறிதே.''

(நச். உரை மேற்கோள்)

பொருள் :- (6) கபிலை கண்ணிய வேள்வி நிலையும்—கபிலை நிறஞ்சிறந்த ஆவைக் கருதிய வேள்வி நிலையும்;

குறிப்பு:- இதில், கபிலை என்பது அந்நிறமுடைய பசுவுக்கு ஆகுபெயர். இதனை ''ஆக்கொடை'' என்பர் பழைய உரைகாரரிருவரும். இதற்குச் செய்யுள்:-

''நன்றாய்ந்த நீணிமிர் சடை'' எனும் மூலங்கிழார் புறப்பாட்டில் (166)

''காடென்றா நாடென்றாங்
கீரேழி னிடமுட்டாது
நீர்நாண நெய்வழங்கியும்
எண்ணாணப் பலவேட்டும்;
மண்ணாணப் புகழ்பரப்பியும்,
அருங்கடிப் பெருங்காலை
விருந்துற்றநின் திருந்தேந்துநிலை
என்றும் காண்கதில் லம்ம''

என வருவதிது. இதில், பூஞ்சாற்றுர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் காட்டுப்பசு ஏழுவகை நாட்டுப்பசு ஏழுவகையாகப் பதினாலு வகைப் பசுவால் வேட்ட புகழை மூலங்கிழார் குறித்தல் காண்க. இது பார்ப்பன வாகைப் பாடாண்.

குறிப்பு:- இதில், ''ஒக்கிய'' என்பது ஒச்சிய என்பதன் மரூஉ. இனி, ''வேலை நோக்கிய விளக்குநிலை'' எனப் பாடங் கொள்வர், இளம்பூரணர். அதுவுமிப்பொருளே குறிப்பதாகும்.

இருளொழித்து ஒளியுதவும் விளக்குப் போல, நாட்டில் வேந்தர் வேலும் கோலும் தீதகற்றி நலம் தருவதை விளக்குந்துறை என்பது கருத்து. 'வேல்' காவற்கும், 'கோல்' முறை செய்தற்கும் ஆகுபெயர்கள். இதற்குச் செய்யுள் வருமாறு:-

''இருமுந்நீர்க் குட்டமும்'' எனும் புறப்பாட்டில் (20)

''செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே
......................................
பகைவ ருண்ணா அருமண் ணினையே
......................................
அறந்துஞ்சுஞ் செங்கோ லையே;
புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா ஏமக் காப்பினை''

என வருவது இத்துறை. இன்னும், ''நெல்லுமுயிரன்றே'' எனும் மோசிகீரனார் பாட்டும் (புறம்-186) ''நாடா கொன்றோ?'' எனும் ஔவை புறப்பாட்டும் (187) இத்துறையே குறிப்பன.

பொருள்:- (8) வாயுறை வாழ்த்தும் செவியறிவுறூஉவும் ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும்—வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ, அவற்றுடன் ஒருங்கெண்ணப்பட்டு வரும் புற நிலை வாழ்த்து எனும் ''வாழ்த்தியல்'' வகை மூன்றும்; கைக் கிளை வகையோ டுளப்படத் தொகைஇத் தொக்க நான்கும்—(புரைதீர் செந்திறக்) கைக்கிளை வகையாய்ப் பாடாணாவன வோடுஞ் சேரக் கூட்டி, முன்னேழும்போற் றனிநிலையின்றி இனம் தொக்கு வரும் தொகைப் பரிசாலொத்த இந்நான்கும்; உள என மொழிப—முன்னேழோடும் சேர்த்தெட்டாவது பாடாண் வகையாய் எண்ணுதற்குள்ளன என்பர் புறநூற்புலவர்.

குறிப்பு:- இந்நூற்பாவில் வரும் உம்மைகள் எல்லாம் எண் குறிப்பன. செய்யுளியலில் ''புறநிலை, வாயுறை, செவி யறிவுறூஉ எனத் திறநிலை மூன்றும்'' சேர்த்தெண்ணப் பெறுவ தையும், ''கைக்கிளைச் செய்யுள், செவியறி, வாயுறை, புற நிலை என்றிவை தொகுநிலை'' என்றொரு பரிசாய்ச்சேர்ந்து வருவதையும் செய்யுளியலிற் கண்டு தெளிக. இந்நான்கும் ஒருங்கே தொகுநிலைகளாவதானும், அவற்றை ஒருங்கே கூட்டி எட்டாவது வகையாயிதிலெண்ணப்பட்டன. இதற்கு மாறா யிவற்றைப் பிரித்துத் தனித்தனியே நான்காக்கி, ஏத்தலையும்

பழித்தலையும் ஒன்றாக்கி "முன்கூறிய ஆறனோடே பத்தாய்ப் பாடாண் திணைக்குரிய துறைகள் உள" என்பர் நச்சினார்க்கினியர். பாடாண் துறைகள் இதற்கடுத்த நூற்பாவில் கூறப் பெறுவதாலும் மற்றப் புறத்திணைகளுக்குரிய துறைகளையெல்லாம் சேர்த்தொவ்வொரு நூற்பாவிலமைப்பதும் வெட்சி, உழிஞை போன்ற சில திணைகளின் சிறப்புவகைகளை மட்டும் வேறொரு சூத்திரமாக்குவதும் தொல்காப்பியர் கொண்டாளு முறையாதலாலும், இதில் கூறுபவை பாடாண் திணையின் சிறப்பு வகைகளன்றித் துறைகளாகாமை தெளிவாகும். இன்னும், பாடாண் "நாடுங்காலை நாலிரண்டு (சிறப்பு வகை) யுடைத்" தென முன்னே எண் கொடுத்துத் தெளியக் கூறியதாலும், இங்கு முதலில் ஏழைத் தனித்தனி எண்ணிவிட்டு இறுதியிலொரு பரிசான இந்நான்கை "உளப்படத் தொகைஇத் தொகக நான்கும் உள" எனப் பிரித்து வேறு கூறியதாலும் இது பாடாணின் சிறப்பு வகை எட்டையே சுட்டுவது தேற்றமாகும். ஏத்தலும் பழித்தலும் வெவ்வேறு பரிசுடைமை மேற்காட்டிய சான்றோர் செய்யுட்களாலறிவதாலும் அது பொருந்தாமை தெளிவாகும். இன்னும் முன் "நாலிரண்டுடைத்து" என்பதைத் திணைவகை யன்றித் துறைகளையே சுட்டுவதாய்க் கொள்ளின், இதிலும் இதையடுத்த சூத்திரத்தும் முறையே கூறப் பெறுவன தனித்தனியே எட்டிறந்தனவாமாதலானும் அது பொருந்தாமை ஒருதலை. அதனாலுமது தொல்காப்பியர் கருத்தாகாது.

இனி (1) வாயுறை வாழ்த்து, பாடாணாதற்குச் செய்யுள் வருமாறு:-

> "எருமை யன்ன கருங்கல் லிடைதோ
> றானிற் பரக்கும் யானைய முன்பிற்
> கானக நாடனை நீயோ பெரும!
> நீயோ ராகலின் நின்னொன்று மொழிவல்;
> அருளு மன்பு நீக்கி நீங்கா
> நிரயங் கொள்பவரொ டொன்றாது, காவல்
> குழவி கொள்பவரி னோம்புமதி;
> அளிதோ தானேஅது பெறலருங் குரைத்தே."
>
> (புறம்-5)

(2) செவியறிவுறூஉ பாடாணாய் வருமாறு:

"வடாஅது பனிபடு நெடுவரை" எனும் காரிகிழார் புறப்பாட்டில்,

''பணியிய ரத்தைநின் குடையே, முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே;
இறைஞ்சுக பெரும நின் சென்னி, சிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகை யெதிரே;
வாடுக இறைவநின் கண்ணி, ஒன்னார்
நாடுசுடு கமழ்புகை எறித்த லானே;
செலிய ரத்தைநின் வெகுளி, வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே;
ஆங்க வென்றி யெல்லாம் வென்றகத் தடக்கிய
தண்டா வீகைத் தகைமாண் குடுமி!
தண்கதிர் மதியம் போலவும், தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னுக பெருமநீ நிலமிசை யானே.''

(புறம்-6)

(3) புறநிலை வாழ்த்துப் பாடாண் செய்யுள்:-

(அ) ''திங்க ளிளங்கதிர்போற் றென்றிங்க ளூர்த்தேவன்
மைந்தர் சிறப்ப மகிழ்சிறந்து— திங்கட்
கலைபெற்ற கற்றைச் சடைக்கடவுள் காப்ப
நிலைபெற்று வாழியரோ நீ.''

(பழைய பாட்டு)

(ஆ) ''இமையா முக்க ணியங்குசுடர் பயந்த
உமையொரு பாகத் தொருவன் காப்பநின்
பல்கிளைச் சுற்றமொடு நல்லிதி னந்தி
நீ பல வாழிய வாய்வாட் சென்னி! நின்
னொருகுடை வரைப்பி னீழல் பெற்றுக்
கிடந்த வெழுகட னாப்பண்
அகலிரு விசும்பின் மீனினும் பலவே.''

(சூத்-422 உரைமேற்கோள்)

(4) கைக்கிளைப் பாடாணுக்குச் செய்யுள்:-

(அ) ''இனத்தோ டினஞ்சேரு மென்னுஞ்சொ லுண்மை
மனத்துறைக்க வைத்தாய் மடவோய்-பணைத்தோணின்
கண்ணிருவேல் கண்டதுமென் கைவேல் கழலுமெனின்
எண்ணுவதென் நீயருளா யேல்.''

(ஆ) ''நைவாரை நல்லார் நலிவரோ? நாளுமருள்
செய்வார், சிரியார். சிறியார்போல்; தெய்வ

எழிலோய்! தொழுதேற் கிரங்குவதுன் பண்பின்
வழியால் மறவாயென் மாட்டு.''

இவ்வெண்பாக்களில், காமஞ்சாலா இளமையோள் வயிற் காதல் கொண்ட தலைவன் அவளிளமையு மழகும் பாராட்டுதலா லிவை பாடாணாதலறிக.

(34)

## சிவலிங்கனார்

இச்சூத்திரம் பரிசில் பெறும் இரவலர்க்கேயுரிய செயல்கள் சில கூறுகின்றது.

கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல் என்பதை ஏத்தலும் பழித்தலும் ஏத்திப் பழித்தலும் என மூன்றாகவும் இயன்மொழி வாழ்த்து என்பதை இயன்மொழியும் வாழ்த்தும் என இரண்டாகவும் இளம்பூரணர் கொண்டது சிறப்புடையதாம்.

கபிலை என்பது செந்நிறமுடைய பசுவின் பெயர். அது கிடைத்தற்கரியது, சிறந்தது. அதனை விரும்பிப் பாடிவரும் இரவலர்க்குக் கொடுத்தல் கபிலை கண்ணிய வேள்வி நிலையாகும். வேள்வி என்பது உதவுதல் என்னும் பொருளது. அவி சொரிந்து உதவும் செயலால் வேள்வி (யாகம்) எனப்பட்டது. வேள் என்பது மண். மண்ணின் பயனை உதவுபவர் வேளிர் எனவும் வேளாளர் எனவும் பெயர் பெற்றமை காண்க.

விளக்கின் ஒளிவிளக்கம் கண்டு வேலின் வெற்றி கூறுவது வேல்விளக்கு நிலையாகும்.

வாயுறை வாழ்த்து முதலிய மூன்றும் பரிசில் பெறும் நோக்கம் இன்றி அரசனுக்கு அவன் நலம் கருதிக் கூறப்படுவன.

கைக்கிளை என்பதற்கு நச்சினார்க்கினியர், ''காமப்பகுதி என்ற கைக்கிளையல்லாத கைக்கிளை'' என்றும் அதாவது எஞ்ஞான்றும் பெண்பாலார் கூறுதலின்றி இடைநின்ற சான்றோராயினும் பிறராயினும் கூறுதற்கு உரித்தாய் முற்காலத்து ஒத்த அன்பினராகிக் கடைநிலைக் காலத்து ஒருவன் ஒருத்தியைத் துறத்தலால் துறந்த பெண்பாற் கைக்கிளை'' என்றும் கூறுவதே சிறந்தவுரை. இளம்பூரணர் கூறும் ஆண்பாற்கைக்கிளை பெண்பாற் கைக்கிளையும் கொள்ளலாம். இக்கைக்கிளையின் நோக்கம் ஒருத்தரை ஒருத்தர் அடைதலேயாதலின் இரவலர்நிலை யுண்மை காண்க.

88. தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயில்எடை நிலையும்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்,
சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்
பிறந்த நாள்வயின் பெருமங் கலமும்,
சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும்,
நடைமிகுத்து ஏத்திய குடைநிழல் மரபும்,
மாணார்ச் சுட்டிய வாள்மங் கலமும்,
மண்எயில் அழித்த மண்ணுமங் கலமும்,
பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்,
பெற்ற பின்னரும் பெருவளன் ஏத்தி
நடைவயின் தோன்றிய இருவகை விடையும்
அச்சமும் உவகையும் எச்சம் இன்றி
நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்
காலங் கண்ணிய ஓம்படை உளப்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பின்
காலம் மூன்றொடு கண்ணிய வருமே.

(30)

ஆ. மொ. இல :

91. The theme of 'thuyiledai' where the singers praise the lord who is on the bed planning to carn fame without annoyance to others; the theme of 'arruppadai' where actors, lute-players, dancers, and dancing women after getting gifts from a lord, direct others to go and receive the same as they did; the theme of 'Perumangalam' where the birth-day is celebrated without having anger and enmity;

The theme of 'Mannumangalam' where the coronation day is commemorated; the theme of 'Kudai nilai' where the umbrella, the sign of good govetmment, is praised highly;

The theme of 'Valmangalam' where the sword, the symbol of safe-guard is braised highly;

The theme of 'mannumangalam' where destroyal of the fort of the enemy is described;

The theme of requesting the lord to send him soon with the desired gifts;

The theme of adressing the lord on getting leave to go on the part of donee and giving leave on the part of donor;

Tha theme of foretelling the happenings of future on the basis of birth day and omen of birds and advising the safeguards to prevent the evils because of fear and love.

On these themes in conformity with the usage of the world in all times the aspects of 'Padan thinai' occur.

பி. இ. நூ

பு. வெ. மா.0

.....................துயிலெடை நிலையும்
..........................................
வீற்றினி திருந்த பெருமங்கலமும்......
மண்மங் கலமே பொலிவுமங் கலமே
நாண்மங் கலமே பரிசில் நிலையே
பரிசில் விடையே ஆள்வினை வேள்வி
பாணாற்றுப் படையே கூத்தராற்றுப் படையே
பொருநாரற்றுப் படையொடு விறலியாற்றுப் படையே
குடைமங் கலமொடு வாண்மங் கலமே
மண்ணுமங் கலமே ஓம்படை ஏனை
புறநிலை வாழ்த்தே...............

இல. வி. புற. 19

*அயில்வேல் மன்னனை அருளிய எழுகெனத்
துயில்இடை எழுப்பிய துயலெடை நிலையும்

---

* தொல்—சூத்திரத்துக்கேற்ப வரிகள் மாற்றித் தரப் பட்டன.

..............................................
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்
சிறந்த சீர்த்தி மண்ணுமங் கலமும்
வான்படைத் தானை மன்னவன் பிறந்த
நாள்சிறப் புரைக்கும் நாள்மங் கலமும்
..........................................
நாற் பெருந்திசையும் நன்கினிது கவித்த
கோக்குடை பழிச்சும் குடைமங் கலமும்
காய்வார்க் காயக் கண்கனல் வேந்தன்
வாய்வாள் ஏத்திய வாள்மங் கலமும்
மன்எயில் அழித்த மண்ணுமங் கலமும்
அறிவோர் வேந்தனுக்கு ஆய்ந்திவை செய்கென
உறுதி கூறிய ஓம்படை நிலையும்
விரைந்துகொடை பெற்றும் விடைபெறாது இரவலன்
பரிந்துகடைக் கூட்டிய பரிசில் நிலையும்
வண்புகழ் அறைந்தோர்க்கு மன்னவன் உதவிப்
பண்புற விடுத்த பரிசில் விடையும்.

## இளம்பூரணர்

88. தாவில் நல்லிசை......வருமே

இதுவும் அது:

(இ-ள்) 'துயிலெடை நிலை' முதலாகப் 'பரிசில் விடை' ஈறாகச் சொல்லப்பட்டனவும், நாளும் புள்ளும் நிமித்தமும் ஓம்படையும் உட்பட்ட உலக வழக்கின் அறியும் மூன்று காலமும் பற்றிவரும் பாடாண்திணை என்றவாறு.

கிடந்தோர்க்கு தாவில் நல்இசை கருதிய சூதர் ஏத்திய துயில் எடை நிலையும்—கிடந்தோர்க்குக் கேடு இல்லாத நற்புகழைப் பொருந்த வேண்டிச் சூதர் ஏத்திய துயில் எடை நிலையும்.

உதாரணம்

"அளந்த திறையார் அகலிடத்து மன்னர்
வளந்தரும் வேலோய் வணங்க—களந்தயங்கப்

பூமலர்மேற் புள்ளொலிக்கும் பொய்கைசூழ் தாமரைத்
தூமலர்க்கண் நேர்க துயில்.''[1]

(வெண்பா. பாடாண்-9)

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு சென்று பயன் எதிர சொன்ன பக்கமும்—கூத்தராயினும் பாணராயினும் பொருநராயினும் விறலியாயினும் நெறியிடைக் காட்சிக் கண்ணே எதிர்ந்தோர் உறழ்ச்சியால் தாம் பெற்ற பெருவளன் நுமக்குப் பெறலாகும் எனவும் சொன்ன பக்கமும்.

'பக்கமும்' என்றதினான், ஆற்றினது அருமையும் அவன் ஊரது பண்பும் கூறப்படும். அவற்றுள்,

கூத்தராற்றுப்படை வருமாறு.

''திருமழை தலைஇய'' (மலைபடுகடாம்-1) என்னும் பாட்டுட் காண்க.

பாணாற்றுப்படை வருமாறு:

''பாணன் சூடிய பசும்பொன் தாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
ஊரீர் போலச் சுரத்திடை இருந்தனிர்
யாரீ ரோவென வினவல் ஆனாக்
காரென் ஒக்கற் கடும்பசி இரவல
வென்வே லண்ணற் காணா ஊங்கே
நின்னினும் புல்லியேம் மன்னே இனியே
இன்னே மாயினேம் மன்னே யென்றும்
உடாஅ போரா ஆகுதல் அறிந்தும்
படாஅம் மஞ்ஞைக் கீத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென

---

1. வளம் தரும் வேலோய்! அகலிடத்து மன்னர்திறை யளந்தவராய் வந்து வணங்க, சுற்றுப்புற இடம் விளங்குமாறு வண்டினம் பூக்களில் ஆரவாரிக்கவுள்ள பொய்கைத் தாமரைமலர் போலும் நின் கண்கள் தூக்கத்தைக் கொள்வனவாக.

மறுமை நோக்கின்றோ அன்றே, பிறர்
வறுமைநோக் கின்றவன் கைவண் மையே.''[2]

(புறம்-141)

பொருநராற்றுப்படை வருமாறு:

''சிலைப்புலாய் நிமிர்ந்த சாந்துபடு மார்பின்
ஒலிபுனல் கழனி வெண்குடைக் கிழவோன்
வலிதுஞ்சு தடக்கை வாய்வாள் குட்டுவன்
வள்ளியன் ஆதல் வையகம் புகழினும்
உள்ளல் ஓம்புமின் உயர்மொழிப் புலவீர்
யானும், இருள்நிலாக் கழிந்த பகல்செய் வைகறை
ஒருகண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றிப்
பாடிமிழ் முரசின் இயல்தேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினேன் ஆக
அகமலி உவகையோடு அணுகல் வேண்டிக்
கொன்றுசினந் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழம் நல்கினன் அஞ்சி
யானது பெயர்த்தெனன் ஆகத் தான்அது
சிறிதென உணர்ந்தமை நாணிப் பிறிதும்ஓர்
பெருங்களிறு நல்கி யோனே அதற்கொண்டு
இரும்பேர் ஒக்கல் பெரும்புலம்பு உறினும்
துன்னரும் பரிசில் தருமென
என்றுஞ் செல்லேன் அவன் குன்றுகெழு நாட்டே.''[3]

(புறம்—394)

---

2. ''பாணர் தாமரை சூடிவர விறலியர் பொன் மாலை யொடு விளங்கக் குதிரை பூட்டிய நெடியதேரைப் பூட்டு விட்டு இளைப்பாறி இச்சுரவழியில் உள்ளூரார் போல இருக்கும் இரவலர்களே யார் நீங்கள்'' என்று எம்மைப் பார்த்து வினவும் பரணர் சுற்றத்துடன் கடிய பசியோடு இருக்கும் இரவலனே! கேள். பேகன் என்னும் வள்ள லைக் காணுதற்கு முன் உங்களைப் போல வறியராய் இருந்தோம்; அவனைக் கண்டபின் இப்படிச் செல்வ ரானோம். உடுத்தவும் போர்த்திக் கொள்ளவும் அறியாத மயிலுக்குத் தன் போர்வையைக் கொடுத்த பேகன் எவ்வளவேனும் பிறர்க்குக் கொடுத்தலையே நன்று எனக்கொண்டு மறுமைப் பயன் கருதி ஈதல் இல்லை. அவன் கைவண்மையானது பிறர் வறுமையை நோக்கி யதாயிருந்தது. (நீயும் அவனிடம் செல்க.) பேகனைப் பரணர் பாடியது.

3. இது சோழிய ஏனாதி திருக்குட்டுவனைக் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது.

விறலியாற்றுப்படை வருமாறு:

''மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பின் அல்லது காண்பறி யலையே
காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி உளரக்
கலவ மஞ்ஞையிற் காண்வர இயலி
மாரி யன்ன வண்மைத்
தேர்வேள் ஆயைக் காணிய சென்மே.''[4]

(புறம்—133)

சிறந்த நாளினிற் செற்றம் நீக்கி பிறந்த நாள்வயின் பெருமங்கலமும்—சிறந்த நாட்கண் உண்டாகிய செற்றத்தை நீக்கிப் பிறந்த நாட்கண் உளதாகிய பெருமங்கலமும்.

உதாரணம்

''அந்தணர் ஆவொடு பொன்பெற்றார் நாவலர்
மந்தரம்போல் மாண்ட களிறூர்ந்தார் — எந்தை
இலங்கிலை வேல்கிள்ளி இரேவதிநாள் என்னோ
சிலம்பிதன் கூடிழந்த வாறு.''[5]

(முத்தொள்-82)

---

புலவீர்! குட்டுவனை ஒருநாள் வைகறையில் அவன் வஞ்சிப் போரைப் பாடினேனாக தன்பால் அணிமையில் இருத்தக் கருதிப் போர்க்களிறு ஒன்று அழகு படுத்திக் கொடுத்தான். அக்களிறு கண்டு அஞ்சிய யான் திருப்பி விட்டேன். பரிசில் தர மறியாது தரப்பட்டது சிறியது எனத் திருப்பி விட்டதாக அவன் எண்ணி வேறும் ஓர் களிறு தந்தனன். அவன் வண்மையையுணர்ந்த யான் என் சுற்றம் வறுமையெய்தினும் அவன் நாடு செல்லேன் ஆயினேன் (அவ்வளவு செல்வம் தந்தான்). நீவிரும் அவன் வள்ளியன் என உலகம் புகழ்ந்தாலும் செல்வதை விடுங்கள் (இவ்வாறு கூறியது மிக்க பரிசில் தந்து விடுவன் என்பதற்காக வஞ்சப் புகழ்ச்சியாம்).

4. விறலியே! ஆய் அண்டிரன் புகழைச் செவியிற் கேட்டதன்றி நேரில் காணவில்லை போலும் நீ. காணவிரும்பின் நின் கூந்தலைக் காற்று உலர்த்த மயில்போல நடந்து மேகம் போன்ற வள்ளன்மையுடைய ஆய் அண்டிரனைக் காணச் செல்க—உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

5. அந்தணர் ஆவொடு பொன்னும் பெற்றார்; நாவலர் மந்தர மலை போலும் யானை பெற்றார்; எந்தையாகிய கிள்ளியின் இரேவதியாகிய பிறந்த நாளில் சிலம்பி மட்டும் தன் கூட்டை யிழந்தவாறு என்னோ?

சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும்[6]- ஆண்டுதோறும் முடி புனையும் வழி நிகழும் மிகப்புண்ணிய நீராட்டு மங்கலமும்.

இதற்குச் செய்யுள் வந்தவழிக் காண்க.

நடை மிகுத்து ஏத்திய குடை நிழல் மரபும்-ஒழுக்கத்தை மிகுத்து ஏத்தப்பட்ட குடை நிழல் மரபு கூறுதலும்.

(உ-ம்) ''திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர் தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான்.''

(சிலப். மங்கல-1)

மாணார்ச் சுட்டிய வாள் மங்கலமும்—பகைவரைக் கருதிய வாள் மங்கலமும்.

(உ-ம்) ''பிறர்வேல் போலா தாகி இவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை உடைத்தே
இரும்புற நீறும் ஆடிக் கறந்திடைக்
குரம்பைக் கூரைக் கிடக்கினும் கிடக்கும்
மங்கல மகளிரொடு மாலை சூட்டி
இன்குரல் இரும்பை யாழோடு ததும்பத்
தெண்ணீர்ப் படுவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழுது அழுங்கச் செல்லினுஞ் செல்லுமாங்கு
பெருங்கடல் தானை வேந்தர்
பெருங்களிற்று முகத்துஞ் செலவா னாதே.[7]

(புறம்—332)

---

6. மன் எயில் அழித்த மண்ணு மங்கலம் பின்னர் வருதலின் சிறந்த கீர்த்தி என்பதற்கு ஆண்டுதோறும் முடிபுனையும் சிறந்த விழா என்றனர்.

7, இவ்வூர் மறவன் வேலானது பிறர் வேல்போல் இன்றிப் பெரிய தகுதிப் பாடுடையதாகும். கூரைவேய்ந்த குடிசையில் புறத்தே நீறு பூசப்பட்டு மற்றைப் படைகளுடன் கிடந்தாலும் கிடக்கும்; மங்கலம் மகளிரால் மாலை சூட்டப்பெற்று முரசம் யாழொடு ஒலிக்கத் தெளிந்த நீர்ப் பொய்கையிலும் தெருவிலும் பகைவர் மண் வருந்தத் திரியினும் திரியும்; கடல் போலும் சேனையுடைய வேந்தரது பெரிய களிற்றின் முகத்திற்சென்று தைத்தலையும் ஒழியாது—விரியூர் நக்கனார் பாடியது.

மண் எயில் அழித்த மண்ணு மங்கலமும்-நிலைபெற்ற எயிலை அழித்த மண்ணு நீராடு மங்கலமும்.

இஃது உழிஞைப் படலத்துக் கூறப்பட்ட தாயினும், மண்ணு நீராடுதலின் இதற்கும் துறையாயிற்று. இவ்வாறு செய்தனை எனப் புகழ்ச்சிக் கண் வருவது பாடாண்திணையாம். இவ்வுரை மறத்துறை ஏழற்கும்[8] ஒக்கும். உதாரணம் வந்தவழிக் காண்க.

பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்-பரிசில் கடாவுதலாகிய கடைக்கூட்டு நிலையும்.

உதாரணம்

''ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி உழவாப்
பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறு அழூஉ நந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கண்என்
மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிர்படர்ந் திசினே நற்போர்க் குமண
என்நிலை யறிந்தனை யாயின் இந்நிலைத்
தொடுத்துங் கொள்ளா தமையலென் அடுக்கிய
பண்அமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்அமை முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே.''[9]

(புறம்—164)

---

8. ஏழாவன வெட்சி கரந்தை வஞ்சி உழிஞை நொச்சி தும்பை வாகைப் போர் நிகழ்ச்சிகள்.

9. வயிரியர் இன்மை தீர்க்கும் குடிப்பிறந்தோய்! குமண! சமையலை மறந்தமையால் கொம்மையுயர்ந்த அடுப்பில காளாம்பி பூத்துக்கிடப்பப் பசியால் துன்புற்று, பால் சுரவாமையின் தோல் திரங்கி காம்பின் துளை தூர்ந்து போன வறிய முலையைச் சுவைத்தொறும் பால்வராமையின் அழும் தன் மகன் முகம் நோக்கி அழுவதால் நீர் நிறைந்த கண்களாகிய என் மனைவியின் துயர் நோக்கிப் பரிசில் பெற நினைந்து நின்னிடம் வந்தேன். என் வறுமை நிலையை நீ நன்கு அறிந்தாய் எனின் நின்னை வளைத்தாயினும் பரிசில் பெறாது மீளேன்-குமணனைப் பெருந்தலைச்சாத்தனார் பாடியது.

இன்னும் இதனானே, பரிசில்பெறப் போகல் வேண்டு மென்னும் குறிப்பும் கொள்க.

(உ-ம்) ''நல்யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கிச்
செல்லா மோதில் சில்வலை விறலி
களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
விசும்பாடு எருவை பசுந்தடி தடுப்பப்
பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பின்
குடுமிக் கோமான் கண்டு
நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே.''[10]

(புறம்—64)

பெற்ற பின்னரும் பெருவளன் ஏத்தி நடைவயின் தோன்றிய இருவகை விடையும் - பரிசில் பெற்ற பின்னரும் அவன் கொடுத்த மிக்கவளனை ஏத்தி வழக்கின்கண் தோன்றிய இருவகை விடையும்.

அவையாவன, தான் போதல் வேண்டும் எனக் கூறுதலும் அரசன் விடுப்பப் போதலும்.

வளன் ஏத்தியதற்குச் செய்யுள்.

''தென்பரதவர் மிடல்சாய
வடவடுகர் வாளோட்டிய
தொடையமை கண்ணித் திருந்துவேல் தடக்கை
கடுமா கடைஇய விடுபரி வடிம்பின்
நற்றார்க் கள்ளின் சோழன் கோயில்
புதுப்பிறை அன்ன சுதைசெய் மாடத்துப்
பனிக்கயத் தன்ன நீள்நகர் நின்றென்
அரிக்கூடு மாக்கிணை இரிய ஒற்றி
எஞ்சா மரபின் வஞ்சி பாட
எமக்கென வகுத்த அல்ல மிகப்பல

10. சிலவான வளையணிந்த விறலியே! யானைக்கூட்டம் போரிட்ட பரந்த போர்க்களத்தில் விசும்பில் பறக்கும் பருந்தைக் கீழுளள தசைகள் தடுக்கும்படியான பகைப் புலத்தில் தங்கியுள்ள குடுமிக்கோமானைக் கண்டு அவனால் நம் மிக்க நீர்விட்ட கஞ்சியுணவை நீக்கிப் பெரிய செல்வம் பெற்று வருவதற்காக யாழ் உறையும் பதலை (தோற்கருவி) உறையும் சுருக்கிச் செல்வோம் வருக—பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெடும்பல்லியத்தனார் பாடியது.

மேம்படு சிறப்பின் அருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே அதுகண்டு
இலம்பாடு உழந்தஎன் இரும்பேர் ஒக்கல்
விரற்செறி மரபின செவித்தொடக் குநரும்
அரைக்கமை மரபின மிடற்றியாக் குநரும்
மிடற்றமை மரபின் அரைக்கியாக் குநரும்
கடுந்தெறல் இராமன் உடன் புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வெளவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந் தாஅங்கு
அறாஅ வருநகை இனிது பெற்றிகுமே
இருங்கிளைத் தலைமை எய்தி
அரும்படர் எவ்வம் உழந்ததன் தலையே''[11]

(புறம்—378)

தான் பிரிதல் வேண்டிக் கூறியதற்குச் செய்யுள்.

''ஊனும் ஊணு முனையின் இனிதெனப்
பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
அளவுபு கலந்து மெல்லிது பருகி

---

11, தென்பரதவர் வலி கெடவும் வடக்கில் உள்ள வடுகர் கெட்டோடவும் விரையும் குதிரையைச் செலுத்திய சோழ னின் கோயிலில் பிறை போன்ற மைந்த மாடத்தின் குளம் போன்றமைந்த இடத்திருலிந்து கிணைப் பறையையடித்து அவனின் வஞ்சி வெற்றியை யான் பாட, எங்களுக்கென்று செய்யப்படாதனவான (அரண் மனையார்க்கென்று செய்யப்பட்ட) அணிகலன்களை மிகுதியாக வழங்கினான் — இராவணன் இராமனின் சீதையை வவ்விய காலத்துச் சீதையின் அணிகலன் கண்டு அவற்றைந் தாறுமாறாக அணிந்து மகிழ்ந்த குரங்குகள் போல இதுவரை வறுமையில் இருந்த என் சுற்றத்தார் அவ்வணிகலன்களுள் விரலிற்செறிக்கும் மோதிரங்களைச் செவியிற்செறிப்பவரும் செவியிற் செறிக்கும் தோடுகளை விரலிற் செறிப்பவரும் இடையில் அணிவனவற்றைக் கழுத்தில் அணிபவரும் கழுத்தில் அணிபவற்றை இடையில் அணிபவரும் ஆக கெடாத அரிய மகிழ்ச்சியை வறுமையால் துயர் உழந்ததற்குமேல் அது நீங்கச் சுற்றத்தலைமையினை அடைந்து இனிதே பெற்றேம்—இது வளன் ஏத்தியது.

இது சோழன் செருப்பாழி யெறிந்த இளஞ்செட் சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பாடியது.

விருந்துறுத் தாற்றி இருந்தனெ மாகச்
சென்மோ பெருமஎம் விழவுடை நாட்டெனா
யாந்தன் னறியுநம் ஆகத்தான் பெரிது
அன்புடை மையின் எம்பிரி வஞ்சித்
துணரியது கொளாஅ ஆகிப் பழமூழ்த்துப்
பயம்பகர்வு அறியா மயங்கரின் முதுபாழ்
பெயல்பெய் தன்ன செல்வத்து ஆங்கண்
ஈயா மன்னர் புறங்கடைத் தோன்றிச்
சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி
ஊனுகிர் வலந்த தெண்கண் ஒற்றி
விரல்விசை தவிர்க்கும் மரலையில் பாணியின்
இலம்பாடு அகற்றல் யாவது புலம்பொடு
தெருமரல் உயக்கமுந் தீர்க்குவெம் அதனால்
இருநிலங் கூலம் பாறக் கோடை
வருமழை முழக்கிடைக் கோடிய பின்றைச்
சேயை யாயினும் இவணை யாயினும்
இதற்கொண்டு அறிவை வாழியோ கிணைவ
சிறுநனி, ஒருவழிப் படர்கென் றோனே எந்தை
ஒலிவெள் அருவி வேங்கட நாடன்
உறுவருஞ் சிறுவரும் ஊழ்மாறு உய்க்கும்
அறத்துறை அம்பியின் மான மறப்பின்று
இருங்கோள் ஈராப் பூட்கைக்
கரும்ப னூரன் காதல் மகனே.' '[13]

(புறம்-381)

---

13. ஊனும் சோற்றுணவும் வெறுத்தால் பாலிற் செய்தனவும் பாகிற் செய்தனவுமானவற்றைக் கலந்து உண்டு விருந்து ஊட்டப் பெற்றிருந்தேம் சிலகாலம். பின்னர் நாட்டில் வறுமை வரவே, எம்மை ஆதரித்த வேங்கட நாட்டுக் கரும்பனூரனின் மகனிடம் சென்று இனி யாங்கள் விழவுடைய எம் நாடு செல்வேம் என அறிவித்தேன். அவன் எம்மைப் பிரிதலுக்கு அஞ்சிப் பின் வருமாறு கூறினான். கிணைவனே! நீ ஈயா மன்னர் வாயிலிற் சென்று தடாரிப் பறையை யடித்துப் பாடி நும் வறுமையைப் போக்குவது ஏன்? யானே நின் வறுமைத் துயரைப் போக்குவன்: ஆதலின் மழை பெய்ய நாடு வறுமை நீங்கிச் செழிக்கும் காலை நீ சேய்நாட்டிருந்தாலும் என் நாட்டின் அணிமையில் எங்கிருந்தாலும் இங்கு வருக; அப்போது யான் புரக்கும் நிலையை இப்போது யான் கொடுத்துவிடும் இப்பரிசிலைக் கொண்டு அறிக. ஒருவழியாகச் செல்க; வாழி என்றான்—இது கரும்பனூர்க்கிழானை புறத்திணை நன்னாகனார் பாடியது.

அரசன் விடை கொடுப்பப் போந்தவன் கூற்று.

''நின்நயந்து உறைநர்க்கும் நீநயந்து உறைநர்க்கும்
பன்மாண் கற்பின்நின் கிளைமுத லோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி எதிர்ப்பை நல்கி யோர்க்கும்
இன்னோர்க்கு என்னாது என்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேல் குமணன் நல்கிய வளனே.''[14]

(புறம்-163)

'இருவகை விடையும்' என்றதனால், பரிசில் பெற்ற வழிக்கூறுதலும் பெயர்ந்தவழிக் கூறுதலும் ஆம்

அச்சமும் உவகையும் எச்சம் இன்றி நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும் காலம் கண்ணிய ஓம்படை—அச்சமும் உவகையும் ஒழிவு இன்றி நாளானும் புள்ளானும் பிற நிமித்தத் தானும் காலத்தைக் குறித்த ஓம்படையும்.

அச்சமாவது, தீமை வரும் என்று அஞ்சுதல், உவகையாவது நன்மை வரும் என்று மகிழ்தல். நாளாவது, நன்னாள் தீநாள். புள்ளாவன, ஆந்தை முதலியன. பிற நிமித்தமாவன, அலகு[15] முதலாயின. காலங்கண்ணுதலாவது, வருங்காலங் குறித்தல்.

உதாரணம்

''ஆடியல் அழற்குட்டத்து
ஆர்இருள் அரையிரவின்

14. மனைகிழவோயே! முதிரமலைக் குமணன் வழங்கிய பெருஞ் செல்வத்தை நின்னை விரும்பியவர்க்கும் நின்னால் விரும்பப்பட்டவர்க்கும் நின் சுற்றத்தார்க்கும் நின் வறுமைத்துயர் சிறிது நீங்கக் குறியெதிர்ப்பை (கடன்) கொடுத்தவர்க்கும் கொடுத்தலேயன்றி இன்னவர் இவர் என வேற்றுமை பாராட்டாது சிறப்பாக வாழலாமே என எண்ணிக் கொடுப்பதை நிறுத்தாமல் என்னொடும் கலத்த வேண்டாமல் எல்லார்க்கும் கொடுப்பாயாக.—பெருஞ்சித்திரனார் குமணனிடம் பரிசில் பெற்று வந்து பாடியது.

15. அலகு — பேய்த்தோற்றம்.

முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனிஉயர் அழுவத்துத்
தலைநாண்மீன் எதிர்ஏர்தரத்
தொல்நாள்மீன் துறைபடியப்
பாசிச் செல்லாது ஊசி முன்னாது
அளர்க்கர்த்திணை விளக்காகக்
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
ஒருமீன் விழிந்தன்றால் விசும்பி னானே
அதுகண் டியாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை அருவி நன்னாட்டுப் பொருநன்
நோயில னாயின் நன்றுமற் றில்லென
அழிந்த நெஞ்சம் மடியுளம் பரப்ப
அஞ்சினம்''[16]

(புறம்—229)

என்பது பிறவாறு நிமித்தம் கண்டு அஞ்சியது.

''புதுப்புள் வரினும் பழம்புள் போகினும்
விதுப்புறல் அறியா ஏமக் காப்பினை
அனையை ஆகல் மாறே
மன்னுயிர் எல்லாம் நின்அஞ் சும்மே.''[17]

(புறம்—20)

---

16. பங்குனிமாதமுதற் பதினைந்து நாளில் ஒருநாள் அதாவது மேட ராசியில் கார்த்திகை விண்மீனின் முதற் காலில் பாதியிரவில் அனுட விண்மீன் முதலாகப் புனர்பூசம் ஈறாக விளங்க வானில் உச்சத்திருந்த உத்தர மீன் சாய அதற்கு எட்டாம் மீனாகிய மூலம் எதிரே எழ உத்தரத்துக்கு முன் எட்டாவதாக வுள்ள மிருக சீரிட மீன் துறையிடத்து ஆழ கிழக்கிலும் செல்லாது வடக்கிலும் போகாது வடகிழக்காக வானிலிருந்து ஒரு மீன் விழுந்தது. அது கண்டு யாமும் பிறரும் மாந்தரஞ்சேரல் இரும்பொறை நோயிலனாக என்று நினைந்து கேட்டுக்கு அஞ்சினேம். அதன்படியே ஏழாம் நாள்வர, வேந்தன் யானை உறங்க முரசம் தோல் கிழிந்து உருள வெண்குடை காம்பு நீங்கிக் காய குதிரை கதி நடையின்றிக் கிடக்க மேலோர் உலகம் எய்தினான். வானுலக மகளிர்க்குத் துணையாகித் தன் மகளிரை மறந்தான்.—சேரமான் மாந்தரஞ் சேரல்இரும்பொறை இன்ன நாளில் இறக்கும் என எண்ணியபோது அவ்வாறே இறக்கக் கூடலூர் கிழார் வருந்திப் பாடியது. (கோள் நிலை விபரம் வல்லார்வாய் உணர்க)

17. புதுப்புள் வரினும் பழம் புள் செல்லினும் அஞ்சுதலறியாத பாதுகாவலைச் செய்பவனாவாய்; அத்தகையவன் ஆதலினால் உயிர்கள் யாவும் நினக்கு அஞ்சும்.

என்பது புள்பற்றி வந்தது.

"காலனுங் காலம் பார்க்கும்" (புறம்—41)

என்னும் புறப்பாட்டு, நிமித்தம் பற்றி வந்தது.

"நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்"
(புறம்—195)

என்பது ஓம்படை பற்றி வந்தது.

உளப்பட ஞாலத்து வரும் நடக்கையது குறிப்பின் காலம் மூன்றொடு கண்ணிய வருமே-இவை உளப்படத் தோன்றும் வழக்கினது கருத்தினானே காலம் மூன்றனொடும் பொருந்தக் கருதுமாற்றான் வரும் மேற்கூறி வருகின்ற பாடாண்திணை.

இரண்டாவது புறத்திணை இயல் முற்றிற்று.

(30)

## நச்சினார்க்கினியர்

91. தாவி னல்லிசை........... வருமே.

இதுவும் அது.

இதன்பொருள் :- தாவில் கிடந்தோர்க்கு நல்லிசை கருதிய சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்-தமது வலியாலே பாசறைக் கண் ஒரு மனக்கவற்சியின்றித் துயின்ற அரசர்க்கு நல்ல புகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர் அத்துயிலெடுப்பின் ஏத்தின துயிலெடை நிலையும் :

'கிடந்தோர்க்கு' எனப் பன்மை கூறவே, அவர் துயிலெடுப் புத் தொன்றுதொட்டு வருமென்பதூஉம், சூதர் மாகதர் வேதாளிகர் வந்திகர்[1] முதலாயினோருட் சூதரே இங்ஙனம் வீரத் தால் துயின்றாரைத் துயிலெடுப்புவரென்பதூஉம், யாண்டும் முன்னுள்ளோரையும் பிறரையுங் கூறப்படு மென்பதூஉங் கொள்க. அவர் அங்ஙனந் துயின்றமை பிறர்க்கும் புலப்படப் புகழல் அவர் கருத்தாகலின் ஒருதலைக் காமம் உளதாயிற்று.

---

1. சூதர்-நின்றிருந்து ஏந்திப் பாடுபவர். மாகதர்-இருந்த படி ஏத்துவோர். வேதாளிகர்-தாளத்திற்கேற்ப ஆடுப வர். வந்திகர்-இசைப் பாடற் கலையால் புகழ்வோர்.

(உ-ம்) ''கானம் பொருந்திய கயவாய் மகளிரின்
யானுறுந் துயர நந்திய பானா
ளிமையாக் கண்ணோ டமையாக் காத்தநின்
மூதின் முதல்வன் றுயில்கொண் டாங்குப்
போற்றா மன்னரை யெள்ளிச் சிறிது நீ
சேக்கை வளர்ந்தனை பெரும தாக்கிய
வண்கை யவுண னுயிர்செல வாங்கவ
னன்றுணர்ந் தாங்கு வென்றி மேய
வாடா வஞ்சி மலைந்த சென்னிப்
போரடு தானைப் பொலந்தேர் வளவ
நின்றுயி லெழுமதி நீயு
மொன்றா வேந்தர் பொன்றுதுயில் பெறவே.''[2]

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச் சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்-ஆடன் மாந்தரும் பாடற் பாணரும் கருவிப் பொருநரும்[3] இவருட் பெண்பாலாகிய விறலியுமென்னும் நாற்பாலருந் தாம் பெற்ற பெருஞ் செல்வத்தை எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் ஆண்டுச்சென்று தாம் பெற்றவையெல்லாம் பெறுமாறு கூறிய கூறுபாடும்:

கூத்தராயிற் பாரசவரும்[4] வேளாளரும் பிறரும்[5] அவ்வாடற் றொழிற்கு உரியோரும் பாரதி விருத்தியும் விலக்கியற்கூத்துங்[6] கானகக் கூத்துங் கழாய்க்கூத்தும்[7] ஆடுபவராகச் சாதிவரையறை

---

2. வென்றியுடைய வஞ்சிமாலை சூடிய தலையுடைய தேர் வளவ! மகளிரோடு யான் உற்ற துன்பம் கெட பாதி யிரவில் கண் விழித்துக் காத்த நின் முதுகுடிப் பிறந்த புதல்வன் துயில் கொண்டது போலப் பகைவரை யிகழ்ந்து நீ சிறிது துயில் கொண்டாய். காலயவனன் எனும் அசுரன் அழியுமாறு முசுகுந்தன் துயில் எழுந்தது போல நீயும் பகை வேந்தர் சாம்துயில் கொள்ளுமாறு துயிலெழுவாயாக.

3. இசைக்கருவி கொண்டு ஏர்க்களம் பாடுநரும் போர்க்களம் பாடுநரும்.

4. பாரசவர்-நாடோடிகளாகத் திரியும் ஆரியருள் ஒருவகையினர் போலும்.

5. பிறசாதியினரில்ஆடுதற்றொழிலையே மேற்கொண்டவர்.

6. பாரதி விருத்தியும் விலக்கியற் கூத்தும் கூத்துவகைகள்.

7. கானகக்கூத்து-காட்டுவாழ்வார் ஒழுகலாறு பற்றியாடும் கூத்து. கழாய்க்கூத்து - கழைக்கூத்து - நீண்ட கோலைப் பிடித்துக் கொண்டு கயிற்றின்மேல் நடந்தாடும் கூத்து.

யிலராகலின் அவரை முன்வைத்தார்; பாணரும் பொருநருந் தத்தஞ் சாதியில் திரியாது வருதலிற் சேர வைத்தார்; முற்கூறிய முப்பாலோருட் கூத்தராயினார் எண் வகைச் சுவையும் மனத்தின் கட்பட்ட குறிப்புக்களும் புறத்துப் போந்து புலப்பட ஆடுவார்; அது விறலாகலின் அவ்விறல்பட ஆடுவாளை விறலியென்றார். இவளுக்குஞ் சாதிவரையறையின்மையிற் பின்வைத்தார். பாணரும் இசைப்பாணரும் யாழ்ப்பாணரும் மண்டைப் பாணருமெனப் பலராம்.[8] பொருநரும் ஏர்க்களம் பாடுநரும் போர்க்களம் பாடுநரும் பரணி பாடுநருமெனப் பலராம். விறலிக்கு அன்னதோர் தொழில் வேறுபாடின்றித் தொழிலொன்றாகலின் விறலியென ஒருமையாற் கூறினார்.

ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப் பெற்ற பெருவளம் பெறாஅர்க்குஅறிவுறீஇச் சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்- இல்லறத்தைவிட்டுத் துறவறமாகிய நெறியிடத்து நிற்றல் நன்றென்றுங் கண்ட காட்சி தீதென்றும் மாறுபடத் தோன்றுகையி னாலேயே தான் இறைவனிடத்துப் பெற்ற கந்தழியாகிய செல்வத்தை யாண்டுந் திரிந்து பெறாதார்க்கு இன்னவிடத்தே சென்றாற் பெறலாமென்று அறிவுறுத்தி அவரும் ஆண்டுச் சென்று அக்கந்தழியினைப் பெறும்படி சொன்ன கூறுபாடும்:[9]

'பக்கம்' என்றதனானே அச்செய்யுட்களைக் கூத்தராற்றுப் படை பாணாற்றுப்படை பொருநராற்றுப்படை விறலியாற்றுப் படை முருகாற்றுப்படையென வழங்குதலும் ஆற்றினருமையும் அவனூர்ப் பண்பு முதலியனவுங் கூறுதலுங் கொள்க.

(உ-ம்) ''வான்றோய் வெண்குடை வயமா வளவன்
நின்றோர் தம்மினுந் தோன்ற நல்கினன்
சுரஞ்செல் வருத்தமொ டிரங்கி யென்று
மிரந்தோ ரறியாப் பெருங்கலஞ் சுரக்குவன்
சென்மதி வாழிய நீயே நின்வயின்
ஆடலு மகிழான் பாடலுங் கேளான்

---

8. இசைப்பாணர்-இசையுடன் பாடும் பாணர்.
யாழ்ப்பாணர்-யாழிசைத்துப் பாடும் பாணர்.
மண்டைப் பாணர்-மண்டையில் (ஓட்டில்) பிச்சையேற்றுப் பாடிப் பிழைக்கும் பாணர்.

9. இவ்வுரையால் கடவுளரிடத்துக் கூத்தர் முதலாயினாரை ஆற்றுப்படுத்தலே ஆற்றுப்படையாம் என்பது இவர் கருத்தென அறியலாம்.

வல்லே வருகென விடுப்பி னல்லது
நில்லென நிறுக்குவ னல்ல னல்லிசைப்
பெருந்தகை வேந்தர் கோலமொடு
திருத்தா வாழ்க்கையின் வருந்து வோயே.''[10]

''திருமழை தலைஇய விருணிற விசும்பின்.'' (மலைபடு)

இவை கூத்தராற்றுப்படை.

''பாணன் சூடிய பசும்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
யூரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோவென வினவ லானாக்
காரெ னொக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
இன்னே மாயினே மன்னே யென்று
முடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேக
னெத்துணை யாயினு மீத்த னன்றெ‌ன
மறுமைநோக் கின்றோ வன்றே
பிறர், வறுமை நோக்கின் றவன்கை வண்மையே.''

(புறம்-141)

''மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை''

(சிறுபாண்)

இவை பாணாற்றுப்படை.

''சிலையுலாய் நிமிர்ந்த சாந்துபடு மார்பி
னொலிபுனற் கழனி வெண்குடைக் கிழவோன்

---

10. நல்ல புகழுடைய பெருந்தன்மையான அரசர் கோலமோடு செம்மையுறாத வாழ்க்கையுடன் திரியும் கூத்தனே! வளவனானவன் வள்ளல் என நின்றோருள் தானே சிறந்தவன் என்னுமாறு இரவலர்க்குக் கொடுப்பான்; வழி வருத்தத்துடன் சென்று பிறரிடம் நாளும் இரந்தவர் இதுவரை பார்த்தறியாத கலங்களைக் கொடுப்பான். நீயும் அவனிடம் செல்க. நின்னிடத்து ஆடலையும் பாரான் பாடலையும் கேளான். உடனே வருக என வரவேற்றுப் பரிசு கொடுத்து விடுப்பது அல்லது எம்மிடமே சில காலம் நிற்க எனக்கூறி நிறுத்த மாட்டான்.

வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்
வள்ளிய னாதல் வையகம் புகழினு
முள்ள மோம்புமி னுயர்மொழிப் புலவீர்
யானும், இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை
யொருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்
பாடிமிழ் முரசி னியறேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினே னாக
வகமலி யுவகையொ டணுகல் வேண்டிக்
கொன்று சினந் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழ நல்கின னஞ்சி
யானது பெயர்த்தனெ னாகத் தானது
சிறிதென வுணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்
பெருங்களிறு நல்கி யோனே யதற்கொண்
டிரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினுந்
துன்னரும் பரிசி றருமென
வென்றுஞ் செல்லேனவன் குன்றுகெழு நாட்டே.''

(புறம்-394)

''அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்ச்
சாறுகழி வழிநாட்.''

(பொருந.)

இவை பொருநராற்றுப்படை.

''சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி
தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை
வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்
பெய்யினும் பெய்யா தாயினு மருவி
கொள்ளுழு வியன்புலத் துழைகா லாக
மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரு
நீரினு மினிய சாயல்
பாரி வேள்பாற் பாடினை செலினே.''

(புறம்-105)

''மெல்லியல் விறலிநீ...... காணிய சென்மே.''

(புறம்-133)

---

11. வாள்நுதல் விறலீ! சுனையில் தழைத்த குவளை மலரில் குளிர்ச்சி மிக மழை பெய்யினும் பெய்யாதாயினும் கொள் விதைக்க உழுத வயலில் சிறுசிறு காலாக ஒழுகுமாறு மலையுச்சியினின்று இழியும் அருவி நீரினும் இனிய சாயலுடைய பாரிவேளிடம் நீ பாடிச்சென்றால் சிவந்த அணிகலன்களைப் பெறுவாய்.—இது பாரியைக் கபிலர் பாடியது.

இவை விறலியாற்றுப்படை.

கூத்தராற்றுப்படை தடுமாறு தொழிலாகாமற் கூத்தரை ஆற்றுப்படுத்ததெனை விரிக்க.[12] ஏனையவும் அன்ன.

முருகாற்றுப்படையுட் 'புலம்பிரிந் துறையுஞ் சேவடி' (62-3) யெனக் கந்தழி கூறி, 'நின்னெஞ்சத் தின்னசை வாய்ப்பப் பெறுதி' (65-6) யெனவுங்கூறி, அவனுறையும் இடங்களும் கூறி, ஆண்டுச்சென்றால் அவன் 'விழுமிய, பெறலரும் பரிசினல்கும்' (294-5) எனவுங்கூறி, ஆண்டுத் தான் பெற்ற பெருவளம் அவனும் பெறக் கூறியவாறு காண்க. இதனைப் புலவராற்றுப்படை என்று உய்த்துணராது பெயர் கூறுவார்க்கு முருகாற்றுப்படையென்னும் பெயரன்றி அப்பெயர் வழங்காமை யான் மறுக்க. இனி முருகாற்றுப்படையென்பதற்கு முருகன்பால் வீடு பெறுதற்குச் சமைந்தான் ஓரிரவலனை ஆற்றுப்படுத்த தென்பது பொருளாகக் கொள்க. இனிக் கூத்தர் முதலியோர் கூற்றாகச் செய்யுட் செய்யுங்கால் அவர்மேல் வைத்துரைப் பினன்றிப் புலனுடைமாந்தர் தாமே புலனெறி வழக்கஞ் செய்யாமை யுணர்க.

இனி இசைப்புலவர்க்கும் நாடகப்புலவர்க்கும் இங்ஙனங் கூறலமையாது. அவருள் உயர்ந்தோரல்லாதாரும் அத் தொழிற்குப் பெரும்பான்மையும் உரியராய் நடத்தலின்.

நாளணி செற்ற நீக்கிச் சிறந்த பிறந்த நாள்வயிற் பெரு மங்கலமும்—நாடொறுந் தான் மேற்கொள்ளுகின்ற செற்றங் களைக் கைவிட்டுச் சிறந்த தொழில்கள் பிறத்தற்குக் காரணமான நாளிடத்து நிகழும் வெள்ளணியும்:

அரசன் நாடோறும்தான் மேற்கொள்கின்ற செற்றமாவன:- சிறைசெய்தலுஞ் செருச்செய்தலுங் கொலைபுரிதலும் முதலியன.

---

12. தடுமாறு தொழில்-மூன்றாம் வேற்றுமையா இரண்டாம் வேற்றுமையா எனத் தடுமாறும்படி அமைந்த தொழிற் பெயர். 'புலி கொல் யானை' என்பதில் கொல் என்பது தடுமாறு தொழில். புலியைக்கொன்ற என இரண்டாம் வேற்றுமையிலும் புலியாற்கொல்லப்பட்ட என மூன்றாம் வேற்றுமையிலும் தடுமாறியது. அதுபோலக் 'கூத்தர் ஆற்றுப்படை' என்பதில் ஆற்றுப்படை என்பது தடு மாறியது. கூத்தரை ஆற்றுப்படுத்தல் எனவும் கூத்தரால் ஆற்றுப் படுக்கப்படுதல் எனவும் தடுமாறியது. எனினும் இங்குக் கூத்தரை ஆற்றுப்படுத்தல் என இரண்டாம் வேற்றுமையாகவே விரித்தல் வேண்டும்.

சிறந்த தொழில்களாவன:- சிறைவிடுதலுஞ் செருவொழிதலுங் கொலையொழிதலும் இறைதவிர்தலுந் தானஞ் செய்தலும் வேண்டின கொடுத்தலும் பிறவுமாம்.

மங்கலவண்ணமாகிய வெள்ளணியும் அணிந்து எவ்வுயிர்க் கண்ணும் அருளே நிகழ்தலின் அதனை வெள்ளணியென்ப. ஆகுபெயரான் அப்பொருள் கூறிய செய்யுளும் வெள்ளணி யாயிற்று.

(உ-ம்) ''அந்தண ராவொடு பொன்பெற்றார் காவலர்
மந்தரம் போன் மாண்ட களிறூர்ந்தா—ரெந்தை
யிலங்கிலைவேற் கிள்ளி யிரேவதிநா ளென்னோ
சிலம்பிதன் கூடிழந்த வாறு.''

(முத்தொள்ளாயிரம்-40)

இது. சிலம்பி கூடிழக்குந்துணை அடங்கலும் வெளியாயிற் றென்றலின் வெள்ளணியாயிற்று.

''செய்கை யரிய களவழிப்பா முன்செய்த
பொய்கை யொருவனாற் போந்தரமோ—சைய
மலைச்சிறைதீர் வாட்கண்டன் வெள்ளணிநாள் வாழ்த்திக்
கொலைச்சிறைதீர் வேந்துக் குழாம்.''[13]

இது, சிறைவிடுதல் கூறிற்று.

''கண்ணார் கதவந் திறமின் களிறொடுதேர்
பண்ணார் நடைப்புரவி பண்விடுமி—னண்ணாதீர்
தேர்வேந்தன் றென்னன் றிருவுத் திராடநாட்
போர்வேந்தன் பூச லிலன்.''[14]

(முத்தொள்ளாயிரம்-39)

---

13. சையமலையின் சிறையைத்தீர்த்த வாட்கண்டன் என்பானது பிறந்த நாளான வெள்ளணிநாளினை வாழ்த்தி, அவனால் கொலைச் சிறையினின்றும் விடுவிக்கப் பெற்று வெளிவந்த வேந்தர் கூட்டம் பற்றி ஒரு கால் களவழி நாற்பது பாடிய பொய்கையார் என்னும் புலவனாற் பாடும் தரம் உண்டோ?

14. தேர் வேந்தனாகிய தென்னன் தான் பிறந்த உத்திராட நாளில் போர்வேந்தனாக இருந்தாலும் போர் செய்ய மாட்டான்; ஆதலினால் பரிசிலர்க்குக் கதவம் திறமின்; களிறுதேர் குதிரை ஆகியவற்றைப் போர்க்கோலம் பண்ணுதலை விடுமின்; போர்க்குச் செல்லாதீர்.

இது, செருவொழிந்தது.

> ''ஏமாரு மன்னீ ரெயிறிறமி னெங்கோமான்
> வாமான்றேர்க் கோதை சதயநா—ளாமாறு
> காம நுகருமின் காண்படுமி னென்னுமே
> யேற முரசின் குரல்.''[15]

இதனுள் இழிகுலத்தோன் பறைசாற்றினமை கூறுதலின் இழிந்தோர் கூறுதல் ஒழிந்த மங்கலங்கட்கும் ஒக்கும். 'பெரு மங்கலம்' என்றதனானே பக்கநாளுந் திங்கடோறும் வரும் பிறந்த நாளும் பாடலுட் பயிலாமை யுணர்க.

சிறந்த சீர்த்தி மண்ணும் மங்கலமும்—அரசர்க்குச் சிறப் பெய்திய மிக்கபுகழை எய்துவிக்கும் முடிபுனைந்து ஆடும் நீராட்டு மங்கலமும்:

இதனைப் பிறந்த நாளின் பின் வைத்தார், பொன்முடி புனைந்த ஞான்று தொடங்கி யாண்டு தோறும் இது வருமென் றற்கு. குறுநில மன்னர்க்காயின் அவர்க்குரிய பட்டத்தோடு கூடிய மண்ணுமங்கலமுங் கொள்க:

(உ-ம்) ''அளிமுடியாக் கண்குடையா னாகுதிநாள் வேய்ந்த
வொளிமுடி பொன்மலையே யொக்கு—மொளிமுடிமேன்
மந்திரத்தா லந்தணர் வாக்கியநீ ரம்மலைமே
லந்தரத்துக் கங்கை யனைத்து.''[16]

இதனானே யாண்டு இத்துணைச் சென்றதென்று எழுதும் நாண்மங்கலமும் பெறுதும்.

நடைமிகுத்து ஏத்திய குடைநிழன் மரபும்—உலக வொழுக் கத்தை இறப்ப உயர்த்துப் புகழ்ந்து கூறப்பட்ட குடை நிழல திலக்கணமும்:

---

15. எம் தலைவன் கோதை என்பானின் சதயநாள் இந்நாள் ஆதலால் உள்ளே காவலாய்ப் பதுங்கியிருக்கும் அரசர் களே! அஞ்சாது மதிற் கதவைத் திறமின்; காமத்தை நுகருமின்; நன்கு உறங்குமின் என்று முரசின் குரல் இயம்பும்.

16. கொடுத்தல் ஒழியாத கண்ணிரக்கமே குடையாகவுடைய அரசன் தான் பிறந்த நாளில் செய்யும் ஆகுதிவேட்கும் இந்நாளில் அவன் சூடிய பொன்முடி பொன்மலையை ஒக்கும். அம்முடியில் மந்திரம் கூறி அந்தணர் விட்ட நீரானது அம்மலைமேல்விழும் ஆகாய கங்கை போன்றது.

இங்ஙனம் புனைந்துரைத்தற்கு ஏதுவாயது நிழலாம்: என்னை? அந்நிழல் உலகுடனிழற்றியதாகக் கூறுதலும் பட்டுக் குடிபுறங் காத்தற்குக் குறியாகக் குடைகொண்டேனென்று அக்கொற்றவன் குறிக்கவும் படுதலின்.

'மரபு' என்றதனாற் செங்கோலுந் திகிரியும் போல்வன வற்றைப் புனைந்துரையாக்கலுங் கொள்க.

(உ-ம்) ''மந்தரங் காம்பா மணிவிசும் போலையாத்
திங்க ளதற்கோர் திலதமா—வெங்கணு
முற்றுநீர் வைய முழுது நிழற்றுமே
கொற்றப்போர்க் கிள்ளி குடை.[17]

(முத்தொள்ளாயிரம்-35)

''அறநீர்மை தாங்கி யளப்பரிதாய் வானப்
புறநீர்போன் முற்றும் பொதியும்—பிறரொவ்வா
மூவேந்த ருள்ளு முதல்வேந்தன் முத்தமிழ்க்குக்
கோவேந்தன் கண்டன் குடை.''[18]

' ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பி னடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ.''[19]

(புறம்-35; 17-1)

---

17. கிள்ளியின் குடையானது மந்தரமலை காம்பாக வானம் போர்த்தும் ஓலை (ஆடை)யாகத் திங்கள் அதற்கிட்ட பொட்டாக அமைந்து வையம் முழுதும் நிழல் செய்யும்.

18. ஒப்பார் பிறர் இல்லாத மூவேந்தருள் முதல் வேந்தனும் முத்தமிழ்க்கோ வேந்தனும் கண்டன் எனும் பேருடைய வனுமாகிய பாண்டியனது குடையானது அறத்தன்மை பொருந்தி அளத்தற் கரியதாய் வான் மழைபோல உலக முழுதும் கவிந்து காக்கும் இயல்பினது.

19. கூர்வேல் வளவ! ஞாயிற்றைத் தாங்கிய மலையுச்சியில் திரண்ட மேகம் வானின் நடுவில் நின்றது போல விளங்கும் நின் குடையானது வெயிலை மறைக்கக் கொண்டது அன்று; வருந்திய குடிமக்களின் வருத்தத் தைப் போக்குதற்கே கொண்டதாகும்.

''திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதுங்
கொங்கலர் தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான்.''

(சிலப்-மங்கல.)

''திங்கண் மாலை வெண்குடையான் சென்னி செங்கோ
லதுவோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி
காவேரி.''

(சிலப்-கானல்.)

''ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதுங்
காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்.''

(சிலப்-மங்கல.)

இவை குடையையும் செங்கோலையும் திகிரியையும் புனைந்தன.

மாணார்ச் சுட்டிய வாண்மங்கலமும்— பகைவரைக் குறித்த வாள் வென்றியாற் பசிப்பிணி தீர்ந்த பேய்ச் சுற்றமும் பிறரும் வாளினை வாழ்த்தும் வாண்மங்கலமும்.

இது, பிறர் வாழ்த்தப்படுதலிற் கொற்றவையைப் பரவும் 'வென்ற வாளின்மண்' (68) ணென்பதனின் வேறாயிற்று. புகழ்ச்சிக்கட் பகைவரை இகழ்ந்து புகழ்தலின் 'மாணார்ச் சுட்டிய'[20] என்றார்.

(உ-ம்) ''ஆளி மதுகை யடல்வெய்யோன் வாள்பாடிக்
கூளிகள் வம்மினோ கூத்தாடக் காளிக்குத்
தீராத வெம்பசி தீர்த்துநாஞ் செங்குருதி
நீராட்டி யுண்ட நிணம்.[21]

---

20. மாணார்ச்சுட்டிய-பகைவர் இகழ்ச்சியைச் சுட்டிக்கூறிய.

21. கூளிகளே! காளிக்குச் செங்குருதியால் நீராட்டி உண்ணும் தசையைக் கொண்டு அவளின் தீராத பசியை நாம் தீர்த்தோம்; இனி ஆளியின் வலமும் போரில் விருப்பமும் உடையோனாகிய அரசனின் வாளைப் புகழ்ந்துபாடி கூத்தாடுவதற்கு வம்மின்

வாண் மங்கலத்துக்கு இளம்பூரணர் காட்டிய ''பிறர்வேல் போலாதாகி'' என்னும் உதாரணமே சிறக்கும்.

''அரும்பவிழ்தார்க் கோதை யரசெறிந்த வொள்வாட்
பெரும்புலவுஞ் செஞ்சாந்து நாறிச்—சுரும்பொடு
வண்டாடும் பக்கமு முண்டு குறுநரி
யுண்டாடும் பக்கமு முண்டு.''[22]

(முத்தொள்-38)

இது, பிறர் கூறியது. இது பரணியிற் பயின்றுவரும்.

மன்னெயில் அழித்த மண்ணு மங்கலமும்—மாற்றரசன் வாழ்ந்த மதிலையழித்துக் கழுதையோரான் உழுது வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தி (புறம்-392) மங்கல மல்லாதன செய்தவன் மங்கலமாக நீராடுமங்கலமும்:

அழித்ததனான் மண்ணு மங்கலம்[23]

(உ-ம்) ''கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்''

(புறம்-15)

என எயிலழித்தவாறு கூறி,

''வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி, யூப நட்ட''

(புறம்-15: 20-1)

எனவே ஒருவாற்றான் மண்ணியவாறுங் கூறியவாறு[24] காண்க.

குடுமிகொண்ட மண்ணு மங்கலம் எயிலழித்தல் கூறாமையின் இதனின் வேறாயிற்று.

பரிசில் கடைஇய நிலையும்—பரிசிலரை நீங்குதலமையாது நெடிது கொண்டு ஒழுகிய தலைவற்குப் பரிசில் வேட்டோன் தன் கடும்பினது இடும்பை முதலியன கூறித் தான் குறித்த பொருண்மையினைச் செலுத்திக் கடாவின நிலையும்:

---

22. கோதையினது அரசரைக் கொன்றவாளானது புலால் நாற்றமும் சந்தன நாற்றமும் கொண்டதால் சுரும்பும் வண்டும் மொய்க்கும் பக்கத்தையும் குள்ள நரி வந்து தசையுண்டு ஆடும் பக்கத்தையும் உடையதாயிற்று.

23. அழித்த மண்ணு மங்கலம்—காரணப் பொருளில் வந்த பெயரெச்சத் தொடர்.

24. வேள்வி முற்றுதற்கு நீராடுதல் வேண்டுதலின் இவ்வாறு கூறினார்.

கடைக்கூட்டு நிலையும்— வாயிலிடத்தே நின்று தான் தொடங்கிய கருமத்தினை முடிக்கும் நிலையும்:

இதுவும் இழிந்தோர் கூற்றாயிற்று. இருத்தலே அன்றிக் கடாவுதலின். 'நிலை' யென்றதனானே பரிசில் பெறப் போகல் வேண்டுமென்னுங் குறிப்பும் பரிசினிலையும் பல்வகையாற் கூறுதல் கொள்க.

(உ-ம்) ''ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பி
னாம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
யில்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
வென்னிலை யறிந்தனை யாயி னிந்நிலைக்
கொடுத்தி கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின் வயிரிய
ரின்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே.''

(புறம்-164)

இது பரிசில் கடாநிலை.

''மதியேர் வெண்குடை யதியர் கோமான்
கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்
பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கை
யொருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
வுருகெழு மன்ன ராரெயில் கடந்து
நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத்
தணங்குடை மரபி னிருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்
வைகலு ழுழவ வாழிய பெரிதெனச்
சென்றியா னின்றனெ னாக வன்றே
யூருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்மெனத்

தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ
யூண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்
தரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவட் டந்தோன் பெரும்பிறற் கடையே.'' [25]

(புறம்-392)

இது கடைநிலை.

''நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி
களிற்றுக் கணம் பொருத கண்ணகன் பறந்தலை
விசும்பா டெருவைப் பசுந்தடி தடுப்பப்
பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பிற்
குடுமிக் கோமாற் கண்டு
நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே.''

(புறம்-64)

இது போகல்வேண்டுங் குறிப்பு.

''ஊனு மூனு முனையி னினிதெனப்
பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவு
மளவுபு கலந்து மெல்லியது பருகி
விருந்துறுத் தாற்றி யிருந்தனெ மாகச்
சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென
யாந்தன் னறியுந மாகத் தான்பெரி
தன்புடை மையி னெம்பிரி வஞ்சித்

---

25. இவ்வுலகில் கரும்பைக் கொண்டு வந்தவனாகிய அதியமான் மகனாகிய எழினியின் அரண்மனைக் கடைவாயிலில் நின்று யான், காலையில் கிணைப் பறையையடித்து, திறை கொடாத மன்னர் மதிலை வென்று கடந்து அவர் இடந்தோறும் கழுதையேர் பூட்டி வரகும் கொள்ளும் விதைக்கும் உழவனே! மிக வாழிய என்று பாடி நின்றேனாக, அப்போதே என் கந்தையாடையை நீக்கி நுண்ணிய நூலாடையுடுத்திக் கலத்தில் ஊனும் நாட்படு கள்ளும் கொடுத்ததோடு அல்லாமலும் கொள்ளும் முறையில் விருந்தும் அளித்தான்.- இப்பாடல் அதியமான் அஞ்சி மகன் பொகுட்டெழினியை ஔவையார் பாடியது.

துணரியது கொளாஅ வாகிப் பழமூழ்த்துப்
பயம்பகர் வறியா மயங்கரின் முதுபாழ்ப்
பெயல்பெய் தன்ன செல்வத் தாங்க
ணீயா மன்னர் புறங்கடைத் தோன்றிச்
சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி
யூன்சுகிர் வலந்த தெண்கண் ணொற்றி
விரல்விசை தவிர்க்கு மரலைப் பாணியி
னிலம்பா டகற்றல் யாவது புலம்பொடு
தெருமர லுயக்கமுந் தீர்க்குவோ மதனா
ணிருநிலங் கூலம் பாறக் கோடை
வருமழை முழக்கிசைக் கோடிய பின்றைச்
சேயை யாயினு மிவணை யாயினு
மிதற்கொண் டறிநை வாழியோ கிணைவ
சிறுநனி, யொருவழிப் படர்கென் றோனே யெந்தை
யொலிவெள் ளருவி வேங்கட நாட
னுறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கு
மறத்துறை யம்பியின் மான மறப்பின்
றிருங்கோ ளீராப் பூட்கைக்
கரும்ப னூரன் காதன் மகனே.''

(புறம்-381)

இது, மேலும் இக்காலத்தும் இங்ஙனந் தருவலென்றா னெனக் கூறினமையின் அவன் பரிசினிலை கூறிற்று.

''குன்று மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற வென்னயந் தருளி யீதுகொண்
டீங்கனஞ் செல்க தானென வென்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணா தீத்த விப்பொருட் கியானோர்
வாணிகப் பரிசில னல்லேன் பேணித்
தினையனைத் தாயினு மினிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே.''*[26]

(புறம்—208)

---

26. அதியமான் நெடுமான் அஞ்சியுழைச் சென்ற பெருஞ்சித்திரனாரைக் காணாது இது கொண்டு செல்க என்று பரிசில் கொடுப்பக் கொள்ளாது அவர் சொல்லிய பாடல் இது.

என்னும் புறப்பாடடும் அப்பரிசினிலையைக் கூறியது காண்க.

பெற்ற பின்னரும் பெருவளம் ஏத்தி நடைவயின் தோன்றும் இருவகை விடையும்—அங்ஙனம் பரிசில் பெற்ற பின் அவனும் அவன் கொடுத்த பெருவளனை உயர்த்துக் கூறி உலக வழக்கிய லால் தோன்றும் இரண்டு வகைப்பட்ட விடையும்:

இருவகையாவன : தலைவன் தானே விடுத்தலும் பரிசிலன் தானே போகல் வேண்டுமெனக் கூறி விடுத்தலுமாம்.

(உ-ம்) ''தென்பரதவர் மிடல்சாய
வடவடுகர் வாளோட்டிய
தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா கடைஇய விடுபரி வடிம்பி
னற்றார்க் கள்ளின் சோழன் கோயிற்
புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்
பனிக்கயத் தன்ன நீணகர் நின்றென்
னரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
யெஞ்சா மரபின் வஞ்சி பாட
வெமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்
டிலம்பா டுழந்தவென் னிரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின செவித்தொடக் குநருஞ்
செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரு
மரக்கமை மரபின மிடற்றியாக் குநரு
மிடற்றமை மரபின வரைக்கியாக் குநருங்
கடுந்தே றிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்

---

பரிசில் பெற்றுச் செல்வதற்காகக் குன்றும் பெருமலையும் பின் நிற்குமாறு வந்தேன் என்று யான் வாயிலிடம் சொல்லி நிற்க, என்னைக் காணாமலே இப்பரிசில் பெற்றுச் செல்க எனச் சொல்ல என்னை எப்படியறிந் தான் அஞ்சி! என்னைப் பாராமலே கொடுத்த இப்பரி சிலைப் பெறுவதற்கு யான் வாணிகப் பரிசிலன் இல்லை. பரிசிலர் பெருமையளவறிந்து திணையளவு சிறிய பரிசி லாயினும் தருவது சிறந்ததாகும்.

செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்
கறாஅ வருநகை யினிதுபெற் றிகுமே
யிருங்கிளைத் தலைமை யெய்தி
யரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே.''

(புறம்—378)

இது, தானே போவென விடுத்தபின் அவன் கொடுத்த வளனை உயர்த்துக் கூறியது.

''உயிர்ப்பிடம் பெறாஅ தூண்முனிந் தொருநாட்
செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய
செல்வ சேறுமெந் தொல்பதிப் பெயர்ந்தென
மெல்லெனக் கிளந்தன மாக வல்லே
யகறி ரோவெம் மாயம் விட்டெனச்
சிரறிய வன்போற் செயிர்த்த நோக்கமொடு
துடியடி யன்ன தூங்குநடைக் குழவியோடு
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்
தன்னறி யளவையிற் றரத்தர யானு
மென்னறி யளவையின் வேண்டுவ முகந்துகொண்
டின்மை தீர வந்தனென்.''[27]

(பொருந—119—29)

இது யான் போகல் வேண்டுமெனக் கூறி விடுத்தபின் அவன் தந்த வளனை உயர்த்துக் கூறியது.

'நடைவயின் தோன்று' மென்றதனாற் சான்றோர் புலனெறிவழக்கஞ் செய்துவரும் விடைகள் பலவுங் கொள்க. அவை பரிசில் சிறிதென்று போகலும், பிறர்பாற் சென்று பரிசில் பெற்று வந்து காட்டிப் போகலும், இடைநிலத்துப் பெற்ற பரிசிலை இடை நிலத்துக் கண்டார்க்குக் கூறுவனவும், மனைவிக்கு மகிழ்ந்து கூறுவனவும், பிறவும் வேறுபட வருவனவெல்லாங் கொள்க.

---

27. கரிகாற் சோழனை முடத்தாமக் கண்ணியார் பாடியது. தினமும் மூச்சு விட இடமில்லாமல் உண்டதனால் உணவை வெறித்து ஒருநாள் கரிகாலனைப் பார்த்துச் செல்வ! எம் பழைய ஊர்க்குச் செல்வேம் என மெல்லக் கூறினேமாக, உடனே எம் கூட்டத்தை விட்டுப் பிரிகுதீரோ என்று கூறிச் சினந்தவன் போலும் பார்வையொடு கன்றும் பிடியும் களிறுமாக வேண்டியவற்றைக் கொள்க என்று தன் செல்வ நிலையறிந்த அளவில் தரத்தர என் தகுதியறிந்த அளவில் யான் வேண்டியவற்றைக் கொண்டு என் வறுமைதீர வந்து சேர்ந்தேன்.

(உ-ம்) ''ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிதும்
ஈதல் லெளிதே மாவண் டோன்ற
லதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே.''[28]

(புறம்—121)

இது சிறிதென்ற விடை.

''இரவலர் புரவலை நீயு மல்லை
புரவல ரிரவலர்க் கில்லையு மல்ல
ரிரவல ருண்மையுங் காணினி யிரவலர்க்
கீவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல் யானே.''[29]

(புறம்—162)

இது பிறன்பாற் பெரிது பெற்றுச் சிறிது தந்தவற்குக் காட்டிய விடை.

'வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி' என்னும் (152) புறப்பாட்டு இடைநிலத்திற் பரிசு பெற்றமை கண்டார்க்குக் கூறியது.

''நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்குங்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்

---

28. மாவண்தோன்றலே! ஓர்திசையில் உள்ள ஒருவனை நினைத்து நான்கு திசைகளிலிருந்தும் பலரும் வருவர் பரிசிலர். அவர் தம் சிறப்புகளைத் தனிப்பிரித்துணர்தல் அரிது; ஆனால் மிகவும் கொடுத்தல் எளிதாகும். அதனை நீ நன்கு அறிந்தாயாயின் புலவரிடத்துப் பொது நோக்கை விட்டுச் சிறப்பாக நோக்குவாயாக.

29. இரவலரைக் காப்பவன் நீ மட்டுமல்லன்; இரவலர்க்கு வேறு புரவலர் இல்லாமலும் இல்லை. கடிய குதிரை யுடைய தோன்றலே! இரவலரும் அவர்க்கு ஈயும் புரவலரும் இருத்தலை என்னைக் கொண்டு காண்பாயாக. நீ சிறிது கொடுப்பக் கொள்ளாது சென்று வேறு புரவலனிடம் பாடிப் பெற்று வந்து நின்காவல் மரத்தில் கட்டப் பட்ட யானையே அப்பரிசிலாகும். காண்க; இனிச் செல்வேன்.

னெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கு
மின்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்து மென்னாது நீயு
மெல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
றிருந்துவேற் குமண னல்கிய வளனே.''

(புறம்-163)

இது மனைக்குக் கூறியது.

நாளும் புள்ளும் பிறவற்று நிமித்தமும் அச்சமும் உவகையும் எச்சமின்றிக் காலங் கண்ணிய ஓம்படை உளப்பட—நாணிமித்தத் தானும் புண்ணிமித்தத்தானும் பிறவற்றினிமித்தத்தானும் பாடாண்டலைவர்க்குத் தோன்றிய தீங்கு கண்டு அஞ்சிய அச்சமும் அது பிறத்தற்குக் காரணமாகிய அன்பும் ஒழிவின்றிப் பரிசிலர்க்கு நிகழ்தலின் அவர் தலைவர் உயிர் வாழுங் காலத்தைக் கருதிய பாதுகாவன் முற்கூறியவற்றோடேகூட :

ஒருவன் பிறந்தநாள்வயின் ஏனைநாள் பற்றிப் பொருந் தாமை பிறத்தலும்,[30] அவன் பிறந்த நாண்மீனிடைக்கோண்மீன்[31] கூடியவழி அவன் நாண்மீனிடைத் தீதுபிறத்தலும், வீழ்மீன்[32] தீண்டிய வழி அதன்கண் ஒரு வேறுபாடு பிறத்தலும் போல்வன நாளின்கண் தோன்றிய நிமித்தம்; 'புதுப்புள் வருதலும் பழம்புட் போதலும்' பொழுதன்றிக் கூகை குழறலும் போல்வன புள்ளின் கண் தோன்றிய நிமித்தம்; ஓர்த்து நின்றுழிக்[33] கேட்ட வாய்ப் புள்ளும் ஓரிக்குரலுள்ளிட்டனவுங் கழுதுடன் குழீஇய குரல் பற்றலும் வெஞ்சுடர் மண்டிலத்துக் கவந்தம்[34] வீழ்தலும் அதன் கண் துளைதோன்றுதலுந் தண்சுடர் மண்டிலம் பகல் நிலவெறித் தலும் போல்வன பிறவற்றுக்கண் தோன்றிய நிமித்தம்.

உவகை-அன்பு. இந்நிமித்தங்கள் பிறந்துழித் தான் அன்பு நிகழ்த்தினான் ஒரு பாடாண்டலைவனது வாழ்க்கை நாளிற்கு

---

30. பிறந்தநாளுடன் மற்றை நாள்கள் (நட்சத்திரங்கள்) பொருந்திவாராமை.
31. கோள்மீன்—செவ்வாய் புதன் முதலியன.
32. வீழ்மீன்—எரிந்துவிழும் நாள் (நட்சத்திரம்).
33. ஓர்த்து நின்றுழி—நற்சொல் கேட்டல் வேண்டும் என எண்ணி நின்றபோது.
34. தலையற்ற குறையுடன் தோற்றம்.

ஏதம் வருங்கொலென்று அஞ்சி அவற்குத் தீங்கின்றாக வென்று ஓம்படை கூறுதலின் அது காலங்கண்ணிய ஓம்படையாயிற்று. எஞ்ஞான்றுந் தன் சுற்றத்து இடும்பை தீர்த்தானொருவற்கு இன்னாங்கு[35] வந்துழிக் கூறுதலின் இற்றை ஞான்று பரிசிலின்றேனும் முன்னர்ப் பெற்ற பரிசிலை நினைந்து கூறினானாமாகவே கைக்கிளைக்குப் புறனாயிற்று. இவன் இறத்தலான் உலகு படுந்துயரமும் உளதாகக் கூறலிற் சிறந்த புகழுங் கூறிற்று.

'நெல்லிரியு மிருந்தொழுவர்' என்னும் (24) புறப் பாட்டினுள் 'நின்று நிலைஇயர் நின் னாண்மீன்' என அவனாளிற்கு மூற் கூறியவாற்றான் ஓரிடையூறு கண்டு அவன்கண் அன்பால் அஞ்சி ஓம்படை கூறியது.

(உ-ம்) ''ஆடிய லழற்குட்டத்
தாரிரு ளரையிரவின்
முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனி யுயரழுவத்துத்
தலைநாண்மீ னிலைதிரிய
நிலைநாண்மீ னதனெதி ரேர்தரத்
தொன்னாண்மீன் றுறைபடியப்
பாசிச் செல்லா தூசி முன்னா
தளக்கர்த்திணை விளக்காகக்
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
யொருமீன் வீழ்ந்தன்றால் விசும்பி னானே
யதுகண் டியாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருந
னோயில னாயி னன்றுமற் றில்லென
வழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
வஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
மைந்துடை யானை கைவைத் துறங்கவுந்
திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவுங்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவுங்
காலியற் கலிமாக் கதியின்றி வைகவு
மேலோ ருலக மெய்தின னாகலி
னொண்டொடி மகளிர்க் குறுதுணை யாகித்
தன்றுணை யாய மறந்தனன் கொல்லோ
பகைவர்ப் பிணிக்கு மாற்ற னசைவர்க்

35. இன்னாங்கு—துன்பம், கேடு.

களந்துகொடை யறியா வீகை
மணிவரை யன்ன மாஅ யோனே.''

(புறம்-229)

இப்புறப்பாட்டும் அது. இதனுட் பாடாண்டலைவனது நாண்மீனை வீழ்மீன் நலிந்தமை பற்றிக் கூறியது.

''இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமு, மென்றாங்
கவையளந் தறியினு மளத்தற் கரியை
யறிவு மீரமும் பெருங்கண் ணோட்டமுஞ்
சோறு படுக்குந் தீயோடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே
திருவி லல்லது கொலைவில் லறியார்
நாஞ்சி லல்லது படையு மறியார்
திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவ ருண்ணா வருமண் ணினையே
யம்புதுஞ்சுங் கடியரணா
லறந்துஞ்சுஞ் செங்கோலையே
புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா வேமக் காப்பினை
யனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லாஞ் நின்னஞ் சும்மே.''

(புறம்—20)

புதுப்புள் வந்ததும் பழம்புட் போயதுங் கண்டதீங்கின் பயன் நின்மேல் வாராமல் விதுப்புறவறியா ஏமக் காப்பினையாக என்று ஓம்படை கூறியது. அதுமேல் நின்னஞ்சுமென்று அச்சங்கூறி வெளிப்படுத்ததனான் உணர்க.

''மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயுந்
தீமுரணிய நீரு, மென்றாங்

ஐம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்
வலியுந் தெறலு மளியு முடையோய்
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்து நின்
வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பி னன்னாட்டுப் பொருந
வான வரம்பனை நீயோ பெரும
வலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
யீரைம் பதின்மரும் பொதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்
பாஅல்புளிப்பினும் பகலிருளினு
நாஅல்வேத நெறிதிரியினுந்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலியரோ வத்தை யடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
யந்தி யந்தண ரருங்கட னிறுக்கு
முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே.''[26]

(புறம்-2)

என்னும் புறப்பாட்டுப் பகைநிலத்தரசற்குப் பயந்தவாறு கூறிப் பின்னர்த் திரியாச் சுற்றமொடு விளங்கி நடுக்கின்றி நிற்பா

---

36. சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியது.

நிலம்போலப் போற்றார்ப் பொறுத்தலும் விசும்பு போல ஆராய்ச்சியகலமும் காற்றுப்போல வலிமையும் தீப்போல அழித்தலும், நீர்போல இரக்கமும் உடையவனே! நின் கீழ்க்கடலில் தோன்றும் ஞாயிறு நின்மேல் கடலில் வந்து குளிக்கும்படியான வருவாய் உடைய நாட்டுக்குரிய வீரனே! வானவரம்ப! பெரும! நீ பாண்டவரோடு நூற்றுவர் பொருது களத்து ஒழியுமாறு பெருஞ்சோறு அளித்தாய். பால் புளிப்பினும் பகல் இருளாயினும் வேதநெறி மாறுபடினும் மாறுபடாத சுற்றத்தோடு விளங்கி, மலையடுக்கத்தில் பெண் மானானது அந்தணர் அந்தி வேள்வி செய்த தீயாகிய விளக்கில் தூங்கும்படியான இமயமலையும் பொதியமலையும் அசைவின்றி என்றும் நிற்பதுபோல நீயும் நடுக்கம் இல்லாமல் என்றும் நிலைத்து வாழ்வாயாக.

யென அச்சந்தோன்றக் கூறி ஓம்படுத்தலின் ஓம்படை வாழ்த்தா யிற்று. 'காலனுங் காலம்' என்னும் (41) புறப்பாட்டும் அது.

ஞாலத்து வருஉம் நடக்கையது குறிப்பிற் கால மூன்றொடு கண்ணிய வருமே—உலகத்துத் தோன்றும் வழக்கினது கருத்தி னானே மூன்று காலத்தோடும் பொருந்தக் கருதுமாற்றான் வரும் மேற்கூறி வருகின்ற பாடாண்டிணை என்றவாறு.

என்றது, இவ்வழக்கியல் கால வேற்றுமை பற்றி வேறுபடு மாயின் அவையும் இப்பொருள்களின் வேறுபடா என்பதுணர்த்திய வாறு.

அவை, பகைவர் நாட்டுப் பார்ப்பார் முதலியோரை ஆண்டு நின்றும் அகற்றிப் பொருதல் தலையாய அறம்; அதுவன்றிப் பொருள் கருதாது பாதுகாவாதான் நிரையைத் தான்கொண்டு பாதுகாத்தல் அதனினிழந்த இடையாய அறம்; அதுவன்றிப் பிறர்க்கு அளித்தற்கு நிரைகோடல் நிகழினும் அஃது அதனினு மிழிந்த கடையாய அறமெனப்படும். இனிப் பகைவன் போற்றாத நாட்டைக் கைக்கொண்டு தான் போற்றச் சேறலும் பொருள் வருவாய் பற்றிச் சேறலும் வஞ்சித்துச் சேறலும் போல்வன ஒன்றனினொன்றிழிந்த ஞாலத்து நடக்கைக்குறிப்பு; மாற்றரசன் முற்றிய வழி ஆற்றாதோன் அடைத்திருத்தலும் அரசியலாயினும் அவன் வென்றியுள்ளமொடு வீற்றிருத்தலுந் தனக்கு உதவி வரவேண்டியிருத்தலும் ஆற்றலன்றி ஆக்கங்கருதாது காத்தே யிருத்தலும் ஒன்றனினொன்றிழிந்த நடக்கைக் குறிப்பு.

இனி வாகைக்குப் பார்ப்பன ஒழுக்க முதலியன நான்கற்கும் வேறுபட வருதலுங் கொள்க. காஞ்சிக்கும் அவரவர் அறிவிற் கேற்ற நிலையாமை கொள்க, உயிரும் உடம்பும் பொருளுமென்ற மூன்றும் பற்றி. இது பாடாண்டிணையுட் கூறினார், எல்லாத் திணைக்கும் புறனடையாதல் வேண்டி. இனிக் கடவுள் வாழ்த் திற்குத் தலை இடை கடை கோடலும் அறுமுறை வாழ்த்திற்கும் அவற்றின் ஏற்றழிவு பற்றிக் கோடலும் பிறவுஞ் சான்றோர் செய்யுட்கண் வேறுபட வருவனவெல்லாம் இதனான் அமைக்க. முற்கூறியனவெல்லாம் ஓம்புடையுளப்படக் கண்ணிய வரு மென்பது.

(36)

இரண்டாவது புறத்திணையியற்கு ஆசிரியர்—பாரத்துவாசி—நச்சினார்க்கினியர் செய்த காண்டிகையுரை முடிந்தது.

**சோம. இளவரசு**

சூத்திரம் ;- 35

''தாவில் நல்லிசை.............கண்ணிய வருமே.''

கருத்து :- இது, பாடாண்துறை கூறுகிறது.

பொருள் :- கிடந்தோர்க்குத் தாவினல்லிசை கருதிய சூதரேத்திய துயிலெடை நிலையும்—துயிலும் புரவலர்க்குப் புரைபடா அவர் நல்ல புகழைக் கருதிக் கட்டியங் கூறுவோர் எடுத்துரைக்கும் துயிலெடை என்னும் பள்ளி எழுச்சியும்;

அதற்குச் செய்யுள் :-

''கானம் பொருந்திய கயவாய் மகளிரின்
யானுறுந் துயரம் நந்திய பானாள்
இமையாக் கண்ணோ டமையாக் காத்தநின்
மூதில் முதல்வன் துயில்கொண் டாங்குப்
போற்றா மன்னரை யெள்ளிச் சிறிதுநீ
சேக்கை வளர்ந்தனை பெரும! தாக்கிய
வண்கை யவுண னுயிர்செல வாங்கவ
னன்றுணர்ந் தாங்கு வென்றி மேய
வாடா வஞ்சி மலைந்த சென்னிப்
போரடு தானைப் பொலந்தேர் வளவ!
நின்றுயி லெழுமதி நீயும்
ஒன்றா வேந்தர் பொன்றுதுயில் பெறவே.''

நச்—உரைமேற்கோள்.

2. கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்—கூத்தர் முதலிய நால்வகை இரவலரும்;

[கூத்தர், பிறரொப்புக் கருதாது, பேசாமல் பாடாமல் மெய்ப்பாட்டால் அவிநயித்தாடுபவர். பாணர் இசை பாடுவோர்; இவர் தம் பாட்டும் கையாளுமிசைக் கருவியுங் கருதி, இசைப் பாணர்—யாழ்ப்பாணர் — துடிப்பாணர் அதாவது மண்டைப் பாணர்—எனப் பலதிறப்படுவர்; யாழ்ப்பாணர் தம் யாழ்பற்றிச் சீறியாழ்ப்பாணர் அல்லது சிறுபாணர்—பேரியாழ்ப்பாணர் அல்லது பெரும்பாணர் — என்றிருவகையினராவர். இனி, பொருநராவார் நாடகத்தில் குறித்த ஒருவரைப்போல நடிப்பவர். (பொருந்—ஒப்பு) விறலி, இசைக்கேற்ப ஆடுபவள் [விறல்—உள்ளுணர்வை மெய்படக் காட்டுந்திறன். அத்திறலுடையார் விறலியர்.]

ஆற்றிடைக்காட்சி உறழத்தோன்றிப் பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச் சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்- (பரிசில் பெற்று மீளுமொருவன் தன்னெதிரே பரிசில் விரும்பித் தரும் புரவலரைத் தேடிவரும் இரவலனுக்கு) வழியிடையில் தான் பெற்றுவரும் மிக்க பரிசில் வளத்தை மற்றவனுக்குத் தெரிவித்துத் தனக்களித்த புரவலன்பாற் சென்றுபெறச்சொல்லும் பகுதியும்;

இதில், கூத்தராற்றுப்படைக்கு மலைபடுகடாமும், பாணாற்றுப்படைக்குச் சிறுபாண்—பெரும்பாண்பாட்டுக்களும், பொருநராற்றுப்படைக்கு முடத்தாமக்கண்ணியார் கரிகாலனைப் பாடிய பொருநராற்றுப்படைச் செய்யுளும் விறலியாற்றுப்படைக்குப் புறநானூற்று 105, 33 பாட்டுக்களும் எடுத்துக்காட்டாகும்.

(அ) கூத்தராற்றுப்படைக்குச் செய்யுள் :

''வான்தோய் வெண்குடை வயமா வளவன்
ஈன்றோர் தம்மினும் தோன்ற நல்கினன்;
சுரஞ்செல் வருத்தமொ டிரங்கி யென்றும்
இறந்தோ ரறியாப் பெருங்கலஞ் சுரக்குவன்;
சென்மதி வாழிய நீயே, நின்வயின்
ஆடலு மகிழான், பாடலுங் கேளான்,
வல்லே வருகென விடுப்பி னல்லது
நில்லென நிறுக்குவ னல்லன்; நல்லிசைப்
பெருந்தகை வேந்தர் கோலமொடு,
திருந்தா வாழ்க்கையின் வருந்து வோயே.''

நச்—உரைமேற்கோள்.

(ஆ) பாணராற்றுப்படைக்குச் செய்யுள்.

''வணர்கோட்டிச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ
உணர்வோர் யாரென் னிடும்பை தீர்க்கெனக்
கிளக்கும் பாண! கேளினி நயத்திற்
பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ
ஏர்தரு சுடரி னெதிர்கொண் டாஅங்கு
இலம்படு புலவர் மண்டை விளங்குபுகழ்க்
கொண்டபெருங் கானத்துக் கிழவன்
தண்டா ரகல நோக்கின மலர்ந்தே''

(புறம்—155)

(இ) பொருநராற்றுப்படைக்குச் செய்யுள்:

''அறாஅ யாணர் அகன்றலைப் பேரூர்ச்
சாறுகழி வழிநாட் சோறு நசையுறாது

வேறுபுல முன்னிய விரகறி பொருந!
.......................................
கோடியர் தலைவ! கொண்ட தறிந!
.......................................
போற்றிக் கேண்மதி புகழ்மேம் படுந!
வாடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு
நீடுபசி யொராஅல் வேண்டி னீடின்
றெழுமதி, வாழி, ஏழின் கிழவ!
பழுமர முள்ளிய பறவையின் யானுமவன்
இழுமென் சும்மை யிடனுடை வரைப்பின்
நரையுநர்த் தடையா நன்பெரு வாயில்
இசையேன் புக்கென் னிடும்பை தீர
.......................................
தன்னறி யளவையிற் றரத்தர யானும்
என்னறி யளவையின் வேண்டுவ: முகந்துகொண்
டின்மை தீர வந்தனென்; வென்வேல்
உருவப் பஃறேர் இளையோன் சிறுவன்
கரிகால் வளவன்
தாணிழல் மருங்கி லணுகுபு குறுகித்
தொழுது முன்னிற்கு விராயின்,
.......................................
நன்பல் லூர நாட்டொடு நன்பல்
வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை
வெருவருஞ் செலவின் வெகுளி வேழம்
தரவிடைத் தங்கலோ விலனே."

(பொருநராற்றுப்படை)

(ஈ) இனி விறலியாற்றுப்படைக்குச் செய்யுள் :

"சேயிழை பெறுகுவை, வாணுதல் விறலி
தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை
வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்
பெய்யினும் பெய்யா தாயினு மருவி
கொள்ளுழு வியன்புலத் துழைகா லாக
மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரும்
நீரினு மினிய சாயற்
பாரி வேள்பாற் பாடினிர் செலினே."

(புறம்-105)

**(3) சிறந்த நாளினிற் செற்ற நீக்கிப் பிறந்த நாள் வயிற் பெருமங்கலமும்—பிறந்த வெள்ளணி நன்னாளில் சினமகற்றிச்**

சிறந்த பெருநாள் விழவயரும் பெருமங்கலம் என்னும் வெள்ளணி விழாவும்.

[பெருமங்கலம்—வெள்ளணி என்னும் பிறந்த நாள் விழா. அந்நாளில் வெள்ளையணிதலால் அஃதப்பெயர் பெற்றது. இகழும் பகைவரைக் கறுத்தலும் தவறு செய்தாரை ஒறுத்தலும் வெள்ளணி விழவொடு கொள்ளாத சினமாதலின் அவற்றை விலக்கிச் சிறைவீடு கொடை முதலிய சிறந்தன செய்வதே முறையாத லிதிற் சுட்டப்படுந் துறையாகும்.]

அதற்குச் செய்யுள்:

(அ) ''செய்கை யரிய களவழிப்பா முன்செய்த
பொய்கை யொருவனாற் போந்தரமோ—சைய
மலைச்சிறைதீர் வாட்கண்டன் வெள்ளணிநாள் வாழ்த்திக்
கொலைச்சிறைதீர் வேந்துக் குழாம்.''

நச்-உரைமேற்கோள்

(ஆ) ''பேரிசை நன்னன் பெரும்பெயர் நன்னாள்
சேரி விழவி னார்ப்பெழுத் தாங்கு,''

(மதுரைக்காஞ்சி வரி—618—619)

(4) சிறந்த கீர்த்தி மண்ணு மங்கலமும்—முடிபுனைந்த விழவின் நீராட்டு மங்கலமும்;

[வட நூல்களிலும் இது, ''பட்டாபிசேக உத்சவம்'' எனப் பாராட்டப்படுகிறது.]

இதற்குச் செய்யுள் :-

''மணிமுடி தான்சூடி வழுதியர்தென் கூடல்
அணியா தனமிவர்ந்த வந்நாள்—பணியணியான்
தாளிணைந்து நீராடித் தாள்பணிவார் தார்மன்னர்
வேணவெலா மீந்துவக்கும் வேந்து.''

(5) நடைமிகுத் தேத்திய குடைநிழல் மரபும்-உலகியலொழுக்குயர்த்தும் புகழ்பெற்ற வேந்தனது குளிர்ந்த குடைநிழல் முறைமையும்.

அதற்குச் செய்யுள் :

(அ) ''அறநீர்மை தாங்கி யளப்பரிதாய் வானைப்
புறநீர்போன் முற்றும் பொதியும்—பிறரொவ்வா

மூவேந்த ருள்ளும் முதல்வேந்தன் முத்தமிழ்க்குக்
கோவேந்தன் மாறன் குடை.''

(ஆ) ..........................................................
முரசு முழங்கு தானை மூவருள்ளும்
அரசெனப் படுவது நினதே பெரும!
..........................................................
ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பி னடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய
குடிமறைப் பதுவே, கூர்வேல் வளவ!
(புறம்—35, வரி 4—21)

6. மாணார்ச் சுட்டிய வாண்மங்கலமும்—பகைவர்பால் கொற்றங் கருதிக் கொண்டாடும் வாள்நீராட்டு மங்கல விழாவும்:

அதற்குச் செய்யுள்:-

பார் தாங்குந் தண்குடையான் பாண்டியன்
வான் பற்றலரின்
தார்தாங்கு மார்பிளக்கத் தாக்கிய செந்-நீர்முடையை
நீராட்டி நீக்கிநறு நெய்யணிநன் னாள் விழவைப்
பாராட்டு மாறன் படை.''

6. மன்னெயிலழித்த மண்ணுமங்கலமும்—நீண்டு நிலைத்த பகையரணெறிந்து பாழ்செய்து நீராடும் மற விழவும்;

அதற்குச் செய்யுள் :

(அ) ''கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்.''
(புறம்-15)

(ஆ) ''..........................................செற்றோர்
கடியரண் தொலைத்த கதவுகொண் மருப்பின்
முடியுடைக் கருந்தலை புரட்டு முன்றாள்
உருகிடை யடிய ஓங்கெழில் யானை
வடிமணிப் புரவியொடு வயவர் வீழப்
பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்பத்
தூறிவர் துறுகற் போலப்போர் வேட்டு,

வேறுபல் பூளையொ டுழிஞை சூடி
..........................................
முனைகெடச் சென்று முன்சம முருக்கித்
தலைதவச் சென்று தண்பணை யெடுப்பி,
வெண்பூக் கரும்பொடு செந்நெல் நீடி
மாயிதழ்க் குவளையொடு நெய்தலு மயங்கிக்
கராங் கலித்த கண்ணகன் பொய்கைக்
கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடிச்
செறுவும் வாவியும் மயங்கி நீரற்
றறுகோட் டிரலையொடு மான்பிணை யுகளவும்.
..........................................
பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்துச்
சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி
அழல்வா யோரி அஞ்சுவரக் கதிர்ப்பவும்,
..........................................
வளைவாய்க் கூகை நண்பகற் குழறவும்
அருங்கடி வரைப்பி னூர்கவி னழியப்
பெரும்பாழ் செய்து மமையான்;

(பட்டினப்பாலை, வரி-228—270)

[முன் உழிஞைத் துறையாகச் சுட்டிய ''இகன்மதிற் குடுமி கொண்ட மண்ணுமங்கலம் எயிலை யழியாது கைப்பற்றிய விழவாம்; இப்பாடாண் துறை, பற்றாது பகையரணெறிந்தழித் துப் பாழ் செய்த களியாட்டைக் குறிப்பதால் இது முன்னதின் வேறாதல் வெளிப்படை. இங்கு மங்கலம் மகிழ்கூரும் விழவைக் குறிக்கும், மண்ணு விழவெல்லாம் விழவயர்வார் நீராடித் தொடங்கு மரபு பற்றிய குறிப்பு. எனவே, விழவுகள் மண்ணு மங்கலமெனப் பெறுதலறிக.]

8. பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்—இரவலர் தலை வாயிலை யணுகிப் புகழ்ந்து பரிசில் கேட்கும் பெற்றியும்;

[கடைக் கூட்டு — தலைக்கடை சேர்தல். கடைஇய என்பது கடாவிய என்பதன் செய்யுட் சொல்; கடாவல்—கேட்டல்]

இதற்குச் செய்யுள் :

பயங்கெழு மாமழை பெய்யாது மாறிக்
கயங்களி முளியுங் கோடை யாயினும்
புழற்கா லாம்ப லகலடை நீமுற்
கதிர்க்கோடு நந்தின் சுரிமுக வேற்றை

நாகிள வளையொடு பகல்மணம் புகூஉ
நீர்திகழ் கழனி நாடுகெழு பெருவிறல்
வான்தோய் நீள்குடை வயமான் சென்னி!
சான்றோ ரிருந்த அவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல் போல
வல்லே களைமதி யத்தை, உள்ளிய
விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப்
பொறிப்புண ருடம்பிற் றோன்றியென்
னறிவுகெட நின்ற நல்கூர் மையே''

(புறம்-266)

(9) பெற்ற பின்னரும் பெருவளனேத்தி நடைவயிற்றோன்றும் இருவகை விடையும்—பரிசில் பெற்ற பின்னும் (பெறுமுன் ஏத்தியது போலவே) பெற்றோன் ஈந்தோனை மீக்கூறிப் புகழ்ந்து இரவலன் தானே விடைவேண்டலும் அவனுக்குப் புரவலன் விடைதாலும் ஆகிய உலக வழக்கில் பயின்றுவரு மிருவகை விடைகளும்;

(1) பரிசிலன் விடை வேண்டற்குச் செய்யுள் :-

''.....................................
எல்லையு மிரவு மூன்றின்று மழுங்கி
உயிர்ப்பிடம் பெறாஅ தூண்முனிந் தொருநாட்
செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய
செல்வ! சேறுமெந் தொல்பதிப் பெயர்ந்தென
மெல்லெனக் கிளந்தன மாக, வல்லே
அகறி ரோவெம் ஆயம் விட்டெனச்
சிரறிய வன்போற் செயிர்த்த நோக்கமொடு
துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்
தன்னறி யளவையிற் றரத்தர யானும்
என்னறி யளவையின் வேண்டுவ முகந்துகொண்
டின்மை தீர வந்தனென்.''

(பொருநராற்றுப்படை, வரி 118-129)

இவ்வடிகளில், பரிசிலன் பன்னாள் கரிகாற் புரவலனோடிருந்து, தனதூர் செல்ல விடைகேட்க அவன் பிரிவுக்கு வருந்திப் பின்னும் அவன் வறுமையும் வேட்கையும் தீர ஈந்தனுப்பியது கூறுதலால், இது இரவலன் விடைகேட்குந் துறையாதல் காண்க.

(2) புரவலன் தானே விடைதரற்குச் செய்யுள்:-

''தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற, செந்நாப் புலவீர்!
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாஞ்சில
அரிசி வேண்டினே மாகத் தான்பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே; அன்னதோர்
தேற்றா ஈகையு முளதுகொல்?
போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே.''

(புறம்-140)

(10) அச்சமும் உவகையும் எச்சமின்றி நாளும் புள்ளும் பிறவற்றினிமித்தமும் காலங்கண்ணிய ஓம்படை உளப்பட—நன்னாளும் நல்லகுறி (வாய்ப்புள்) நற்செயல் (விரிச்சி) முதலிய மற்றைய வாய்ப்புக்களும் கொண்டு, தலைவனுக்கு நேரும் தீமைக்கச்சமும் நன்மைக்கு மகிழ்வும் கூர்ந்து கவனக்குறைவின்றி ஆய்ந்து ஏற்புடைய காலத்தை எண்ணிக்கூறும் வாழ்த்தடங்க;

இதற்குச் செய்யுள் :-

''காலனும் காலம் பார்க்கும், பாராது
வேலீண்டி தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே!
திசையிரு நான்கும் உற்கமுற்கவும், பெருமரத்
திலையி னெடுங்கோடு வற்றால் பற்றவும்,
வெங்கதிர்க் கனலி துற்றவும், பிறவும்
அஞ்சுவரத் தகுந புள்ளுக்குர லியம்பவும்,
எயிறு நிலத்து வீழவும், எண்ணெ யாடவும்
களிறுமேல் கொள்ளவும், காழக நீப்பவும்,
வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்,
கனவி னரியன காணா நனவிற்
செருச்செய் முன்ப! நின் வருதிற னோக்கி
மையல் கொண்ட ஏமமி லிருக்கையர்
புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்
கெவ்வங் கரக்கும் பைதல் மாக்களொடு
பெருங்கலக் குற்றன்றால் தானே, காற்றோ

டெரிநிகழ்ந் தன்ன செலவிற்
செருமிகு வளவ! நிற்! சினைஇயோர் நாடே.''

(புறம்—41)

இதில், உற்க முதலியன பகைவருக்குத் தீது சுட்டும் வாய்ப் புள் (உற்பாதம்) அவற்றை நோக்கிப் பகைவர் மேற் கிள்ளி படை யெடுத்துச் செல்ல, அவன் பகைவர் அஞ்சித் தத்தம் புதல்வரை முத்தி மனக் கலக்கத்தை மனைவிமார்க்கு மறைப்பர். அந்நிலை யிற் காற்றுக்கூடிய நெருப்புப்போல் அவன் தகைவாரின்றி விரைந்து சென்று வென்று வீறெய்தப் பகைவர் நாடு பெருங் கலக்குறும் என்று, அவன் வென்றிப் புகழும் அவன் மாற்றார் நாடழிபிரக்கமும் கூறுதலால் இது கொற்றவள்ளைப் பாடாணா யிற்று. ''மண்திணிந்த நிலனும்'' எனும் புறப்பாட்டில்,

''ஐம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றாற் பொறுத்தலும் சூழ்ச்சிய தகலமும்
வலியும் தெறலும் அளியு முடையோய்!
...............................................
பாஅல் புளிப்பினும் பகலிருளினும்,
...............................................
நடுக்கின்றி நிலியரோ வத்தை, அடுக்கத்து
...............................................
பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே''

(புறம்-2)

என வருவது பாடாண் திணையில் ஓம்படையுள்ளிட்ட வாழ்த்துத் துறையாகும்.

ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பிற் கால மூன்றொடு கண்ணியவருமே—உலகியலில் வரும் ஒழுக்க நோக்கால் முக்கால முந்தழுவிப் பாடாண் துறைகள் வரும்.

குறிப்பு: இந்நூற்பாவில் வரும் உம்மைகள் எண் குறிப்பன. ''பக்கம்'' என்பது இசை நிரப்ப நின்றது. ஈற்றேகாரம் அசை.

இதிற் கூறப்படுந் துறைகள் எல்லாம் பல திறப்பட்ட புறத் திணைகளுக்குரிய வெனினும், அவை அவ்வத்திணைப் பொருளோடமையாது தலைவன் புகழ் பரவல்களாயும் வருதலால் பாடாண்துறைகளாய் முடிகின்றன. அதனாலவை முன் பிறதிணைகளோடு கூறினும் ஆங்குவேறு பெருணோக்குடமையின் இங்கவை கூறியன கூறும் குற்றமாகாமை தேறப்படும்.

**சிவலிங்கனார்**

இச்சூத்திரம் பல திறப்பட்ட பாடாண் துறைகள் கூறுகின்றது. அவை அரசர் குறுநில மன்னர் அவர் போலும் செல்வச் சிறப்புடைய வள்ளல் ஆகியோர்க்கும் உரியன.

துயிலெடை நிலை—இக்காலத்தில் திருப்பள்ளியெழுச்சி என்ற பெயரில் அரசர் கடவுளர்களுக்குப் பாடப்படுகின்றன.

ஆற்றுப்படை கொடை வளம் கொண்ட யாவர்க்கும் உரியது.

பிறந்த நாட்பெருமங்கலமும் யாவர்க்கும் உரியது.

சிறந்த கீர்த்தி மண்ணுமங்கலம் என்பது அரசரும் குறுநில மன்னரும் முடிபுனைந்த நாளை ஆண்டு தோறும் நீராடிக் கொண்டாவது பற்றியது.

குடை மங்கலம் என்பது அரசரது வெண்கொற்றக்குடையைப் பொதுவாக வெற்றியும் காவலும் பற்றிக் குடையைப் புகழ்வதன் மூலம் அரசனைப் புகழ்வது.

அவ்வாறே போரில்லையாகவும் வாளைப் புகழ்வதன் மூலம் அரசனைப் புகழ்வது.

அரசன் பகைவர் மதிலை அழித்த நாளை ஆண்டுதோறும் நீராடிக் கொண்டாடுவது எயிலழித்த மண்ணுமங்கலமாம்.

பரிசில் கடாவுதலும், பரிசில் பெற்றவுடன் பரிசில் பெற்றவன் கூறுதலும் பின் அவன் மீளும்போது கூறுதலும் ஆகியவை யாவர்க்கும் உரியன.

போரில்லாக் காலங்களில் நாள் புள் (உன்னமரம்) முதலியவற்றின் நிலை கண்டு அரசனுக்கு நாட்டுக்கு வரலாம் நன்மை தீமை கூறுதல் நிமித்தம் கூறலாம். அப்படிக் கூறி அரசனுக்குத் தீங்கு நீங்கி நன்மையுண்டாக எனப் பாதுகாவல் கூறுதல், ஓம்படையெனப்படும்.

இக்கூறப்பட்டன யாவும் போர்த்திறங்கருதாது ஒரு புலவன் அரசனை-வள்ளலைப் பாடுவன.

தொல்காப்பியப் பொருளதிகாரப் புறத்திணையியல் உரைவளம் ஒருவாறு முற்றும்.

□□

# சூத்திர முதற் குறிப்பதிகாரதி

(எண் — பக்க எண்)

# சொல்லகராதி

**எண் — பாடல் எண்**

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி அஞ்சல், சென்னை-600 113

## புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| Silver Jubilee Special Lectures | 60 | 00 |
| Collected Papers of Thaninayagam Adigal | 100 | 00 |
| திருமுறை இலக்கியம் | 50 | 00 |
| அழகியல் சிந்தனைகள் | 30 | 00 |
| இலக்கியத்தின் நோக்கமும் பயனும் தொகுதி—1 | 65 | 00 |
| இலக்கியத்தின் நோக்கமும் பயனும் தொகுதி—2 | 60 | 00 |
| பெ. நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் | 75 | 00 |
| முத்தாரம்மன் கதை | 85 | 00 |
| சந்திரபதன் கதை | 40 | 00 |
| கன்னிவாடி நரசிங்க நாயக்கர் வளமடல் | 20 | 00 |
| கருணை அம்மன் அந்தாதி | 22 | 00 |
| ஒப்பிலக்கியம் : கொள்கைகளும் செயல்முறைகளும் | 15 | 00 |
| விடுதலைக்கு முன் தமிழ் நாவல்களில் பெண்கள் | 30 | 00 |
| தமிழர் காசு இயல் | 45 | 00 |
| தமிழ் நாடக மலர் | 60 | 00 |
| ஆய்வுச் சிக்கல்களும் தீர்வுகளும் | 85 | 00 |
| Mysticism of Love in Saiva Tirumurais | 50 | 00 |
| எண்பத்து மூன்றில் தமிழ்-பகுதி—2 | 30 | 00 |
| தொல்காப்பியம்-பொருளதிகாரம்-களவியல் | 85 | 00 |
| The Contributions of the Tamils to Indian Culture Vol-IV-Religion & Philosophy | 80 | 00 |
| Val. III-Socio - Cultural Aspects | 90 | 00 |
| Vol. II - Art & Architecture | 30 | 00 |
| Vol. I- Language & Literature | 18 | 00 |
| எண்பத்து மூன்றில் தமிழ்-பகுதி—1 | 47 | 00 |
| சிவகிரி குமர சதகம் | 39 | 00 |
| புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை | 27 | 00 |
| தேரையர் அந்தாதி | 33 | 00 |
| குசலவர் சுவாமி கதை | 36 | 00 |
| குணவாகடம் | 40 | 00 |
| தோட்டுக்காரி கதை | 28 | 00 |
| சங்கத் தமிழரின் மனிதநேய மணி நெறிகள் | 24 | 09 |